ஸ்ரீமதுத்தராதிமடாதீஶ

ஸ்ரீ ஸத்யத்யானதீர்த்த ஸ்ரீபாதங்களவர்களால்

இயற்றப்பட்ட

கீதா ஸாரஸங்க்ரஹ-பதார்த்த-தாத்பர்ய-விசாரங்களுடன் கூடிய

# ஸ்ரீ பகவத்கீதா





திருச்சானூர்

ஸ்ரீமன் மத்வ ஸித்தாந்தாபிவ்ருத்திகாரிணீ ஸபையாரால்

ப்ரசுரிக்கப்பட்டது.

1937.

ஶ்ரீ

ஶ்ரீமத் திக்விஜய ராமோ விஜயதே.

# ஶ்ரீ பகவத்கீதா

## கீதாஸாரஸங்க்ரஹ.

ப்ரதிபதார்த்த-தாத்பர்ய-விசாரங்களுடன்

கூடியது.



---

ஶ்ரீமத் வைதிக வைஷ்ணவ ஸித்தாந்த ப்ரதிஷ்டாபனசார்ய

ஶ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி குணகணாலங்க்ருத

ஶ்ரீமதுத்தராதிமடாதீஶ

ஶ்ரீமத் ஸத்யத்யானதீர்த்த ஶ்ரீ பாதங்களவர்களால்

இயற்றப்பட்டு,

ஸத்யானந்தம் கிருஷ்ணசார்யரால்

மொழிபெயர்த்து பதிப்பிக்கப்பெற்றது.

---

பத்மஸரோவரம் (திருச்சானூர்)

ஶ்ரீமன் மத்வ ஸித்தாந்தாபிவ்ருத்திகாரிணீ ஸபையாரால்

ப்ரசுரிக்கப்பட்டது.

1937

श्री दिग्विजयरामोविजयते.

स्वामिन्नद्य कुतो नु ते पशुपते म्लानं मुखांभोरुहं
कान्ते संयमनीपुरे किल महन्न्यायालये मायिनः ।
सत्यध्यानयमीन्द्रसत्कृतकृतौ चक्रे तमोगान्यमो
मच्छिष्यानिति वागभूद्धि शिवयोस्तं ध्यानतीर्थं नुमः ॥



பார்வதி:–"பசுபதிகளான ஸ்வாமி! ஏன் இன்று தங்களிட முககமலம் வாடி இருக்கின்றது?"

பரமேஸ்வரர்:–"கண்மணியே! ஸம்யமனீபுரம் ஹைகோர்ட்டில் ஸ்ரீஸ்ரீமத் ஸத்யத்யான தீர்த்தரவர்களால் தாக்கல் செய்யப்பட்ட ஸிவில் ஸூட்டில் என் சீடர்களை எல்லாம் தமஸ்ஸூக்குச் செல்லும்படிக்கு யமதர்மராஜர் நிர்ணயம் செய்திருக்கிறபடியால் விசாரப்படுகிறேன்" என்கிற பார்வதி பரமேஸ்வரர்களிட ஸம்வாதத்திற்கு விஷயரான ஸ்ரீஸ்ரீ ஸத்ய த்யான தீர்த்தரவர்களை வணங்குகிறோம்.

श्रीमुष्णं समवाप्य भूरिविभवैर्गत्वा च देवालयं
नत्वा यज्ञवराहमूर्तिममलां श्रीमूलमूर्तिं पुनः ।

Friday
17th July 1931.



आनीय स्वमठं यथाक्रममम् देवं वराहं तथा
सत्यध्यानयतिः प्रपूजयति वै श्रीमूलरामं सुधीः ॥

शके १८५३ प्रजोत्पत्ति,
निजआषाढ शु. २ शुक्रवार.

श्रीः

श्रीमद्दिग्विजयरामो विजयते ।

# முன்னுரை.

---

இந்திரா வதனாம்போ(ஹோ)ஜ ராஜஹம்ஸாய விஷ்ணவே |
அமந்தானந்த(ஃ) ஸந்தோ(ஹோ)ஹ ஸுந்தராக்ருதயே நம: ||

அது:க்க மிதாத் ஸர்வம் ஜீவா ஏவ து து:க்கின: |
தேஷாம் து:க்கப்ரஹாணாய ஶ்ருதிரேஷா ப்ரவர்த்ததே ||

என்றவாறு உலகிலுள்ள ஜீவர்கள், ஜடம், ப்ரஹ்மமென்னும் மூவ்வகை வஸ்துக்களில் ஜடமும், ப்ரஹ்மமும் து:க்கமற்றவைகளாயும், இவைகளை விட அத்யந்த பின்னர்களான ஜீவர்கள் மாத்திரம் அனாதியான அவித்யா காம கர்மாதிகளால் சூழப்பட்டு அதின் பொருட்டான து:க்கமுடையவர்களாயுமிருக்கின்றனர். அத்தகைய ஜீவர்கள் மேற்படி து:க்கத்தைப் போக்கிக்கொண்டு மேலான ஆனந்தானுபவரூபமான மோக்ஷத்தை யடைவதற்குக் காரணமான ஞான ஸாதனங்களை அவர்களுக்கு அறிவிப்பதற்காகவே ஸ்ரீ விஷ்ணுவின் ஹயக்ரீவாதி ரூபங்களினால் ஸ்ரீ சதுர்முக ப்ரஹ்மாவை முன்னிட்டு ஸகல வேதங்களும் வெளியாயிருக்கின்றன.

காலதோஷத்தினாலும், கௌதமரிட ஶாபாதிகளினாலும் நேர்ந்த அஞ்ஞானத்தினால் அவ்வேதங்களுக்கு ஸரியான அர்த்தமாகாமல் கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கும் ஸஜ்ஜனர்களில் கிருபையுள்ள * ப்ரஹ்மாதிகளினால் ப்ரார்த்திக்கப்பட்ட ஸ்ரீநாராயணன் பராஶரரால் ஸத்யவதியிடத்தில வேதவ்யாஸராக அவதரித்து, அதிகாரிகளுக்குச் சரியான ஞான ஸாதனங்களை அறிவிப்பதற்காக வேதத்தை ருகாதிசாகோப சாகைகளாகப்

---

* லோகேஶா ப்ரஹ்மருத்ராதயா: ஸம்ஸாரே க்லேஶினம் ஜனம் | வேதார்த்தாஜ்ஞமதீகார வர்ஜிதம் ச ஸ்த்ரியாதிகம் | அவேக்ஷ்ய ப்ரார்த்த

பிறித்து, அவ் வேதார்த்தங்களை நிர்ணயிப்பதற்காக ஸ்ரீமத் ப்ரஹ்மஸூத்ரங்களையும் இயற்றினர். மற்றும் * அவ்வேதாதிகளுக்குச் சரியான அர்த்தங்களை அறிவிக்கத்தக்கதும், வேதத்தில் அதிகாரமற்ற † ஸ்த்ரீ ஶூத்ராதிகளுக்கும் ஞானத்தை விளைவிக்கத்தக்கதும், வேதத்திற் கூறியதும் வேதத்திற் கூறுமல் ஸ்ரீ வேதவியாஸரிட புத்தியில் மாத்திரம் தோன்றியதுமான அர்த்தங்களுடன் கூடியதும், ‡ பத்து அர்த்தங்களுக்குக் குறையாத அர்த்தங்களையுடையதும், வேதத்தைவிட மேலானதுமான ஸ்ரீமன் மஹா பாரதத்தையும் (அநேக புராணங்களையும்) இயற்றியிருக்கின்றனர்.

---

யாமாஸு: தேவேஶம் புருஷோத்தமம் | தத: ப்ரஸன்ஞே பகவான் வ்யாஸோ பூ(ஷு)த்வா ச தேன ச | அன்யாவதார ரூபைஶ்ச வேதானுக் தார்த்த பூ(ஷு)ஷிதம் | கேவலேனுத்மபோ(வோ)தே(யே)ன த்(ரு)ருஷ் டம் வேதார்த்தஸம்யுதம் | வேதாதபி பரம் சக்ரே பஞ்சமம் வேதமுத்தமம் | பாரதம் பஞ்சராத்ரம் ச மூலராமாயணம் ததா(ஶா) | புராணம் பாகவதம் சேதி ஸம்பின்ன: ஶாஸ்த்ர புங்கவ || இதி நாராயணஷ்டாக்ஷரகல்பே || (கீதா பாஷ்யம்).

* இதிஹாஸபுராணுப்(ஷீ)யாம் வேதம் ஸமுபப்ரும்ஹயேத் | (கீ. பாஷ்யம்).

சங்கராசார்யரும் தம்மிட கீதா பாஷ்யம் 15-வது அத்தியாயம் 20-வது ஶ்லோக வ்யாக்யானத்தில ‘ இப்பதினைந்தாவது அத்தியாயத்தில் ஸகல கீதார்த்தமும் சுருக்கமாய் சொல்லப்பட்டிருப்பது மாத்திரமேயல்லாமல் ஸகல வேதார்த்தங்களும் இந்த அத்தியாயத்தில் முடிவு பெறுகிறது’ என்று எழுதியிருக்கிருர். இதின் மூலத்தை இப்புஸ்தகத்தின் 400-வது பக்கத்தின் குறிப்பில் காணவும்.

† ஸ்த்ரீ ஶூத்ர த்விஜ பந்தூனும் த்ரயீ ந ஶ்ருதிகோசரா | இதி பாரதமாக்யானம் க்ருபயா முனினு க்ருதம் || (ஸ்ரீ பாகவதம்)

‡ சஶாவாரார்த்தம் ஸர்வத்ர கேவலம் விஷ்ணுபோத(ய)கம் | பரோக்ஷார்த்தம் து ஸர்வத்ர வேதாதப்யுத்தமம் து யத் இதிஸ்காந்தே (கீ. பாஷ்யம்)

யஸ்மின் தஶார்த்தா: ஸர்வத்ர ந ஜ்ஞேயா: ஸர்வஜந்துபி: | இதி நாரதீயே (கீ. பாஷ்யம்)

அத்தகைய ஸ்ரீ மஹா பாரதமென்னும் பாரிஜாதத்தில் மகரந்தத்தைப்போன்ற ஸ்ரீ மஹா பாரதத்திலும் * மேலான ஸ்ரீ கிருஷ்ணார்ஜுன ஸம்வாத ரூபமான ஸ்ரீ பகவத் கீதையையும் சேர்த்திருக்கின்றனர்.

இந்த ஸ்ரீமத் கீதையில் ஸ்ரீ கிருஷ்ணன் இந்த்ராவதாரனான அர்ஜுனனைக் காரணமாக வைத்துக்கொண்டு உலகிலுள்ள து:க்கத்துடன் கூடியுள்ள ஸாத்விக ஜீவர்கள் தமக்கனாதியாயுள்ள து:க்கத்தைப் போக்கடித்துக்கொண்டு தம்மிட மேலான ஆனந்தத்தை அடைவதற்குத் தகுந்த உபாயங்களான நிஜமான † வர்ணாச்ரம தர்மங்களையும் "நித்யோ நித்யானாம் சேதனச்சேதனானாம் ஏகோ பஹூனாம் யோ விததா(தா)தி காமான் | தமாத்மஸ்தம் யேனுபச்யந்தி தீரா: தேஷாம் ஸுகம் சாச்வதம் நேதரேஷாம்" என்கிற (ச்வேதாச்வதரம் 6-13; கடோபனிஷத் 2-13)ச்ருதியின் வ்யாக்யானரூபமான ஸ்ரீஸ்ரீவ்யாஸராஜஸ்வாமிகளவர்களால் இயற்றப்பட்ட "ஸ்ரீமன் மத்வமதே ஹரி: பரதர: ஸத்யம் ஜகத் தத்வதோ பே(ஹ)தோ(ஷா) ஜீவக(ம)ணா ஹரேரனுசரா நீசோச்ச பா(வா)வங்கதா: | முக்திர் நைஜ ஸுகானுபூதிரமலா பக்திச்ச தத்ஸாதனம் ஹ்யக்ஷாதி த்ரிதயம் ப்ரமாணமகிலாம்னாயைக வேத்யோ ஹரி:" என்கிற ச்லோகத்தில் சொல்லப்பட்டிருக்கும் ‡ விஷ்ணு ஸர்வோத்தமன், $ ஜகத் ஸத்யம், ¶ நிஜமாக ஜீவப்ரஹ்மாக்களுக்கு பேத

---

* பாரதம் ஸர்வ சாஸ்த்ரேஷு பாரதே கீதிகா வரா | மஹா கௌர்மே (கீ. பாஷ்யம்)

சாஸ்த்ரேஷு பாரதம் ஸாரம் தத்ர நாம ஸஹஸ்ரகம் | வைஷ்ணவம் க்ருஷ்ண கீதா ச தத் ஜ்ஞானான் முச்யதேஞ்ஜஸா || இதி ப்ரஹ்மாண்டே (கீ. தாத்பர்யம்)

† ப்ராஹ்மணா: க்ஷத்ரிய விசாம் சூத்ராணாம் ச பரந்தப | கர்மாணி ப்ரவிபக்தானி ஸ்வபா(ஹா)வ ப்ரப(ஐ)வைர்குணை: || (18-41) ஸ்வ கர்மணா தமப்(ஹ்)யர்ச்ய ஸித்திம் விந்ததி மானவ: | (18-46).

‡ ந த்வத் ஸமோஸ்த்யப்(ஹ்)தி(யி)க: குதோன்ய: (11-43).

$ ந த்வேவாஹம் ஜாது நாஸம் ந த்வம் நேமே ஜனாதிபா: | ந சைவ ந பவிஷ்யாம: ஸர்வே வயமத: பரம் | (2-12), அவிநாசி து தத் வித்தி யேன ஸர்வமிதம் ததம் (2-17), அஸத்ய மப்ரதிஷ்டந்தே (16-8).

¶ உத்தம: புருஷஸ்த்வன்ய:; யோலோகத்ரயமாவிச்ய (15-17).

முண்டு, * ஜீவர்கள் பரமாத்மாவின் சேவகர்கள், † ஜீவர்கள் தாரதம்யமுடையவர்கள், ‡ ஸ்வரூபாநந்தத்தை யடைதலே மோக்ஷம், $ மோக்ஷத்திற்கு பக்தியே ஸாதனம், ¶ ப்ரத்யக்ஷம் அனுமானம், ஆகமம் இவைகளே ப்ரமாணங்கள், || ஸ்ரீவிஷ்ணு ஸர்வ வேதங்களினுலேயே அறியப்படுபவன் என்கிற ப்ரமேயங் களையும் மற்றும், ** ஸ்ரீ கிருஷ்ணனே பரப்ரஹ்மம், †† அந்த ப்ரஹ்மம் ப்ராக்ருதமான ஸத்வரஜஸ்தமோ குணங்களை யற்றது, ஸ்ருஷ்டி கர்த்ருத்வாதி அனந்த கல்யாண குணங்களுடன் கூடியது, ‡‡ ஜீவர்கள் மூவ்வகையாயுளர் என்கிற ப்ரமேயங்களை யும் உறுதியாய்ச் சொல்லியிருப்பதேயன்றி, அவைகளுக்கு விருத்தமான ப்ரமேயங்களை யறிவிக்கும் துர்மதங்களைக் கண்டித்து மிருக்கின்றனன். மற்றும் இந்த பகவத்கீதை உலகமெங்கும் பாவி ஸகல ஜனங்களாலும் கொண்டாடப்பட்டு வருகிறது.

இத்தகைய வெகு சிறப்பான ஸ்ரீ பகவத்கீதைக்கு 'க்ருபணா: பலஹேதவ:' (2-49) 'யஶ்ஶாஸ்த்ர விதிமுத்ஸ்ருஜ்ய' (16-23) 'அஸத்யமப்ரதிஷ்டம் தே' (16-8) 'ஈஶ்வரோஹமஹம் போகீ'

---

* ஸர்வஸ்ய சாஹம் ஹ்ருதி ஸன்னிவிஷ்ட: (15-15).

† யே ऽபி ஸ்யு: பாபயோனய: | ஸ்த்ரியோ வைஶ்யா ஸ்ததா(யா) ஶூத்ரா: தே ऽபி யாந்தி பராம் கதிம் | கிம் புன: ப்ராஹ்மணா: புண்யா: ப(ஃ)க்தா ராஜர்ஷய: ததா(யா) (9-32, 33).

‡ அத்யந்தம் ஸுக(வ)மஶ்னுதே (6-28).

$ பக்திம் மயி பராம் க்ருத்வா மாமேவேஷ்யத்ய ஸம்ஶய: | (18-68).

¶ தஸ்மாத் ஶாஸ்த்ரம் ப்ரமாணம் தே (16-24).

|| வேதைஶ்ச ஸர்வைரஹமேவ வேத்ய: (15-15).

** பரம் ப்ரஹ்ம பரம் தா(யா)ம (10-12).

†† நிர்குணம் குணபோக்த்ரு ச (13-15), குணா: ஸத்வரஜஸ் தமாம்ஸி தை: வர்ஜிதம் நிர்குணம் (ஶங்கர பாஷ்யம்), மாமேப்(ஶ்)ய: | பரமவ்யயம் (7-13), அஹம் ஸர்வஸ்ய ப்ரப(ஃ)வ: (10-8), மத்த: ஸ்ம்ருதிர் ஜ்ஞானமபோஹனம் ச (15-15).

‡‡ த்ரிவிதா(யா) ப(ஃ)வதிஶ்ரத்தா தே(ஷே)ஹினம் ஸா ஸ்வ பா(ஃ)வஜா | ஸாத்விகீ ராஜஸீ சைவ தாமஸீ சேதி தாம் ஶ்ருணு (17-2).

(16-14) இது முதலிய வாக்யங்களினால் நிந்திக்கப்பட்டுள்ள காம்யகர்மங்களைச் செய்பவர்களும், ஶாஸ்த்ர முறைகளை விட்டவர்களும், ஜகத்து மித்யை (முக்காலத்திலுமில்லாதது) என்றும், நானே ஈஶ்வரனென்றும் சொல்லி கடும் தண்டனைக்கு ஆளாகவுமிருக்கும் சிலர் பலவிதமாக தம் மனதிற்குத் தோன்றிய, ஸ்ரீ கிருஷ்ணனிட அபிப்ராயத்திற்கு விருத்தமான தம் தம் மதத்தை கீதார்த்தமென்று உலகமெங்கும் பரவச் செய்தனர்.

பிறகு ஸ்ரீமதானந்ததீர்த்தர், ஸ்ரீ ஜயதீர்த்தர், ஸ்ரீராகவேந்த்ர தீர்த்தர் முதலிய மஹான்கள் ஸ்ரீ கீதா பாஷ்யம், கீதா தாத்பர்யம், ப்ரமேய தீபிகா, கீதா விவ்ருதி முதலிய அநேக நூல்களை ஸம்ஸ்க்ருதத்தில் இயற்றி மேற்படி துர்மதங்களனைத்தையும் கண்டித்திருக்கின்றனர். ஆயினும் காலத்தின் கொடுமையினால் ஸம்ஸ்க்ருதத்தில் அதிக பயிற்சியற்று, அந்நூல்களினால் மேற்படி கீதையின் ஸரியான அர்த்தத்தை அறிந்துகொள்ளும் திறமையற்ற ஸஜ்ஜனங்களுக்கு கீதையின் ஸரியான அர்த்தத்தை அறிவித்து நற்கதியையடைவிப்பதற்காக திருச்சானூர் ஸ்ரீமன் மத்வ ஸித்தாந்தாபிவ்ருத்திகாரிணீ ஸபையோர்—"அனன்ய ப்ரோக்தே கதிரத்ர நாஸ்தி ப்ரோக்தான் யேனைவ ஸுஜ்ஞானாய ப்ரேஷ்ட" (காடகம்) 'அனன்யேன = அபேதஜ்ஞானினா' (ஶாங்கர பாஷ்யம்) அபேதஞானிகளின் உபதேஶாதிகளினால் மோக்ஷஸாதனமான ஞானமுண்டாகாது, பேதஞானிகளின் உபதேசாதிகளினாலேயே அத்தகைய ஞானமடையக்கூடுமென்னும் காடகோபநிஷத்தின் உத்திரவையனுஸரித்து தற்காலம் ஸம்யமனீபுரம் ஹைகோர்ட் வேதாந்த விசாரணை ஸிவில் ஸுட் (தமிழ், தெலுங்கு, கன்னட பாஷைகளில்), கீதாவிசாரம் (கன்னட பாஷையில்), அத்வைதிகபோலசபேடிகா, அத்வைதிப்ராந்தி ப்ரகாஶம் (ஸம்ஸ்க்ருதத்தில்) முதலிய பல நூல்களை இயற்றி, தாம் வைஷ்ணவ ஸித்தாந்த ப்ரதிஷ்டாபனாதிகாரத்தைப் பெற்ற விரோதிக்ருத் வருஷம் புஷ்ய பஹுள தசமி (13-1-1912) முதல் ஆஸேது ஹிமகிரி இரண்டு தடவை பூப்ரதிக்ஷிணம்செய்து ஆங்காங்கு ஸபைகூட்டி துர்வாதங்களைக்கண்டித்து 'ஸ்ரீ நாராயணன் நிர்குணனல்ல—ஸர்வோத்தமத்வ ஸர்வஜ்ஞத்வாதி அனந்தகல்யாணகுண பூர்ணன்; ஜீவபர

மாத்மாக்களுக்கு ஐக்கியமில்லை—பேதமே, ப்ரபஞ்சம் மித்யை யல்ல—ஸத்யமே என்று அநேக ச்ருதி ஸ்ம்ருதி ப்ரமாணங்களி னால் கர்ஜித்துக்கொண்டே தம் சிடர்களை ஸன்மார்க்கத்தில் நிலை நிறுத்திக்கொண்டிருக்கும் பேதஜ்ஞானிகளில் சிறந்தவரான ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யவர்யத்வாத்யனந்த குண கணாலங்க்ருதரான ஸ்ரீ ஸ்ரீமத் ஸத்ய த்யானதீர்த்தரென்னும் * நரசிங்கத்தை வேண்டிக்கொண்டனர்.

அதற்கு அம்மஹனீயர் ஸ்ரீ கீதாஸாரஸங்க்ரஹ—ப்ரதி பதார்த்த—தாத்பர்ய—விசாரங்களுடன் கூடிய ஸ்ரீ பகவத் கீதா நூலை இயற்றி ஷை ஸபையோருக்கு அளித்தனர். ஷை ஸபையோர் அதை பலபாஷைகளிலும் மொழிபெயர்ப்பித்து வெளியிட்டு ஸஜ்ஜனர்களுக்கு விசேஷமாய் நன்மை செய்திருக் கின்றனர். மற்றும் தமிழ் நாட்டிலுள்ள இதர பாஷைகளில் பயற்சியற்ற ஜனங்களிட உபயோகத்திற்காக தமிழ் பாஷையில் மொழிபெயர்ப்பதற்கு எனக்கு அனுக்ரஹபூர்வகமாய் உத்தர வளித்ததின்பேரில் ஸ்ரீஸ்ரீகளின் அருளால் என்னறிவிற்கேற்ற வாறு † மொழிபெயர்த்து ஸ்ரீஸ்ரீகளிட சரண ஸரோஜ ஸன்னி தானங்களில் ஸமர்ப்பித்துக்கொண்டிருக்கிறேன்.

இப்புத்தககத்தில் ஸம்ஸ்க்ருத ச்லோகங்களை எழுதி அவை களுக்கு பதங்களைப்பிரித்துக்காட்டி ப்ரதிபதத்திற்கும் அர்த்தமும் ஆவசியகமான இடத்தில் கருத்தும் எழுதி, பிறரால் கீதாசார்யரின் அபிப்ராயத்திற்கு விருத்தமாய் அர்த்தம் செய்யப்பட்டிருக்கு

* இவரிட மகிமைகளின் சுருக்கத்தை 'த்வைத விஜய துந்துபி' என்னும் புத்தகத்தில் பார்க்கவும்.

† மொழி பெயர்ப்பு விஷயத்தில்—மதராஸ் ஹைகோர்ட் டிரான்ஸ் லேடர்ஸ் சூபரிண்டெண்டெண்ட் அவர்கள் அடியில் கண்டவாறு எழுது கிறார் :—

"I have gone through the Tamil translation of the "Civil Suit" a treatise in Kanarese by His Holiness Sri Satyadhyana Thirtha Sripadangalavaru, Peetadhipati of Sri Uttaradi Mutt. I am glad to say that the Tamil translation rendered by Mr. Satyananda Krishnachar is done in good and intelligible language with due care and attention."

18-8-'36. (Sd.) *S. Krishnamacharya.*

மிடங்களில் விசாரம் செய்து அவாளிட ஸ்வவசன விரோதாதி தோஷங்களையும் எடுத்துக் காட்டி அவ்விருத்தார்த்தங்களைக் கண்டித்துமிருக்கின்றனர்.

இதில் பதங்களுக்கு அர்த்தம் எழுதுவதில் ஸம்ஸ்க்ருதத்திலேயே தனியாய் படிப்பதற்கும், ஸம்ஸ்கிருதத்தை விட்டு தமிழில் மாத்திரம் தனியாய் படிப்பதற்கும் அனுகூலமாயிருப்பதற்காக இரண்டையும் வெவ்வேறு வரிசைகளாக எழுதப்பட்டிருக்கின்றன. பெண்டுகளுக்கும் அதிக படிப்பற்றவர்களுக்கும் எளிதில் தெரிவதற்காக சாதாரணமாய் வழக்கத்திலுள்ள பதங்களையே உபயோகித்து எளிய நடையிலேயே எழுதப் பட்டிருக்கிறது.

தவிர இத்தமிழ் பாஷையில் க, ச, ட, த, ப, வர்க்கங்களில் ஒவ்வொரு உச்சரிப்பே இருப்பதினால் இதர பாஷையின் வார்த்தைகளின் நான்கு உச்சரிப்புகளைக்காட்ட முடியவில்லை. எப்படி எனின் :—அத:[1] = ஆகையால், அத[2] = பிறகு, அத:[3] = இது, அத:[4] = கீழ், இவ்வர்த்தங்களையுடைய நான்கு பதங்களிலுள்ள தவர்க்கத்தின் நான்கு உச்சரிப்புகளுக்கும் ஒரே எழுத்தையே உபயோகிக்க வேண்டியிருப்பதினால் ஸரியாக உச்சரிக்க முடியாமல் வேருவிதமாய் உச்சரிப்பதினால் வேறு அர்த்தமாய் விடுகிறது. அத்தகைய இடங்களில் அவ்வெழுத்துக்குப் பக்கத்தில் ஸரியான உச்சரிப்பை அறிவிக்கக்கூடிய கிரந்தாக்ஷரத்தை ( ) இவ்வடையாளத்தின் மத்தியில் எழுதப்பட்டிருக்கிறது. கிரந்தாக்ஷரப்பயிற்சி யற்றவர்கள் அதை அறிந்துகொள்வதற்காக வேண்டுமான அக்ஷரங்களை தமிழ் அக்ஷரங்களுடன் இப்புத்தகத்தின் ஆரம்பத்தில் காட்டப்பட்டுமிருக்கிறது. அதின் ஸகாயத்தினால் வாசகர்கள் ஸரியான உச்சரிப்புகளை அறிந்து கொள்ளக்கூடும்.

யாராகிலும் இந்த கீதையை நன்ருய் ஆருய்ந்து படிப்பாரேயாகில் அது ஸ்ரீமதானந்த தீர்த்தரால் (மத்வாசார்யரால்) ஸ்தாபிக்கப்பட்ட மதத்தையே (த்வைத மதத்தையே) தாங்கியிருக்கிறதென்றும், இதர அத்வைதாதி மதங்களுக்காதாரமாகிறதில்லை

என்றும் அவர்களுக்குத் தெரியாமற் போகாதென்றும் உறுதியாய்ச் சொல்லக்கூடும். தற்காலத்திய மேனாட்டு வேதாந்த பரிசோதகர்களும் இந்த கீதை த்வைதத்தையே சொல்லுகிறதென்றும் அத்வைதாதி மதங்களுக்காதாரமாவதில்லை என்றும் அவரிட நூல்களில் கூறியுமிருக்கின்றனர். அவைகளில் சிலவற்றை வாசகர்களின் பார்வைக்காக இங்கு காட்டப்பட்டிருக்கின்றன.

ஆக்ஸ்பர்ட் விஸ்வவித்யாலயத்தில் ஸம்ஸ்க்ருத மஹாமஹோபாத்யாய பதவியை யடைந்திருக்கும் ம்யாக்டோனெல் என்பவர்— *"சங்கராசார்யர் அத்வைத தத்வத்தின் அல்லது ஐக்யவாதத்தின் ப்ரதிபாதகரில் ப்ரதானராவர். கீதாபாஷ்யமென்னும் அவரிட கீதாவ்யாக்யானம் ஓர் சுதந்திரமான தர்மம் மற்றும் தத்வமீமாம்ஸா க்ரந்தமேயன்றி ஸரியான வ்யாக்யானமென்று கூறப்படுவதில்லை. அவர் கீதையினால் தம்மிட ஸ்வந்தமான தத்வங்களுக்கு அனுகூலமாகும்படிக்கு ஸம்மதியைக் காட்டுவதற்காக முயலுகிறார்" என்றும்—

(கீதோபன்யாஸம் பாகம்-1, பக்கம் 181)

† W. S. ஊர்க்ஹார்ட் என்பவர்— "கீதையைப்போன்ற கிரந்தம் ஸஹஜமாகவும் த்வைதரீதியில் தத்வங்களை ப்ரதிபாதிப்பதற்கு உத்தேஜனத்தைக் கொடுக்கிறது" என்றும்—

(கீதோபன்யாஸம் பாகம்-1, பக்கம் 182)

---

* Sankara......was the principal exponent of the Adwaita doctrine or strict Monism.......His Gita Bhashya or commentary on the Bhagavadgita is rather an independent religio-Philosophic treatise than a commentary in the strict sense. From the Gita, he tries to adduce proofs for his own doctrine......*India's Past* by A. A. Macdonell, Emeritus Professor of Sanskrit in the University of Oxford.

† "Such a work as the Gita would naturally give encouragement to dualistic tendencies" P. 44. *The Vedanta and Modern Thought* by W. S. Urquhart, M. A., D. Litt.

"கீதையில் ஸ்ரீ கிருஷ்ணனுக்கு விஷ்ணுதாதாத்ம்யம் (விஷ்ணுவுடன் அபேதம்) நிரூபிக்கப்பட்டிருக்கிறது அவ்வளவே யல்ல. இந்த விஷ்ணுவுக்கு உபனிஷத் ப்ரதிபாத்யமான நிர்குண ப்ரஹ்மதாதாத்ம்யமும் நிரூபிக்கப்பட்டிருக்கிறது. இவ்விதமாக அடையப்பட்டவாறு வைசித்ரயங்களில் நாம் எதை விசாரித்த போதிலும் விஷ்ணு உபனிஷத் ப்ரதிபாத்யமான ப்ரஹ்ம தாதாத்ம்யத்தினின்றும் ப்ராப்தமான ஸர்வோத்தமத்வத்தையே அடைகிறான். அதுவே யல்லாமல் பரமாத்மா நிர்தர்மக ஶூன்யபாவம் மற்றும் அஜ்ஞேயதை என்கிற குழிக்கு (குழியில்) விழாமல் தப்பிக்கப்பட்டிருக்கிறான். இந்த ஸர்வேஶ்வரன் குணங்களுடன் கூடியவனாகிறபடியால் ஜனங்களிட ஆராதனைக்கு விஷயனாகிறான். மற்றும் இவனால் ஜகத்ப்ரவாஹம்—ஸத்ய பூதமான நிர்கமம். (நிஜமான ஸ்ருஷ்டி) மித்யாபூதமான பொய் ஆட்டமல்ல-வெளியில் புறப்படுகிறது" என்றும்—

(கீதோபன்யாஸம் பாகம்-2, பக்கம் 231)

† சுரேந்த்ரநாத் தாஸ் குப்த என்பவர்—"ஸ்ரீ பகவத் கீதை ஏகாந்தி (விஷ்ணு மாத்திரம் ஸர்வோத்தமவாதிகளான) வைஷ்ணவர்களின் ஶாஸ்த்ர க்ரந்தமாயிருக்கின்றது" என்றும்—

(கீதோபன்யாஸம் பாகம்-2, பக்கம் 186)

---

* Krishna becomes identified with Vishnu or Vasudeva...... But Vishnu is also on the point of being identified with the impersonal non-qualitative Brahman the subject of the more severely monistic doctrine of the Upanishads. Thus, from whatever direction we view the process of modification, Vishnu obtains the elevation which results from identification with the Absolute, and at the same time the Absolute is prevented from receding into these depths of negation and unapproachability.......The All - God becomes associated with qualities which constitute him a definite object of worship and from him the world-process emerges—as a real emanation and not simply as an illusive shadow-play.

W. S. URQUHART, M. A., D. LITT.

† " The Sreemad Bhagavadgita is the canonical work of the ekanti (singularistic) Vaishnavaś. "

SURENDRANATH DAS GUPTA, M. A., PH. D.,
*Professor of Sanskrit.*

டாக்டர் பால் யவ்டிக் என்பவர்—"பகவத் கீதை கடோபனிஷத்தின் ஆதாரத்தின் மேல் ப்ராப்தமாயிருக்கும், வைஷ்ணவ தத்வஜ்ஞரால் இயற்றப்பட்ட மோக்ஷ ஶாஸ்திர மென்று அநேக வித்வான்கள் ஸம்மதிக்கிறார்கள்" என்றும்—

(கீதோபன்யாஸம் பாகம்-2, பக்கம் 187)

† L. D. பார்னெட் என்பவர் கீதையில் எல்லாவற்றிற்கும் மேலான ஸ்தானத்தில் பரமாத்மா, புருஷோத்தம, வாஸுதேவ, ஈஶ்வர, நாராயண, கோவிந்த, ஹரி, விஷ்ணு, இது முதலிய வெகு பெயர்களால் அழைக்கப்படும் ஓர் பரம (பரப்ரஹ்ம) சேதனம் நிரூபிக்கப்பட்டிருக்கிறது. ஆயினும் இது எல்லா அவஸ்தைகளை யும் கடந்தது. அசிந்த்யமாயிருந்தபோதிலும், அது அத்வைத வேதாந்தத்தில் ப்ரதிபாதிக்கப்பட்ட நிர்தர்மகமான விசேஷ ரஹிதமான ஶூன்ய ஐக்யமல்ல. ஆனால் அவனிடத்தில் ஸகல கல்யாண குணங்களும் ஆனந்த்யத்தை யடைந்து நிலைபெற்றிருக் கின்றன. ஸகல ஸத்குணங்களும், ஞானமும், ஆனந்தமும் பரி பூர்ணமாய் அவனிடத்திலிருக்கின்றன. அவன் ஜகதந்தர்யாமி, ஸர்வஸாக்ஷி, அந்தர்கதனாய் ஜகன்னியாமகனாய் இருப்பான். ஸகல ஜகத்தும் ஸத்யமே. ஏனெனின் அது இந்த பூர்ணானந்த வஸ்து வினால் சேஷ்டிதமாயிருக்கிறது. ஜகத்து ஸத்யபூதமான இரண்டு தத்வங்களை உட்கொண்டிருக்கிறது, ஒன்று ஜடம் மற்றொன்று அனந்தானந்த ஜீவராசிகள்" என்றும்—

(கீதோபன்யாஸம் பாகம்-2, பக்கம் 231)

---

* "Many scholars agree that the Bhagavadgita is a moksha-sastra produced in a Vaishnava Church descended from the Katha Upanishad."

PAUL YEVTIC, B. LITT., PH. D.

† "At the summit of all existence is an absolute spirit variously called Paramatman, Purushottama, Vasudeva, Iswara, Narayana, Govinda, Hari, Vishnu. But though being above the moods and inconceivable, he is not the blank, attributeless unqualified one of the Adwaita Vedanta. On the other hand, in Him are united all conceivable good qualities raised to infinity. All goodness, knowledge, and blessedness that are and may be

ஹில் என்னும் மேநாட்டு பரிசோதகர் தம்மிட கீதையில்—“சங்கராசார்யரின் புத்திக்கூர்மையும்—கீதா ஶாஸ்திரமும் அத்வைதமும் ஒரே கருத்துடையவைகளல்ல, (கீதை அத்வைத விரோதி) என்கிற நிஜமான விஷயத்தை மறைப்பதற்கு ஸாமர்த்யமுடையதாகவில்லை. (சங்கராசார்யர் எவ்வளவு புத்திக்கூர்மை உபயோகித்தபோதிலும் தம் மதத்தை கீதாரூடமாகும்படி செய்யமுடிவதில்லை.) மற்றும் தம் கருத்துகளுக்கு விருத்தமாக ஸ்பஷ்டமான கீதா வாக்யங்களிருக்க (ஸர்வ)கர்மமற்ற (அத்வைத) ஞானமே முமுக்ஷுவுக்கு மோக்ஷத்தைத் தரக்கூடியதென்கிற தம் பக்ஷத்தை நிலைநிறுத்துவதற்கும் வல்லமையற்றவராயிருக்கிறார். மற்றும் கீதா வாக்யம் க்ரூரமான அனனுகூல்யத்தைதாங்கியிருக்க கீதார்த்தத்திற்கு வைபரீத்யத்தையுண்டாக்கும் பதங்களை சேர்த்துக்கொள்வதற்கும் பின்வாங்குவதில்லை” என்றும்—எழுதியிருக்கிறார்கள்.

இவ்வாறு ஸகல ப்ரமாணங்களாலும் வெகு சிறப்புடன் கொண்டாடப்படும் ஸ்ரீ ஸ்ரீ ஸத்யத்யான தீர்த்த ஸ்ரீபாதங்களவர்களிட கருணாம்ருதரூபமாய் ப்ரவஹிக்கும் த்வைதார்த்தத்துடன் கூடிய இந்த கீதா புத்தகத்தை தமிழ்நாட்டு த்வைதமதாபிமானிகளனைவரும் பெற்று தினந்தோறும் ஶ்ரத்தாபக்தியுடன் இந்நூலை பயிற்சி செய்துகொண்டே ஸ்ரீஸ்ரீகளிட பரமானுக்ரஹ பூர்வகமான பாரதீரமண முக்ய ப்ராணாந்தர்கதனான ஸ்ரீகீதாசார்யனின் அனுக்கிரகத்திற்கு பூர்ண பாத்திரர்களாக வேணுமாய்க் கோருகிறேன்.

மதராஸ்,
9-12-1937.

ஸத்தியானந்தம் கிருஷ்ணாசார்ய:

---

abide in an immeasurable degree in Him. He is the soul, the witness, the inward ruler of the universe. All the universe is real for it is inspired throughout by this blessed soul. The universe comprises two real categories—one matter and infinitely many souls. L. D. BARNETT, M. A., D. LITT.

* “Not even the subtlety of Sankara can conceal the fact that the Adwaita and Geeta systems are not at one; nor is he able in the face of plain texts to the contrary, to make good his claim that Geeta severs action from knowledge, the latter alone qualifying the aspirant for release............and when the Geeta text is abdurate he does not scruple to understand additional words that reverse the sense.”

# கிரந்தாக்ஷரங்கள்.

---

## உயிரெழுத்துக்கள்.

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 𑌅 | 𑌆 | 𑌇 | 𑌈 | 𑌉 | 𑌊 | 𑌋 | 𑍠 |
| அ | ஆ | இ | ஈ | உ | ஊ | ரு | ரூ |
| 𑌌 | 𑍡 | 𑌏 | 𑌐 | 𑌓 | 𑌔 | 𑌅𑌂 | 𑌅𑌃 |
| ளு | ளூ | ஏ | ஐ | ஓ | ஔ | அம் | அ: |

## மெய்யெழுத்துக்கள்.

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 𑌕 | 𑌖 | 𑌗 | 𑌘 | 𑌙., | 𑌚 | 𑌛 | 𑌜 | 𑌝 | 𑌞., |
| க$^{1}$ | க$^{2}$ | க$^{3}$ | க$^{4}$ | ங | ச$^{1}$ | ச$^{2}$ | ஜ$^{1}$ | ஜ$^{2}$ | ஞ |
| 𑌟 | 𑌠 | 𑌡 | 𑌢 | 𑌣., | 𑌤 | 𑌥 | 𑌦 | 𑌧 | 𑌨., |
| ட$^{1}$ | ட$^{2}$ | ட$^{3}$ | ட$^{4}$ | ண | த$^{1}$ | த$^{2}$ | த$^{3}$ | த$^{4}$ | ந |
| 𑌪 | 𑌫 | 𑌬 | 𑌭 | 𑌮., | 𑌯 | 𑌰 | 𑌲 | 𑌵 | 𑌶., |
| ப$^{1}$ | ப$^{2}$ | ப$^{3}$ | ப$^{4}$ | ம | ய | ர | ல | வ | ஶ(ச) |
| 𑌷 | 𑌸 | 𑌹 | 𑌳 | 𑌕𑍍𑌷. | | | | | |
| ஷ | ஸ | ஹ | ள | க்ஷ | | | | | |

## மெய்களோடு சேரும் உயிர்களின் அடையாளங்கள்.

| | | |
|---|---|---|
| 𑌆 — 𑌾 | 𑌊 — 𑍂 | 𑌔 — 𑍌 |
| 𑌇 — 𑌿 | 𑌏 — 𑍇 | 𑌂 அநுஸ்வரம் |
| 𑌈 — 𑍀 | 𑌐 — 𑍈 | 𑌃 விஸர்க்கம். |
| 𑌉 — 𑍁 | 𑌓 — 𑍋 | |

## உயிர்மெய்யெழுத்து.

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 𑌕 | 𑌕𑌾 | 𑌕𑌿 | 𑌕𑍀 | 𑌕𑍁 | 𑌕𑍂 | 𑌕𑍃 | 𑌕𑍇 | 𑌕𑍈 | 𑌕𑍋 |
| க | கா | கி | கீ | கு | கூ | க்ரு | கெ | கை | கோ |
| 𑌕𑍌 | 𑌕𑌂. | 𑌕𑌃 | | | | | | | |
| கௌ | கம் | க: | | | | | | | |

---

ஸ்ரீ

# ஸ்ரீமத் பகவத்கீதா

## விஷய ஸூசிகை.

---


| அத்தியாயம். | விஷயம். | பக்கம். |
|---|---|---|
| | ஸ்ரீ கீதாஸார ஸங்க்ரஹம். | ... 1—44 |
| 1. | ஸ்ரீ கிருஷ்ணன் அர்ஜுனனுக்கு ஸ்ரீ கீதோபதேசம் செய்வதற்குக் காரணம், கௌரவ பாண்டவர்களின் போர் முயற்சி, அர்ஜுனனின் மனத்தளற்சி (சு. 47) | 1 |
| 2. | ஜீவேஸ்வரர்களிட ஸ்வரூப நிரூபணம், அவர்களிட ஞானோபாயம், அபரோக்ஷ ஞானியின் லக்ஷணம் (சு. 72) ... | 23 |
| 3. | நிவ்ருத்த கர்மரூப ஞானோபாயமென்னும் யோகத்தை அவசியம் செய்யவேண்டியதென்பதின் அறிக்கை விவரணம், ஞானயோகத்தின மேன்மை (சு. 43) ... | 81 |
| 4. | தர்மங்களின் புராதனத்வம் (பழமை), நிவ்ருத்த கர்மம், தாரதம்யத்தில் ப்ரதானனுன விஷ்ணு, விஷ்ணு ஞானம் இவைகளின் விவரணம், கர்மபேதம் (சு. 42) ... | 110 |
| 5. | காமாதிகளின் விடுதலென்னும் ஸம்ன்யாஸம், பயனுசையற்று ஈஸ்வரார்ப்பண புத்தியினுல் வர்ணுஸ்ரம விஹித கர்மானுஷ்டானமென்னும் கர்மயோகம் இவைகளின் விவரணம் (சு. 29) ... ... | 140 |
| 6. | த்யான (ஸமாதி) யோகத்தின் விவரணம், ஆஸனுதிகள் (சு. 47) ... ... ... | 160 |
| 7. | த்யானத்திற்கு ஆவஸ்யகமான பக்தியுண்டாவதற்காக எட்டுவகை ஜடம், மஹாலக்ஷ்மி இவைகளைக்காரணமாயுள்ள ஸ்ருஷ்ட்யாதிகர்த்ருத்வ ரூப ஸாமான்ய ஞானம், விஜ்ஞானமென்னும் விசேஷமாய் அறியவேண்டிய பகவானிட அலௌகிகமான மகிமைகள் (சு. 30) ... | 189 |
| 8. | ப்ரஹ்மம், அத்யாத்மம், அதி(யி)பூதம், கர்மம் முதலிய பதங்களின் அர்த்தம், மரணகாலத்திலுண்டாகும் பகவத் ஸ்மரணையின் பயன், அது உண்டாவதற்கு உபாயம், ப்ரஹ்மப்ராப்தி, அதற்கு வழி, (அர்சிருதி மார்க்கம்) (சு. 28) | 215 |

| அத்தியாயம். | | பக்கம். |
|---|---|---|
| 9. | எல்லா இடங்களிலும் பரவியிருத்தல், உலகத்திற்கு ஆதாரமாயிருத்தல் முதலிய அதிவிசித்ரமான பகவன் மகிமைகள் (சு. 34) ... ... | 236 |
| 10. | புத்யாதிகளேயும், மஹர்ஷ்யாதிகளேயும் படைத்த பகவன் மகிமைகள், த்யானத்தின்பொருட்டு பரமாத்மாவின் விபூதி ரூபங்கள் (சு. 42) ... ... | 259 |
| 11. | விபூதி ரூபங்களின் த்யான ஸௌகர்யத்திற்காக விஶ்வரூபத்தின் ஸ்திதி விவரணம் (சு. 55) ... ... | 293 |
| 12. | பரமாத்மா, மகாலக்ஷ்மி இவ்விருவரிட உபாஸனேகளில் பரமாத்மாவின் உபாஸனேக்கே மேன்மையும், ஸௌலப்யமும் கூறல் (சு. 20) ... ... | 328 |
| 13. | பின் அத்யாயங்களில் ஆங்காங்கு சொல்லப்பட்டுள்ள ஞானஸாதனம், ஜீவஸ்வரூபம், பகவத் ஸ்வரூபம், க்ஷேத்ரமென்னும் பகவானிட ஆவாஸஸ்தானம், இவைகளின் சுருக்கம் (சு. 35) ... ... | 342 |
| 14. | ஸத்வரஜஸ்தமோ குணங்களின் மாருதலின் ஸ்திதி, அவைகளேக்கடக்கும் உபாயம், ஜீவத்ரைவித்தியம் (சு. 27)... | 368 |
| 15. | ஸம்ஸார காரணமான ப்ரக்ருத்யாதி க்ஷேத்ரமெனப்படும் ஜகத்தின் ஸ்வரூபம், அதைக்கடக்கும் பகவத் ஞானரூப உபாயம் (சு. 20) ... ... | 385 |
| 16. | தேவாஸுரர்களின் லக்ஷண விவரணம் (சு. 24) ... | 401 |
| 17. | ஸத்வாதி குணங்களாலுண்டாகும் ஶ்ரத்தா, ஆஹாரம், தபஸ்ஸு, யஜ்ஞம், தானம் முதலியவைகளின் பேதத்தைச் சொல்லிக்கொண்டே அவைகளே விவரித்தல் (சு. 28) ... ... | 420 |
| 18. | முன் அத்தியாயங்களில் ஆங்காங்கு சொல்லப்பட்டிருக்கும் புருஷார்த்தமான ஞான ஸாதனங்களே ஒன்றுகூட்டி சுருக்கமாய்க் கூறுதல் [கர்ம த்யாகத்தின் ஸ்வரூபம்] (சு. 78) ஆக ஶ்லோகங்கள் 701 * ... | 437 |
| | ஶ்லோகங்களின் அகராதி ... ... | 482 |


* சில பதிப்புகளில் முதலத்தியாயத்தின் 27-வது ஶ்லோகத்தை மூன்று பாதியாகவும், கடைசி ஶ்லோகத்தை மூன்று பாதியாகவும் சேர்த்து ஓர் ஶ்லோகத்தைக் குறைத்து 700 ஶ்லோகங்களாகக் கணக்கிடப்பட்டிருக்கின்றன. மற்றும் சில பதிப்புகளில் 13-வது அத்தியாயத்தின் முதல் ஶ்லோகத்தைக் கணக்கிடாமலும், மற்றும் சில பதிப்பில் முதல் சுலோகத்தை விட்டும் 700ஶ்லோகங்களாகக் கணக்கிடப்பட்டிருக்கின்றன.

ஸ்ரீ

# ஸ்ரீ பகவத்கீதா

## விசாரங்களின் அறிக்கை.

---

விஷயம். பக்கம்.


'திதிக்ஷவ:' என்கிற ஶப்தார்த்த விசாரம் ... ... 34

அபரோக்ஷ ஞானத்தினால் புண்ய பாபங்கள் தொலையும் விதம் ... 64

'மன்மயா:' என்கிற ஶப்தார்த்த விசாரம் ... ... 116

'ப்ரஹ்மார்பணம்' 'ப்ரஹ்ம ஹவி:' இது முதலிய வாக்கியங்களின் அர்த்த விசாரம் ... ... ... 126

'ப்ரஹ்மபூத:' என்கிற ஶப்தார்த்த விசாரம் ... ... 156

'ரஸோஹம்' இது முதலிய வாக்யார்த்த விசாரம் ... ... 197

'ஞானீத்வாத்மைவ' 'வாஸுதேவஸ் ஸர்வம்' இவ்வாக்யங்களின் அர்த்த விசாரம் ... ... ... 205

'மத்பாவ' ஶப்தார்த்த விசாரம் ... ... ... 221

'அஹர்யத் ப்ரஹ்மண:' என்கிற வாக்யார்த்த விசாரம் ... 227

'அஹம் க்ரது:' இது முதலிய வாக்யார்த்த விசாரம்... ... 246

நிர்குண ப்ரஹ்மோபாஸனை விசாரம் ... ... 333

'க்ஷேத்ர, க்ஷேத்ரஜ்ஞ' ஶப்தார்த்த விசாரம் ... ... 344

'அம்ஶ' ஶப்தார்த்த விசாரம் ... ... ... 392

ஸகல கீதார்த்தமும் ஸகல வேதார்த்தங்களும் இக்கீதையின் 15-வது அத்தியாயத்தில் கூறப்பட்டிருக்கிறதென்று நிரூபித்தல் ... 400

'மித்யா' ஶப்தார்த்த விசாரம் ... ... ... 407

'ஈஶ்வரோஹம்' என்கிற வாக்யார்த்த விசாரம் ... ... 412

'ஈஶ்வர: ஸர்வபூதானாம்' என்கிற ஶ்லோகார்த்த விசாரம் ... 471


---




श्री

श्रीमद्दिग्विजयरामोविजयते ।



मङ्गळं

इन्दिरावदनाम्भोज राजहंसाय विष्णवे ।
अमन्दानन्द सन्दोह सुन्दराकृतये नमः ॥
व्यासाय भवनाशाय श्रीशाय गुणराशये ।
हृद्याय शुद्धविद्याय मध्वाय च नमोनमः ॥
दुरन्त दर्मतध्वान्त विध्वंसन विचक्षणः ।
जयतीर्थाख्य तरणिर्भासतां नो हृदम्बरे ॥

ஸ்ரீ

# ஸ்ரீ கீதா ஸாரஸங்க்ரஹம்

ஸ்ரீ குருப்யோ நம:

कृष्णः काव्यकृते स्वहस्तकमलछत्रं प्रदद्यात्प्रभुः ।
सच्छास्त्राभिधरम्यराजपदवीं सुज्ञानयानं मुदा ॥
स्वांघ्र्याराधन कंकणं करयुगे कैंकर्य हारं गले ।
स्वात्मानं हृदि नित्यचिंतनधनं सद्युक्तिरत्नान्यपि ॥

அர்ஜுனனின் விஷாதம்.

ஸ்ரீ கிருஷ்ணபகவான் தன்னிட பக்தனான அர்ஜுனனின் ஸாரத்ய வ்யாபாரத்தை வகித்து தர்மக்ஷேத்ரமான குருக்ஷேத்ரத்திற்கு வந்து யுத்தத்திற்கு நின்றனன். அப்பொழுது "ஓ கிருஷ்ணனே! இந்த யுத்தத்தில் நான் யாருடன் போர்புரிவது யுக்தமானது? துர்ப்புத்தியான துர்யோதனனுக்கு ப்ரியத்தை யுண்டாக்கவேண்டுமென்று போருக்காக யார்யார் வந்திருக்கிறார்களோ, அவர்களைக்காணுவேன். அதுவரைக்கும் நீ இரதத்தை இவ்விரண்டு படைகளின் மத்தியில் நிறுத்து" (1. 21-22-23) என்று அர்ஜுனன் ஸ்ரீ க்ருஷ்ணனை வேண்டிக்கொள்ளவே, பகவான் இரண்டு படைகளின் மத்தியில் இரதத்தை நிருத்தி "ஓ அர்ஜுனா! இவ்விரு படைகளிலிருக்கும் போர் வீரர்களைப் பார்" என்று சொன்னார். (1-25). அர்ஜுனன் போர்க்களத்தில் வந்து நின்றிருக்கும், தந்தைகளையும், பாட்டனாரான பீஷ்மாசார்யரையும், மாமன்மார்களையும், ஸஹோதரர்களையும், புத்திரர்களையும், பேரன்மார்களையும், ஸ்னேஹிதர்களையும், மாமனார்களையும் பார்த்து (1. 26-27), அவர்களிடத்தில் தயையுடன் கூடிய மனதுள்ளவனாய் ஸ்ரீ க்ருஷ்ணனைக் குறித்துச் சொல்லுகிறான்:— "ஓ க்ருஷ்ணனே! போருக்குத் தயாராயிருக்கும் இந்த பந்துக்களைப் பார்க்கவே, காண்டீவ தனுஸ்ஸு என்னிட கைசோருகிறது. என்னிட தேகம் எரிகிறது. வாயுலரு

கிறது. மயிர்க்கூச்சலுண்டாகிறது. தேகம் நடுங்குகிறது. நான் நிற்கமாட்டேன். என் மனது கலங்குகிறது. அபசகுனங்கள் காண்கின்றன. போரில் இப்பந்துக்களைக் கொன்று ச்ரேயஸ்ஸை யடையமாட்டேன். எனக்கு யுத்தத்தில் ஜயம் வேண்டாம், இராஜ்யம் வேண்டாம், ஸுகமும் வேண்டாம். எந்த ஆசார்யருக்காகவும், தந்தைகளுக்காகவும், பாட்டனார்களுக்காகவும், மாமன்மார்களுக்காகவும், மாமனார்களுக்காகவும், பேரன்மார்களுக்காகவும், பந்துக்களுக்காகவும் இராஜ்யம் ஸுகம் இவைகள் அபேக்ஷிக்கப்படுகின்றனவோ, அவர்களே ப்ராணங்களையும் தனத்தையும் விட்டுப் போருக்கு வந்து நின்றிருக்கிறார்கள். அவர்களைக் கொன்ற பிறகு இந்த இராஜ்யத்தினாலுண்டாகும் ப்ரயோஜனமென்ன? போகத்தினாலாகும் பயன் யாது? என்னிடம் பிழைப் பினாலாவது என்ன பயன்? இந்த பீஷ்மாதிகள் என்னைக் கொன்றாலும், மூவுலகத்தின் இராஜ்யம் கிடைப்பதாயிருந்தபோதிலும் நான் அவர்களைக் கொல்லமாட்டேன். இப்படியிருக்க இந்த அல்பமான பூமிக்காக நான் அவர்களைக் கொல்லமாட்டேன் என்று சொல்லுவதென்ன? * ஆததாயிகள் ஸம்ஹாரத்திற்கு யோக்யர்களென்று சாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன. இந்த துர்யோதனாதிகளும் அத்தகைய ஆததாயிகளே. ஆகையால் ஸம்ஹாரத்திற்கு யோக்யரே! ஆயினும், அவர்களைக் கொல்லுவதால் ஸந்தோஷமுண்டாகாது. அவ்வளவேயன்றி பாவமும் உண்டாகும். ஆகையால் இவர்களை நான் கொல்லமாட்டேன். இந்த பந்துக்களைக்கொன்று நான் எப்படி ஸுகமடைவேன்? (1. 28-37) குலம் நாசமடையுமாயின், குலதர்மங்கள் நாசமடையும். தர்மங்கள் நஷ்டமாயின், அதர்மங்கள் குலத்தைக் கெடுக்கும். அதர்மத்தினால் குலஸ்த்ரீகள் கெடுவார்கள். குலஸ்த்ரீயர் கெடுவ

* நெருப்பினால் சுடுபவர்கள், விஷத்தைக்கொடுப்பவர்கள் ஆயுதங்களால் கொல்ல ப்ரயத்னப்படுபவர்கள், பிறரிடதனங்களை அபகரிக்கின்றவர்கள், பிறரிட பூமியை அபகரிக்கிறவர்கள், பிறரிட ஸ்த்ரீயரை அபகரிப்பவர்கள் இவ்வாறுவரும் ஆததாயிகளென்று சொல்லிக்கொள்ளப்படுவார்கள். துர்யோதனாதிகள் இவ்வெல்லா பாவங்களையும் ஸாதுக்களான பாண்டவர்களின் விஷயத்திலேயே செய்திருக்கிறார்கள். ஆகையால் வதத்திற்கு யோக்யர்களே.

ராயின் வர்ணஸாங்கர்ய முண்டாகிறது. வர்ணஸாங்கர்யம் குலத்தைக்கெடுத்தவர்களுக்கும், குலத்திற்கும் நரக முண்டாவதற்குக்காரணமாகும். * ஸங்கர ஜாதியருக்கு பித்ருக்களுக்கு பிண்டோதகங்களைக் கொடுப்பதில் அதிகாரமில்லாததினால், அவாளிட பித்ருக்கள் பிண்டோதகக்ரியைகளில்லாதவராய் நரகத்தில் விழுவார்கள். வர்ணஸாங்கர்யத்தை யுண்டாக்கும் இந்த தோஷத்தினால் ஜாதி தர்மங்களும் குல தர்மங்களும் நஷ்டமாகும். ஜாதி தர்மங்களும் குலதர்மங்களுமில்லாத ஜனங்கள் நரகத்திலேயே நிஶ்சயமாய் வஸிப்பார்களென்று ஶாஸ்த்ரங்களில் கூறியிருப்பதைக் கேட்டிருக்கிறேன். (1. 38-44) துர்யோதனாதிகள் இராஜ்ய லோபத்தினால் புத்திகெட்டு குலக்ஷயத்தினாலுண்டாகும் தோஷங்களைக் கவனிக்காமல், போருக்கு ப்ரவ்ருத்தித்திருந்தபோதிலும் மேற்கூறிய தோஷங்களை அறிந்திருக்கும் என்னைப்போன்றவர்கள் இத்தகைய பாபகார்யங்களை எப்படி விடாமலிருப்பது? (1. 38-39) ஓ கிருஷ்ணனே! இராஜ்யத்திற்காகவும் ஸுகத்திற்காகவும் பந்துக்களைக் கொல்லுவது மகாபாவமல்லவோ? ஆகையால் ஶஸ்திராஸ்திரங்களை ப்ரயோகிக்காமல் (ஏவாமல்) சும்மா நிற்கும் என்னை ஒருக்கால் துர்யோதனாதிகள் கொன்றபோதிலும் அது எனக்கு க்ஷேமமேயாகும்.” (1-45,46).

ஓ க்ருஷ்ணனே! போர் புரிவதினால் (1) பூஜ்யரான பீஷ்ம த்ரோணர் முதலியவர்களிட ஸ்வரூபம் நாசமாகும். (2-4.) ஆகையால் போர் புரியமாட்டேன். (2) போரில் பீஷ்மத்ரோணாதிகளின் தேகங்கள் நாசமடையுமாகையால் போர் புரியமாட்டேன். (3) பீஷ்மத்ரோணர் முதலியோரிட தேகங்கள் சின்னபின்னமாவதைக்கண்டால் துக்கமுண்டாகு (2-5) மாகையால் போர்புரியேன். (4) பீஷ்மத்ரோணாதிகள் நாசமடைந்து குலதர்மங்கள் ஜாதிதர்மங்கள் நஷ்டமாய் குலத்திற்கு அதர்மம் நேர்ந்து, குல ஸ்த்ரீயர்கள் கெட்டு, அதினால் வர்ணஸாங்கர்யமுண்டாய் பித்ருக்களுக்கு பிண்டோதகங்களில்லாமற்போய் குலத்திற்கும், குலத்தைக் கெடுத்தவர்களுக்கும் நரகாதி அனர்த்தங்களுண்டாகுமாகையால்

* ஸங்கரஜாதி என்றால் வேறேஜாதியான புருஷனால் வேறேஜாதி ஸ்த்ரீகளிடத்தில் பிறப்பவர்கள்.

போர் செய்யமாட்டேன், (5) போரில் ஜயம் நமக்குண்டாகுமோ, அவர்களுக்குண்டாகுமோ என்கிற ஸந்தேஹமிருப்பதினால் போர் செய்யமாட்டேன் என்று யுத்தத்தை விட்டு சும்மா உட்கார்ந்திருக்கும் அர்ஜுனனைக் குறித்து—ஓ அர்ஜுனா! நீ இப்படிப் பேசுவது பண்டிதர்களின் பேச்சல்ல. வெறும் உன்னிட புத்திக்குத்தோன்றும் பேச்சுகளே யாகும். ஶாஸ்த்ர ஸம்மதமானவைகளல்ல. இவ்வேலை செய்யத்தகாது, இவ்வேலை செய்யத்தகுந்தது என்னும் விஷயத்தில் ஶாஸ்த்ரமே ப்ரமாணமாகும். ஶாஸ்த்ரத்தில் 'இது செய்யத்தகுந்தது' என்று எந்த கர்மங்கள் சொல்லப்பட்டிருக்கின்றனவோ அவைகள் செய்யப்படவேண்டியவைகளே. எதைச் செய்யக்கூடாதென்று ஶாஸ்த்ரம் சொல்லுகிறதோ அதைச் செய்யக்கூடாது (16-24.) ஶாஸ்த்ரத்தில் சொல்லியவாறு செய்வதே மேலான வழியாகும். ஶாஸ்த்ரம் என்ன சொல்லுகிறதெனின் :—

பரமாத்மாவின் ஸ்வரூபமும், குணங்களும்.

ஸ்ரீ க்ருஷ்ணபரமாத்மா ஸர்வோத்தமன், மற்றும் ஸகல ஜீவ ஜடப்ரபஞ்சத்தைக்காட்டிலும் வேறானவன். ஸகல ஜீவ ஜடப்ரபஞ்சத்திற்கு உற்பத்தி, ஸ்திதி, ஸம்ஹாரம், நியமனம், ஞானம், அஞ்ஞானம், பந்தம், மோக்ஷம், ஸுகம், துக்கம் இவைகளை அவரவரிட யோக்யதை, கர்மங்கள் இவைகளை அனுஸரித்துக் கொடுப்பவன் (7-6.) மற்றும் ஸர்வஞ்ஞத்வ ஸர்வஶக்திமத்வம் முதலிய அளவற்ற குணங்களால் பூர்ணன் (நிறைந்தவன்).

ஜீவர்களின் ஸ்வரூபமும், குணங்களும்.

ஜீவர்கள் நித்யர்கள், நாசமற்றவர்கள். அவரவரிட தேகங்கள் அனித்யமானவைகள். (2. 12-13) அவர்கள் ப்ரஹ்மசர்ய, கார்ஹஸ்த்ய, வானப்ரஸ்த, ஸன்யாஸமென்ற பேதங்களுள்ள ப்ராஹ்மணர்கள், க்ஷத்ரியர்கள், வைஶ்யர்கள், ஶூத்ரர்கள், வர்ணபாஹ்யர்கள் என்று ஐந்து வகுப்பாக வகுக்கப்பட்டிருக்கிறார்கள். இவ்வைந்து வகுப்பாரும் ஸாத்விக, ராஜஸ, தாமஸரென்று மூவ்வகையானவர்கள் (15-3). மற்றும் தேவதைகளென்றும் அஸுரர்களென்றும் இரு வகுப்புடையவர்கள் (16-6). ஸாத்விக ராஜஸ தாமஸரின் ஞானகர்ம தைர்ய ஆகாரம் முதலியவைகள் வெவ்வேறு

யிருக்கும் (17-18). மற்றும் ஶமம் (பரமாத்ம விஷயகமான புத்தி) தமம் (இந்த்ரிய நிக்ரஹம்) வேதாத்யயன ப்ரவசன ரூபமான தபஸ்ஸு, வெளி ஶுத்தி, அந்தஶ்ஶுத்தி, க்ஷமை, (பொறுமை) ருஜு பாவம் (சரியான வழியிலிருப்பு,) ஸாதாரண ஞானம், விசேஷ ஞானம், ஸ்வர்க்காதி பரலோகங்களுண்டு, அவைகளுக்குச் சாதனங்களான கர்மங்கள் உண்டு, கர்மங்களை யனுஸரித்து பலன்களைக் கொடுக்கும் ஈஶ்வரனுண்டு என்கிற ஆஸ்திக்ய புத்தியும், ஶாஸ்த்ர விஹிதமான கர்மங்களும் ப்ராஹ்மணர்களுக்கு ஸ்வபாவ ஸித்தமானவைகள் (ஸ்வதர்மங்கள்) (18-42). ஶௌர்யம், தேஜஸ்ஸு, தைர்யம், தக்ஷதை (ஸாமர்த்யம்), யுத்தத்தில் பின்வாங்காமை, தர்மத்திற்கு விரோதிகளான, பகவத்வேஷிகளான அஸுரர்களிட மற்றும் அவரைச் சேர்ந்தவர்களிட ஸம்ஹார ரூபமான யுத்தத்தைச் செய்து, அதினுலுண்டாகும் துக்கத்தை (அபிமானத்தை) விட்டு வாரமற் செய்துகொண்டு (2-14) பரமாத்மாவிடம் ஸமர்ப்பிப்பது (18-43,45), தானம், அயோக்யர்களைத் தண்டிப்பது, இதுமுதலிய கர்மங்கள் க்ஷத்ரியருக்கு ஸ்வபாவ ஸித்தமானவைகள் என்றால் ஸ்வதர்மங்கள். க்ருஷி என்றால் பயிரிடுதல், கோரக்ஷணே, வ்யாபாரம் முதலியவைகள் வைஶ்யருக்கு ஸ்வபாவ ஸித்தமானவைகள். மேற் சொல்லப்பட்ட மூன்று வர்ணத்தாரிட சேவையே ஶூத்ரர்களுக்கு ஸ்வதர்மமாகும் (18-44).

ஜடத்தின் ஸ்வரூபமும், குணங்களும்.

ஸத்வ ரஜஸ் தமோ குணாத்மகமான ப்ரக்ருதி தத்வம், மஹத் தத்வம், புத்தி தத்வம், மனஸ் தத்வம், அஹங்கார தத்வம், ஐந்து மஹாபூதங்கள், பூத விகாரங்களான ஓஷதிகள் இவ்விதமாகப் பரிணமித்து (மாறி) (7-4) ஜீவர்களைக் கட்டி (14-5) அஞ்ஞானம், நித்ரை, ஆலஸ்யம் முதலியவைகளை ஜீவர்களுக்குக் கொடுத்து நாநாவிதமான யோனிகளில் பிறப்பித்து துக்கத்தைக் கொடுப்பது.

இந்த ப்ரக்ருதி ஸம்பந்தத்தினுலுண்டாகும் துக்கங்களின் பரிஹாரத்திற்காகவும், அக்ஷயமான (நாசமற்ற) ஸ்வரூப

ஸுகத்தை அனுபவிப்பதற்காகவும் ப்ரக்ருதியினுலுண்டாயிருக்கும் கட்டை விடுவித்துக்கொள்ளவேண்டியது ஆவஶ்யகமாகும் (14-20). இந்த ப்ராக்ருதி பந்தத்தின் பரிஹாரம் பரமாத்மாவின் ப்ரஸாதத்தினுலேயே ஆகவேண்டியது (18-56). அந்த ப்ரஸாதம் பரமாத்மாவிடத்தில் பக்தி செய்வதினுலேயே உண்டாகக்கூடியது. அந்த பக்தியோ—பரமாத்மாவின் ரக்ஷகத்வம், புருஷோத்தமத்வம், ஜீவ ஜடாத்மக ப்ரபஞ்ச பின்னத்வம் முதலிய குணங்களின் அபரோக்ஷ ஞானத்தினுலேயே உண்டாகக்கூடியது. அபரோக்ஷமெனின் பரமாத்மாவை நேரில் காணுதல். அதுவும் அந்த பரமாத்மாவின் அனுக்ரஹத்தினுலேயே உண்டாகக்கூடியது. பரமாத்மா அவ்யக்தமான (கண்ணுக்குப் புலப்படாத) ஸ்வபாவமுள்ளவனுகையால், கருப்பு சிகப்பு முதலிய வர்ணங்களுள்ள கடபடாதிகளைப்போல் வெறும் நம்மிட ப்ரயத்னத்தினுலேயே கண்டுகொள்ளுவதற்கு அஶக்யன். தன்னிட அனுக்ரஹத்தினுலேயே காணப்படுபவன். அவனிட அனுக்ரஹத்திற்காக ஜீவர்கள் எப்போதும் அந்த பரமாத்மாவின் குணங்களை த்யானிக்கவேண்டியது. பலவிதமான துர்மதங்களைக் கேழ்ப்பத்தினுலுண்டாகும் ஸம்ஶய விபரீத ஞானங்களைப் போக்கடித்துக்கொண்டு தத்வ நிஶ்சயத்தை யடையாதவரைக்கும் த்யானரூபமான யோகம் ஸரியாய்ப் பொருந்தமாட்டாது (2-53). அந்த தத்வ நிச்சயமோ குருக்களை ஶரணமடைந்து, அவரை வணங்கி, பிரார்த்தித்து அவரால் பகவத் தத்வங்களின் உபதேஶத்தைப் பெற்றுலொழிய உண்டாகமாட்டாது (4-34). இத்தகைய குருபதேசமும் அதினுல் தத்வ நிச்சயமும் ஆகவேண்டுமாயின் மனிதன் அந்த:கரண சுத்தியை யடையவேண்டும்(2-64,65). மற்றும் இஹ பரலோகங்களிலுள்ள நஶ்வரமான பலாபேக்ஷையற்றவராயிருக்க வேண்டும். இவைகளில்லாவிடில் குருக்களின் உபதேசமும் தத்வ நிச்சயமும் உண்டாவதில்லை (2-44). அவாளவாளிட வர்ணுஶ்ரமங்களுக்கு விஹிதமான யஜ்ஞாதி கர்மங்களைச் செய்துகொண்டே, இது உன்னிட பூஜை என்று பரமாத்மாவிடம் அக்கர்மங்களை ஒப்புவித்தாலொழிய அந்த:கரண சுத்தி யுண்டாகமாட்டாது

ஸாதனச் சுருக்கம்.

(18-46). ஆகையால்—ஸாத்விக ஜீவர்கள் தம்தம் வர்ணாஶ்ரமங்களுக்கு விஹிதமான யஜ்ஞம் தானம் யுத்தம் முதலிய கர்மங்களைச் செய்துகொண்டே, அவைகளை ஸ்ரீ பரமாத்மாவிடத்தில் பக்தியுடன் ஒப்புவிக்கவேண்டியது. அந்த பரமாத்மா பக்தியுடன் ஒப்புவிக்கும் யஜ்ஞாதிகளைப் பெற்றுக்கொண்டு (9.26-72) அந்த ஸாத்விக ஜீவர்களின் அந்த:கரணத்தை ஶுத்தப்படுத்தி, அநேக துர்மதங்களைக் கேழ்ப்பதினுலுண்டாகும் ஸம்ஶய விபரீத ஜ்ஞானங்களைப் போக்கி, எப்போதும் விடாமற் தன்னிட த்யானமுண்டாகும்படிக்குச் செய்து, தன்னிட தர்ஶனத்தைக் கொடுத்து, பக்தனிடத்தில் அனுக்ரகித்து, ப்ரக்ருதி பந்தத்தினின்றும் விடுவித்து, அக்ஷயமான ஸ்வரூப ஸுகானுபவத்தைக் கொடுப்பார் (5-25).

அஸுரர்கள் தம்தம் வர்ணாஶ்ரமங்களுக்கு விஹிதமான கர்மங்களைச்செய்து ஸ்ரீ பரமாத்மாவைப் பூஜிக்காமல் (17-5) இந்த ப்ராஹ்மணாதி வர்ணங்கள், ப்ரஹ்மசர்யாத்யாஶ்ரமங்கள், வேதம், தேவதைகள், பரலோகம் முதலிய எல்லா ஜகத்து மித்யை (பொய்) என்றறிந்து (16-8) * பெயருக்காகவே யஜ்ஞங்களைச் செய்துகொண்டு (16-17) தானே ஈஶ்வரனென்றறிந்து (16-14) நரகாத்யனர்த்தங்களை யடைந்து (16-16) அஸுரயோனிகளில் பிறந்து பரமாத்மாவிடத்தில் த்வேஷம் செய்துகொண்டே ஸ்ரீ கிருஷ்ணனின் பாதங்களை (முக்தியை) யடையாமலே அதோ கதியை (அந்தந்தமஸ்ஸை) அடைகிறார்கள் (16-20) என்று ஶாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன. ஆகையால் "பீஷ்ம த்ரோணாதிகளின் ஸ்வரூபங்கள் (ஜீவர்கள்) நாஶமாகாவிடினும் அவாளிட தேகங்கள் நஷ்டமாகின்றன. ஆகையால் நான் போர் புறிவதில்லை" என்று சொல்லுவது ப்ராஜ்ஞர்களால் சொல்லப் படும் வார்த்தைகளல்ல (ஶாஸ்த்ரங்களை யனுசரித்த வார்த்தைகளல்ல).

ஓர் குதிரையில் தனதென்கிற அபிமானமிருக்கும்போது அக்குதிரைக்கு கொஞ்சம் ஶ்ரமமுண்டாகுமாகில் அதில் அபி

* உலகத்தில் யாகம் செய்தவர் என்று பெயருண்டாவதற்கு மாத்திரமே.

மானமுள்ள அதின் எஜமானனுக்கு வெகு துக்கமுண்டாகிறது. அதே குதிரையைப் பிறருக்கு விற்றுவிடுவானேயாகில், மறுநொடியிலேயே அக்குதிரை இறந்துவிட்டபோதிலும் அந்த மனிதனுக்கு தனதென்கிற அபிமானமில்லாமலிருப்பதினால் துக்கமுண்டாகாமலிருப்பதேயன்றி, "நான் விற்காமலிருப்பேனேயாகில் என் பணம் நஷ்டமாயிருக்கும், விற்ற பிறகு இக்குதிரை இறந்ததினால் என் பணம் நஷ்டமாகவில்லை" என்று ஸந்தோஷமுமடைவான். ஆகையால் ஶோகதுக்காதிகளுக்கு அபிமானமே காரணம் (2-14). ஆகையால் பகவத்வேஷிகளின் மற்றும் அவாளிட அனுபந்திகளின் ஸம்ஹாரங்களைப் பரமாத்மாவின் பூஜை என்று அவஶ்யகமாகச் செய்யவேண்டும். பகவத்பூஜாரூபமாய் அவஶ்ய கர்த்தவ்யமான கார்யங்களைச் செய்து அதினாலுண்டாகும் துக்கத்தை அபிமானத்தை விட்டுப் போக்கடித்துக் கொள்ளுபவனே மோக்ஷமடைவான் (2-15).

ஆகையால் "ப்ரக்ஷாளனாத்தி பங்கஸ்ய தூராதஸ்பர்ஶனம் வரம்' சேற்றை மெறித்து காலை அலம்பிக்கொள்ளுவதைவிட சேற்றை மெறிக்காமலிருப்பதே மேலானது என்கிற நியாயத்தையொத்து, யுத்தத்தைச்செய்து பீஷ்மத்ரோணாதிகளைக் கொன்று அதினாலுண்டாகும் துக்கத்தை அபிமானத்தை விட்டுப் போக்கிக் கொள்ளுவதைவிட, அவாளைக் கொல்லாமலே துக்க ஸம்பந்தமே இல்லாமற் செய்துகொள்ளுவது மேலல்லவோ"என்று சொல்லுவது யுக்தமல்ல. ஏனெனின்-பகவத்வேஷிகளின் மற்றும் அவாளிட பந்துக்களின் ஸம்ஹாரம் க்ஷத்ரியர்களுக்கு விஹித கர்மமாகும் (2-31).இத்தகைய ஸத்கர்மங்களால் துக்கமுண்டாவதில்லைஎன்று தத்வங்களை நேரில் கண்டிருப்பவர்கள் நிர்ணயித்திருக்கிறார்கள் (2-16). ஆகையால் க்ஷத்ரியர்களுக்கு யோக்யமான யுத்தமென்னும் கர்மத்தினால் எப்போதும் நரகாத்யனர்த்தங்கள் உண்டாகமாட்டாது. ஆகையால் பீஷ்மத்ரோணாதிகளின் ஸம்ஹாரத்தினால் குலதர்மங்கள் நஷ்டமாய் நரகாத்யனர்த்தங்களுண்டாகிறதென்று சொல்லுவது யுக்தமல்ல. ஆகையால் ஓ அர்ஜுனனே! பகவத்பூஜாரூபமான பகவத்வேஷிகளான தாமஸஜனங்களிட மற்றும் அவர்களிட அனுபந்திகளிட ஸம்ஹாரரூபமான யுத்தமென்கிற

கர்மத்தைச் செய்து, பரமாத்மாவிடத்தில் ஒப்பிவித்து (18-45) பரமாத்மாவே ஸர்வோத்தமனென்கிற ஞானத்தை ஸம்பாதித்து அபரோக்ஷ ஞானத்திற்கு ஸாதனத்தைச் செய்துகொள்ள வேண்டும்.

பிறகு எப்போதும் அந்த பரமாத்மா விடத்திலேயே மனதை வைத்திருப்பாயேயாகில் (18-57) அந்த பரமாத்மாவின் ப்ரஸாதத்தினால் என்றால் இவனை முக்தனாக்கவேண்டும் என்கிற அவனிட எண்ணத்தினால் எல்லா கஷ்டங்களையும் கடந்து முக்தனாவாய். இவ்விதமாக க்ஷத்ரிய வர்ணத்தாருக்கு யுக்தமான யுத்தமென்னும் கர்மத்தைசெய் என்று நான் சொல்லியபேச்சை நீ கேட்டு, அந்தப் படிக்குச் செய்யாவிடின் நாசமடைவாய் (18-58). ஸாங்கமாய் (நன்றாய்) செய்வதற்கு ஸாத்யமாயினும் தன்னிட வர்ணாச்ரமத்திற்கு யோக்யமல்லாத மற்றும் இதர வர்ணாச்ரமங்களுக்கு யோக்யமான கர்மங்களைச்செய்வதைவிட, ஸாங்கமாய் செய்வதற்கு ஸாத்யமாகாததாயினும் தன்னிட யோக்யதையை யனுஸரித்துச் செய்த தன்னிட வர்ணாச்ரமங்களுக்கு உசிதமான தர்மங்களே ச்ரேயஸ்கரமானவைகள் (நன்மைதறக் கூடியவைகள். 3-35). தன்னிட வர்ணாச்ரமங்களுக்கு விஹிதமான கர்மங்களைச் செய்வதினால் "பீஷ்மத்ரோணாதிகளின் ஸம்ஹாரத்தினால் குலதர்மங்கள் நஷ்டமாய் குலஸ்த்ரீகள் கெட்டு வர்ணஸாங்கர்யமுண்டாய் பித்ருக்களுக்கு பிண்டோதக க்ரியைகள் இல்லாமற்போவதினால் குலத்தைக் கெடுத்தவருக்கும், குலத்திற்கும் பாவம் நேரிடும், அதினால் நரகம் முதலிய அனர்த்தங்களுண்டாகும்" என்று நீ சங்கிக்கும் (அச்சப்படும்) பாவம் உண்டாகமாட்டாது. ஸ்வதர்மங்களைச் செய்துகொண்டே மரணமடைந்துபோதிலும், அது ச்ரேயஸ்ஸேயாகும். பரதர்மங்கள் பயத்தைத் தரக்கூடியன (3-35). ஆகையால் எந்த பரமாத்மாவினால் எல்லா பிராணிகளிட வியாபாரங்களும் நடக்கின்றனவோ, எந்த பரமாத்மா இந்த ஜகத்தில் வியாபித்திருக்கிறானோ அத்தகைய பரமாத்மாவை தம் தம் வர்ணாச்ரமங்களுக்கு விஹிதமான கர்மங்களால் பூஜித்து, அவனிட ப்ரஸாதத்தினாலேயே மனிதன் ஞானாதி பலன்களைப் பெறுவான் (18-46).

க்ஷத்ரியர்களுக்கு தர்மஸாதனமான யுத்தமென்கிற பரமாத்மாவின் பூஜாரூபமான கர்மத்தைவிட ச்ரேயஸ்கரமான வேறு எந்த கர்மங்களுமில்லை. ஆகையால் க்ஷத்ரியனுன உனக்கு யுத்தமே பரம தர்மமென்றறிந்து, நீ அதற்காக பயப்படவேண்டாம் (2-31). புண்யவான்களான க்ஷத்ரியர்கள் ஸ்வர்க்கஸாதனமான இந்த பகவத் பூஜாரூபமான யுத்தத்தை அடைவார்கள் (2-32). இப்படி அநாயாஸமாய்க் கிடைக்கும் தர்மஸாதனமான இந்த யுத்தமென்னும் கர்மத்தைவிடில் ஸ்வதர்மத்தை விட்டு பாவத்தை யடைவாய் (2-32). 'அர்ஜுனன் பயத்தினால் ஸ்வதர்மத்தை விட்டான்' என்று ஜனங்கள் ஸபைகளில் சொல்லிக்கொள்ளுவார்கள். ஸம்பாவிதர்களுக்கு அபகீர்த்தியானது மரணத்தைவிட அதிகமாகும் (2-34). மஹாரதிகர்களான பீஷ்மாதிகள் அர்ஜுனன் பயந்து போர்க்களத்தினின்றும் பின் வாங்கினனென்று அறிவார்கள். முன் பீஷ்மாசார்யர் முதலிய மஹாரதிகர்களால் மஹாவீரனென்று மதிக்கப்பட்ட நீ இப்போது இழிவடைவாய் (2-35). உன்னிட பகைவர்கள் (துர்யோதனாதிகள்) வாயாற்சொல்லுவதற்குக்கூட அஸஹ்யமான வார்த்தைகளை யாடுவார்கள். இப்படி அவர்கள் உன்னிட ஸாமர்த்தியத்தை நிந்திப்பதைவிட மேலான துக்கம் வேறு யாது? (இதுவே அதிகமான துக்கத்தை உண்டாக்கக்கூடியது) (2-36). நீ 'யுத்தத்தில் மரணமடைந்தால் எனக்கு ஸ்வர்க்கம் கிடைக்கும், ஜயமடைந்தால் இராஜ்யம் கிடைக்குமாகையால் யுத்தம் செய்ய வேண்டு' மென்று நிச்சயித்து யுத்தத்திற்கு எழுந்திரு (2-37). அஞ்ஞானத்தினாலுண்டாயிருக்கும் 'யுத்தம் செய்யத்தகுந்ததோ அல்லவோ' என்கிற ஸந்தேகத்தை பகவானிட பூஜைக்காக க்ஷத்ரியர்கள் யுத்தரூபமான கர்மத்தைச் செய்யவேண்டியதே என்கிற ஞானமென்னும் கத்தியினால் வெட்டி ஞானத்தைப் பிறப்பிக்கக் கூடிய யுத்தத்தைச் செய் (4-42). ஜயம் கிடைத்து இராஜ்யத்தைப் பெற்று ஸுகமடையவேண்டுமென்கிற ஆசையை விட்டு, மற்றும் பராஜயமுண்டாய் இராஜ்யம் கிடைக்காமல் துக்கமுண்டாகுமென்று நினைக்காமல், க்ஷத்ரியர்களுக்கு விஹிதமான யுத்தரூபமான கர்மத்தை பரமாத்மாவின் ப்ரீதிக்காகவே செய். இப்படி நீ செய்வாயேயாகில் இந்த யுத்தகர்மத்தினால் உனக்கு பாவம் வருவதில்லை (2-38).

ஓ அர்ஜுனனே! நாங்கள் ஜயமடைவோமோ அல்லது துர்யோதனாதிகள் ஜயமடைவார்களோ என்று ஸந்தேகப்பட வேண்டாம். பூர்ணமான ஜகத் ஸம்ஹாரகமான காலமென்கிற பெயரையுடைய விஶ்வரூபத்தை உனக்குக் காட்டிய நான் (ஸ்ரீக்ருஷ்ணன்) இந்த யுத்தத்திற்கு வந்திருக்கும் தர்ம, பீம, அர்ஜுன, நகுல, ஸஹதேவன் முதலிய சிலரைத்தவிர மற்றெல்லோரையும் நாசப்படுத்துவதற்காக வந்திருக்கிறேன் (11-32). த்ரோண, பீஷ்ம, ஜயத்ரத, கர்ணன் முதலிய எல்லா வீரர்களும் என்னால் கொல்லப்பட்டவர்களைப்போலாயிருக்கின்றனர். நீ யுத்தத்தில் ஜயமடைவாய் (11-34). ஓ அர்ஜுனா! எழுந்திரு. என்னாலேயே கொல்லப்பட்டிருக்கும் சத்துருக்களின் ஸம்ஹாரத்திற்கு நீ காரணமாத்திரனாய், அர்ஜுனனே கொன்றானென்கிற கீர்த்தியை, நீ அடை. பகைவர்களை வென்று செல்வத்தால் நிறைந்த இராஜ்யத்தை அனுபவி (11-33).

க்ஷத்ரியர்களுக்கு விகிதமான யுத்தகர்மத்தினால் பகவத் விஷயகமான அபரோக்ஷ ஞானத்தை யடைந்து அவனிட ப்ரஸாதத்தினால் ஶாஶ்வதமான வைகுண்டாதி ஸ்தானங்களையடைவாய் (17-62). வெகு இரகசியமான அவசியமாய் அறியவேண்டிய இவ் விஷயத்தை உனக்காகச் சொல்லியிருக்கிறேன். இவ்விஷயங்களை எல்லாம் விசாரம் செய்து உன்னிஷ்டப்படிக்குச் செய் (18-63). ஓ அர்ஜுனனே! நீ எனக்கு மிகவும் நண்பன் (ஆகையால்) உனக்கு ஹிதத்தைச் சொல்லுகிறேன், கேள் (18-64). ஸ்ரீகிருஷ்ணனான என்னிடத்திலேயே மனதை வைத்து (பக்தி செய்து கொண்டு) எனக்காகவே அவஶ்யகமாய் கர்மங்களைச் செய். எனக்கு நமஸ்காரம் செய் (வணங்கு). இப்படிச்செய்வதினால் ஸ்ரீ பரமாத்மாவின் பாதங்களையே அடைவாய் (மோக்ஷமடைவாய்). நீ என்னிட விசேஷமான அன்புக்கு விஷயன் (உரியவன்). ஆகையால் இப்படி ப்ரதிஜ்ஞை செய்து சொல்லுகிறேன் (18-65). இதர தேவதைகளின் உத்தேசமாய் கர்மங்களைச் செய்யாமல் பரமாத்மாவையே ஶரணமடை. ஸ்ரீ பரமாத்மாவே உன்னை எல்லா பாவங்களிலிருந்தும் விடுவிப்பான். பீஷ்மாதிகளின் ஸம்ஹாரத்தினால் பாவமுண்டாய் நரகாத்யனர்த்தங்கள் உண்டாகுமென்று துக்கட்

படவேண்டியதில்லை. இந்த இரகசியமான கீதா ஶாஸ்த்ரத்தை தவம் புரிந்திராத மனிதனுக்கு உபதேசிக்கக்கூடாது. ஸ்ரீ பரமாத்மாவிடத்தில் பக்தியில்லாதவனுக்கு எப்பொழுதும் சொல்லக்கூடாது. குருக்களின் சேவை செய்யாதவனுக்குச் சொல்லக்கூடாது. யார் ஸ்ரீ பரமாத்மாவான என்னிடத்தில் பொறாமையுள்ளவனுயிருக்கிறானோ (ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா நிற்குணன், ஞானனந்தாதிகளில்லாதவன், நானே ஸ்ரீ கிருஷ்ணன் என்று அறிகிறானோ) அவனுக்கு உபதேசிக்கக்கூடாது. ஸ்ரீ கிருஷ்ணனை என்னிட பக்தருக்கு உபதேசிக்க வேண்டும். அத்தகைய பக்தருக்கு உபதேசிப்பவனே என்னிடத்தில் மேலான பக்தியைச் செய்து என்னை யே ய டை வா ன். இதற்கு ஸந்தேகமில்லை (18-67,68). இந்த கீதா ஶாஸ்த்ரத்தை உபதேசிக்கும் மனிதன் ஸ்ரீபரமாத்மாவின் (என்னிட) விசேஷமான ப்ரீதிக்குக் காரணனுவன். எனக்கு அவனைவிட அதிகமான ப்ரீதிக்குக் காரணனுனவன் மனிதருக்குள்ளே கிடையாது. பின்னும் இருக்கவில்லை, முன்னும் இருப்பதில்லை (18-69). இந்த பரமாத்ம விஷயகமான, தர்மத்திற்கு ஸாதகமான கீதா ஶாஸ்த்ரத்தை யார் அத்யயனம் செய்கிறானோ அவன் ஞானயஜ்ஞத்தினுல் பரமாத்மாவை பூஜித்தவனுகிறான் என்று என்னிட அபிப்ராயம் (18-70). இந்த கீதா ஶாஸ்த்ரத்தைக் கேழ்ப்பதினுல் பலனிருக்கிறதென்கிற ஆஸ்திக்ய புத்தியுள்ளவனுய் அஸூயாதி தோஷரஹிதனுய் யார் கேழ்க்கிறானோ அவனும் முக்தனுய் புண்ய கர்மங்களைச்செய்யும் மனிதர்களடையும் மங்களகரமான லோகங்களை அடைகிறான். இந்த ஶாஸ்த்ரத்தை படனம் செய்பவர் (படிப்போர்) மேற்கூறிய பலனைவிட அதிகமான பலனை அடைவார்கள். ப்ரவசனம் செய்பவர்கள் (பாடம் சொல்பவர்கள்) தம் தம்மிட யோக்யதானுஸாரமாய் அத்யயனம் செய்தவர்களைவிட அதிகமான பலனையடைவார்களென்று சொல்வானேன்? (18-71). ஓ அர்ஜுனு! நான் சொல்லிய விஷயத்தை ஒரே மனதினுல் கேட்டாயோ? அ ஜ் ஞா ன த் தி னு லு ண் டா யி ரு க் கு ம் உன்னிட ப்ரமை தொலைந்ததோ இல்லையோ? என்று ஸ்ரீ கிருஷ்ணன் கேழ்க்கவே, அதற்கு அர்ஜுனன்—ஓ! கிருஷ்ணனே! உன்னிட அனுக்கிரகத்

திஞல் உன்ஞல் செய்யப்பட்ட உபதேசத்திஞல் என்னிட அஜ்ஞானம் துலைந்தது. ஸரியான ஸ்மிருதி (நினைவு) உண்டாயிற்று. ஸந்தேகமில்லாதவஞனேன். நீ சொல்லியவாறு க்ஷத்ரிய வர்ணத்திற்கு யோக்யமான யுத்தமென்னும் கர்மத்தைச் செய்கிறேன் என்று ஒத்துக்கொண்டனன்.

இவ்விதமாக அர்ஜுனனை காரணமாக்கிக்கொண்டு, ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா ஸாத்விகஜீவர்களுக்காக தத்வங்களை உபதேசித்திருக்கிஞர். ஆகையால் அஞதியான ப்ரக்ருதியிஞல் கட்டுப்பட்டிருக்கும் ஸாத்விக ஜீவர்கள் ஶரீர ஸம்பந்த வியோகரூபமான பிறப்பு இறப்புகளால் உண்டாகும் பலதுக்கங்களைப் போக்கிக்கொண்டு, ஸுகரூபமான மோக்ஷத்தை யடைவதற்காக இந்த ப்ரக்ருதிபந்தத்தினின்று விடுவித்துக்கொள்ள வேண்டியது ஆவஶ்யகம்.

எப்படி விலங்கிஞல் கட்டப்பட்ட மனிதன் இராஜனிட அடிமையோ, மற்றும் இராஜனிட அருளிஞலேயே அக்கட்டினின்றும் விடுதலையடையவேண்டுமோ, அப்படியே இந்த ப்ரக்ருதிபந்தம் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவின் அதீனம். அவனிட அருளிஞலேயே அது துலையவேண்டும். அவனிட அருளுண்டாவதற்கு (நான் இந்த ஜீவனை ப்ரக்ருதிபந்தத்தினின்றும் விடுவிக்கவேண்டும் என்கிற விருப்பம் அவனுக்கு உண்டாவதற்கு) மனிதன் தன்னிடத்திலும் தன்னைச் சேர்ந்தவர்களிடத்திலும் செய்யும் ஸ்னேஹத்தைவிட வெகுமடங்கு அதிகமான, எத்தகைய தடங்கல்கள் வந்தபோதிலும் அசையாமலிருக்கும், நிர்வ்யாஜமான (அல்ப பலாபேக்ஷை இல்லாத) சினேகரூபமான, பரமாத்மாவிடத்தில் செய்யும் பக்தியே காரணமாகும். எப்படி மகனிடத்தில் அதிகமான ப்ரீதி(ஸ்னேஹம்)உண்டாவதற்கு அவனிட ஶாந்த்யாதிகுணங்கள், திரவ்ய சம்பாதகஶக்தி, ஞானம் இவைகள் காரணங்களாகுமோ, அப்படியே பரமாத்மாவிடத்திலிருக்கும், ஜகத்பித்ருத்வம், இரக்ஷகத்வம், ஸர்வஜ்ஞத்வம், ஸர்வ ஶக்திமத்வம் முதலிய அளவில்லா குணங்களின் அபரோக்ஷஞானம், அவனிடத்தில் செய்யவேண்டிய பக்திக்குக் காரணமாகும்.

**ஏதத் த்வயா ந விஜ்ஞேயம் ரூபவானிதி த்ருஶ்யதே |**
**இச்சன் முஹூர்த்தான்னஶ்யேயமீஶோஹம் ஜகதாம் குரு: ||**
**மாயா ஹ்யேஷா மயா ஸ்ருஷ்டா யன்மாம் பஶ்யஸி நாரத ||**

என்கிற பாரதவசனானுஸாரமாய் தேவதத்தனே முதலிய எல்லா ஜனங்களும், கருப்பு, வெளுப்பு முதலிய வர்ணங்களுள்ள தேகங்களுள்ளவர்களாகையால் எப்படி நாம் அவர்களைக் காணவேணுமென்கிற எண்ணம் நமக்கில்லாவிடினும், நம்மிட ப்ரயத்னத்தினாலேயே (கட்டாயமாய்) காணுவதற்கு ஸாத்யமானவர்களோ, அப்படியே பரமாத்மா அவனிட எண்ணம் (ப்ரஸாதம்) இல்லாவிடின் நம்மிட முயற்சியினால் காணுவதற்கு ஸாத்யனல்ல. பரமாத்மாவுக்கு 'நான் இந்த ஜீவனுக்குக் காணப்படக்கூடாது' என்கிற எண்ணமுண்டாயின் அன்னொடியிலேயே காணப்படாதவனாவான். அல்லது இந்த ஜீவனுக்கு 'நான் காணப்படவேணும்' என்கிற எண்ணமுண்டாயின் காணப்படுவான். ஆகையால் பரமாத்மாவின் தர்சனமாவதற்கு அவனிட ப்ரஸாதம் (நான் இவனுக்குக் காணப்படவேண்டுமென்கிற எண்ணம்) காரணமாகும். பணத்தைக் கொடுக்கும் திரமையாகிலும், இதர திரமையாகிலுமில்லாத ஒரு மனிதன் ஓர் பிரபுவின் தரிசனத்திற்காக அந்த ப்ரபுவின் வீட்டு வாயிலில் எப்போதும் உட்கார்ந்து அவனையே த்யானித்துக் கொண்டு, அவனிட குணங்களைப் புகழ்ந்துகொண்டு சிலநாள் காத்திருந்தால், அந்த ப்ரபுவுக்கு இவனிடத்தில் தயவு உண்டாய் எப்படி தர்சனம் கொடுப்பானோ, அப்படியே பக்தனான ஸாத்விக புருஷன் எப்போதும் பரமாத்மாவின் த்யானத்தைச் செய்து கொண்டே, அவனிட குணங்களை புகழ்ந்துக்கொண்டிருந்தால், பரமாத்மா அவனிடத்தில் ப்ரஸன்னனாய் "யதா பஶ்ய: பஶ்யதே ருக்மவர்ணம் கர்தாரமீஶம் புருஷம் ப்ரஹ்மயோனிம்" இது முதலிய ஶ்ருதிகளில் சொல்லியவாறு ஜகஜ்ஜன்மாதிகர்த்ருத்வம் முதலிய குணங்களுடன் கூடியவனாய் தர்ஶனம் கொடுப்பான். (ஈஶ்வரனிட அபரோக்ஷஜ்ஞான முண்டாகும்)

**"ஶ்ருதி விப்ரதிபன்னா தே யதா ஸ்தாஸ்யதி நிஶ்சலா |**
**ஸமாதாவசலா புத்திஸ்ததா யோகமவாப்ஸ்யஸி || (2-53)**

என்று சொல்லியவாரு—பரமாத்மா இல்லையென்றும், அவன் ஶூன்ய னென்றும், ஜீவரூபனென்றும், அவனிடத்தில் எட்டே குணங்க ளிருக்கின்றனவென்றும் சொல்லும் பல துர்மதங்களிருக்க இவ் விதமாகவே அவனை தியானிக்கவேணுமென்று மனது ஸ்தைர்ய மடையாமல் (கட்டியாகாமல்) இருப்பதினால் ப்ராஹ்மமீமாம்ஸா ஶாஸ்த்ரத்தில் சொல்லிய யுக்திகளால் அந்தந்த துர்மதங்களை அப்ராமாணிகங்களென்று நிச்சயித்த அதிகாரி—பரமாத்மா ஸர் வோத்தமன், ஜீவாதிகளைவிட பின்னன் (வேறுபட்டவன்) ஸர்வஜ் ஞத்வமே முதலிய அளவில்லா குணங்களால் பூர்ணன் (நிறைந்த வன்). ஜகஜ்ஜன்மாதிகர்த்தா என்ற த்ருடமான நிச்சயத்தை யடைந்தபிறகு, பரமாத்மா குணபூர்ணன் என்கிற இது முதலான ரீதியாய் தியானிக்கும் வழியை யடைவான். ஆகையால் இத்தகைய த்யானத்திற்கு ஶாஸ்திர விசாரம் காரணமாகும். அதற்கு "உப தேக்ஷ்யந்தி தே ஞானம் ஞானினஸ்தத்வதர்ஶின:" என்று சொல் லியவாரு தத்வங்களை யறிந்த குருக்களின் உபதேசம் காரண மாகும். " அனன்யப்ரோக்தே கதிரத்ர நாஸ்தி.........ப்ரோக் தான்யேனைவ ஸுஞ்ஞானாய ப்ரேஷ்ட" என்ற காடக ஶ்ருதி சொல்லுவதைப்போல் அத்வைதிகளால் (ஜீவேஶ்வராபேதஞானி களால்) உபதேஶமடைவானாகில் 'கதி: நாஸ்தி' மோக்ஷஜனக மான ஞானமுண்டாவதில்லை. ஜீவேஶ்வரபேதஞானியினால் உப தேஶமடைந்தால்தான் மோக்ஷத்தைத் தரக்கூடிய மேலான ஞான முண்டாகிறதென்று சொல்லியிருப்பதினால் த்வைதியான குருக் களின் உபதேஶத்தினாலுண்டான ஞானமே அபரோக்ஷஞானத் தின் வழியாய் மோக்ஷத்திற்குக் காரணமாகும். அந்த குருக்களின் சேவை செய்து, அவரை வணங்கி, மன்றாடின் (பிரார்த்தித்தால்) அவர் உபதேஶிப்பார். அவரிட உபதேசத்தினால் ஞானமுண்டா வதற்கு அந்த:கரணம் சுத்தமாயிருக்கவேண்டும். அந்த:கரண ஶுத்திக்கு யஜ்ஞம், தானம், தபஸ்ஸு இவைகள் காரணங்களா கையால் இவைகளை அவஶ்யகமாய்ச் செய்யவேண்டும் (18-5). இப்படி ஶாஸ்த்ரத்தினால் ஸித்தமாயிருப்பதினால் ப்ராஹ்மணர், க்ஷத்ரியர், வைஶ்யர், சூத்ரர், வர்ணபாஹ்யர் (ஸங்கரஜாதியர்) என்று ஐந்து வகுப்பாராயிருக்கும் மனிதர்களில் ஸாத்விக ஜீவர்

கள் அவரவர்களுக்கு ஶாஸ்த்ரவிஹிதமான கர்மங்களைச் செய்து அவைகளை ஈஶ்வரனிடத்தில் ஸமர்ப்பித்துக்கொண்டே பின் சொல்லியவாறு அபரோக்ஷ ஞானத்தை யடைந்து, அதின் மூலமாய் மோக்ஷத்தை யடையக்கடவார்கள்.

---

## ஈஶ்வர ப்ரகரணம்.

பரப்ரஹ்மமாவான ஸ்ரீ கிருஷ்ணன் புத்தீந்த்ரியாதிகளுக்கு அபிமானிகளான எல்லா தேவதைகளைவிட மேலானவன் (3-42,43). ஸர்வஜ்ஞன். ஜகத்துக்கு ஸ்வாமி (4-5). பிறப்பிறப்பில்லாதவன். எல்லாபூதங்களுக்கும் ஸ்வாமி. தன்னிச்சையினாலேயே தர்மத்தை இரக்ஷிப்பதற்காகவும் ஸாதுக்களை இரக்ஷிப்பதற்காகவும், அயோக்கியர்களை தண்டிப்பதற்காகவும் அவதரிப்பவன் (4-7,8). லோகவிலக்ஷணமான ஜன்மகர்மங்களையுடையவன் (4-9). குணகர்மங்களுடன் கூடிய ப்ராஹ்மணாதி நான்கு வர்ணங்களையும் பிறப்பிப்பவன். தனக்கு பிறப்பிப்பவனில்லாதவன் (4-13). கர்மங்களின் ஸம்பந்தமற்றவன். கர்மபலத்திலாசையில்லாதவன். ஸர்வாந்தர்யாமியாய் எங்கும் இருப்பவன் (4-14). (எல்லா பதார்த்தங்களிலுமிருப்பவன்)ஸர்வபூதங்களுக்கும் ஆதாரமானவன். ஸமன் (6-29). எல்லா பதார்த்தங்களிலும் நிர்தோஷியாயிருப்பவன். அந்தந்த பதார்த்தங்களின் தோஷத்தின்பொருட்டுண்டாகும் தோஷமில்லாதவன். ஒருவனாகவே எல்லா பூதங்களிலும் வஸிப்பவன். இடங்களின் பேதத்தினாலுண்டாகும் பேதமில்லாதவன். ஸ்வகதபேதம் (தன்னிட ரூபகுணக்ரியாதிகளின் பேதம்) இல்லாதவன் (6-31). எல்லா ஜகத்தையும் படைப்பவன். நாசம் செய்பவன் (7-6). எல்லா வஸ்துக்களைவிட மேலானவன். தன்னைவிட மேலான வஸ்துவில்லாதவன். இரத்தினங்களுக்கு ஸூத்ரத்தை (நூலை)ப்போல் எல்லா ஜகத்திற்கும் ஆஶ்ரயன் (7-7).

ஜலத்திலுள்ள இரஸத்திற்கு நியாமகனாய் இரஸ ஶப்தவாச்யனாய் இரஸத்திலிருப்பவன். ஸூர்யசந்திரர்களிடமிருக்கும் ப்ரபைக்கு (காந்திக்கு) நியாமகனாய் ப்ரபாஶப்தவாச்யனாய் ப்ரபை

யிலிருப்பவன். ஸகல வேதங்களிலும் ஶ்ரேஷ்டமான ப்ரணவ (ஓங்கார)த்திற்கு நியாமகனும் ப்ரணவஶப்தவாச்யனும் ப்ரணவத்திலிருப்பவன். ஆகாஶத்திலிருக்கும் ஶப்தத்திற்கு நியாமகனும் ஶப்தமென்னும் ஶப்தத்திற்கு வாச்யனும் ஶப்தத்திலிருப்பவன். புருஷரிடத்திலிருக்கும் பௌருஷத்திற்கு நியாமகனும் பௌருஷஶப்தவாச்யனும் பௌருஷத்திலிருப்பவன் (7-8). ப்ருத்வியிலுள்ள கந்தத்திற்கு நியாமகனும் கந்தஶப்தவாச்யனும் கந்தத்திலிருப்பவன். ஸூர்யனிடமிருக்கும் தேஜஸ்ஸுக்கு நியாமகனும் தேஜஶ்ஶப்தவாச்யனும் தேஜஸ்ஸிலிருப்பவன். ஸர்வ பூதங்களிலுள்ள ஜீவர்களுக்கு நியாமகனும் ஜீவ ஶப்த வாச்யனும் ஜீவர்களிலிருப்பவன். தபஸ்விகளிடமிருக்கும் தபஸ்ஸுக்கு நியாமகனும் தபஶ்ஶப்தவாச்யனும் தபஸ்ஸிலிருப்பவன் (7-9.) ஸர்வ பூதங்களுக்குக் காரணன். அனாதி. புத்திமான்களின் புத்திக்கு நியாமகனும் புத்திஶப்தவாச்யனும் புத்தியிலிருப்பவன். தேஜஸ்விகளிலுள்ள தேஜஸ்ஸுக்கு நியாமகனும் தேஜஶ்ஶப்தவாச்யனும் தேஜஸ்ஸிலிருப்பவன் (7-10). பலவந்தரின் காமராகரஹிதமான பலத்திற்கு நியாமகனும் பலஶப்தவாச்யனும் பலத்திலிருப்பவன். ப்ராணிகளிடமிருக்கும் தர்மத்திற்கு விருத்தமல்லாத காமத்திற்கு நியாமகனும் காமஶப்தவாச்யனும் காமத்திலிருப்பவன் (7-11).

எந்த ஸாத்விகராஜஸதாமஸ பதார்த்தங்களுண்டோ அவைகளைப் பிறப்பிப்பவன். அப்பதார்த்தங்களெல்லாவற்றிற்கும் ஸ்வாமி. அப்பதார்த்தங்களுக்கு அதீனனல்லாதவன் (7-12). குணத்ரயங்களால் மோஹிதரான ஜனங்களால் அறியப்படாதவன். த்ரிகுணாதீதன் (முக்குணங்களுக் கெட்டாதவன்) (7-13). அஸுரர்களால் அடையப்படாதவன் (7-15). ஞானிகளுக்குப் பிரியன். ஞானிகளிடத்தில் ப்ரீதி செய்பவன். (7-17). வாஸுதேவன் (எல்லா இடத்திலும் வஸிப்பவன்). க்ரீடாதிகுண விஶிஷ்டன் (7-19). அன்ய தேவதைகளை உபாஸிப்பவர்களுக்கு அவாளவாளிட யோக்யதானுஸாரமாய் அந்தந்த தேவதைகளிடத்தில் ஶ்ரத்தையைப் பிறப்பிப்பவன் (7-21). அன்யதேவதைகளைப் பூஜிக்கும் அல்பஞானிகளுக்கு அவாளவாளிட யோக்யதானுஸாரமாய் நஶ்வரமான (ஶாஶ்வத

மல்லாத = அழிவுள்ள) பலன்களைக்கொடுப்பவன். தன்னிட பக்தர் களால் பிராப்யன் (பெறத்தக்கவன்) (7-22,23). நாசமில்லாத மேலான ஸ்வபாவமுள்ளவன் (7-24). அவ்யக்தன் (எல்லோருக் கும் காணப்படாதவன்) (7-25). பூதபவிஷ்யத்வர்த்தமான காலங் களிலுள்ள வஸ்துக்களின் ஞானமுள்ளவன் (7-26).

அதியஜ்ஞன், யஜ்ஞாதிஷ்டாதா (8-4). உத்தம புருஷன். திவ்யன். ஸ்ருஷ்ட்யாதிகுண விஶிஷ்டன் (8-8). ஞானி. அநாதி. நியாமகன். எல்லா வஸ்துக்களைவிட சிறியவன். எல்லாவற்றையும் தரிப்பவன். ஸாகல்யமாய் (ஸம்பூர்ணமாய்) தெறிந்துகொள்ளுவ தற்கு முடியாத ரூபமுடையவன். ஸூர்யனிட வர்ணத்தைப்போன்ற வர்ணமுள்ளவன். ப்ரக்ருதியைவிட வேரானவன். (ப்ரக்ருதி பந்த மில்லாதவன்) (8-9). திவ்யன். ஸூர்யமண்டலத்திலிருப்பவன் (8-10). வேதமறிந்த ஜனங்களால் அக்ஷரனென்று அழைக்கப் படுபவன். விரக்தர்களான யதிகளால் பிராப்யன், ப்ரஹ்மசர்ய வ்ரதத்திற்கு உத்தேஶ்யன் (8-11). வ்யக்தமான பூதஸமூகத்தை விட வேரானவன். அவ்யக்தன். உத்தமன். எல்லா ப்ராணிகள் நாசமடைந்தபோதிலும் தான் நாஶமடையாதவன் (8-20) அக்ஷரஶப்தவாச்யன், பரமப்ராப்யன். மனிதன் எந்த பரமாத் மாவை யடைந்து மருபடியும் ஜன்மமடைய மாட்டானே அத்த கைய ஸ்வரூபமுள்ளவன் (8-21). எல்லா ப்ராணிகளுக்கும் ஆஶ் ரயன். ஸர்வவ்யாப்தன். அனன்யமான (வேறொருவரில் செய்யப் படாத) பக்தியினால் அடைவதற்கு யோக்யன் (8-22).

அவ்யக்தமான (ஜனங்களுக்குக் காணப்படாத) ரூபத்தினால் ஜகத்தை வ்யாபித்திருப்பவன். ஸமஸ்த பூதங்களுக்கும் ஆஶ் ரயன், பூதங்களை ஆஶ்ரயித்திருப்பவன் (9-4). பூதங்கள் தன்னிட மிருந்தபோதிலும் பூதங்களின் குணஸம்பந்தமில்லாதவன். பூதங் களைத் தரித்திருப்பவன். ஸமஸ்த பூதங்களுக்கும் உத்பாதகன் (9-5). எப்படி ஆகாயம் வாயுவுக்கு ஆதாரமாயினும் வாயுவின் தர்மங்களின் ஸம்பந்தமில்லாததோ அப்படியே பூதங்களுக்குத் தான் ஆதாரமாயினும் பூதங்களின் தர்மஸங்கிரமம் (கலப்பு) இல்லாதவனாதலால் பூதங்களுக்கு அனாதாரனென்று சொல்லப் படுபவன். (9-6). பூதங்களின் லயத்திற்கு அதிகரண (காரண)

மாயிருக்கும் ப்ரக்ருதிக்கு ஸ்வாமி (9-7). தன்னதீனமான ப்ரக்ருதியை உபாதான (மாறுதலடையும்) காரணமாகச் செய்துகொண்டு பராதீனமான இவ்வெல்லா பூதஸமூகத்தையும் ஸ்ருஷ்டி காலத்தில் அடிக்கடி ஸ்ருஜிப்பவன் (9-8). உதாஸீனனைப்போலிருப்பதினால் ஜகத் ஸ்ருஷ்ட்யாதி வியாபாரங்களைச் செய்யினும் அக்கர்மங்களின் பலனையடையாதவன் (9-9). ப்ரக்ருதிக்கு ஸ்வாமியாயிருந்து ப்ரக்ருதியினால் சராசராத்மகமான ஜகத்தை ஸ்ருஜிப்பவன் (9-10). மஹா ஐஶ்வர்யமுடையவன். உத்தம வஸ்து (9-11).

க்ரதுவுக்கு (யாகத்திற்கு) நியாமகனாய் க்ரதுவிலிருப்பவன். யஜ்ஞபோக்தா. ஸ்வதா (பித்ருக்களுக்கு ஶ்ராத்தாதிகளில் கொடுக்கப்படும் அன்னாதிகளுக்கு) நியாமகனாய் ஸ்வதையிலிருப்பவன். ஔஷதநியாமகனாய் ஔஷதியிலிருப்பவன். மந்த்ர நியாமகனாய் மந்த்ரத்திலிருப்பவன். மந்த்ரப்ரதிபாத்யன். ஆஜ்ய (நெய்க்கு) நியாமகனாய் ஆஜ்யத்திலிருப்பவன். அக்னிக்கு நியாமகனாய் அக்னியிலிருப்பவன். ஹுதமான (ஹோமம் செய்யப்பட்ட) பதார்த்தத்திற்கு நியாமகனாய் ஹுதமான பதார்த்தத்திலிருப்பவன் (9-16). இந்த ஜகத்திற்கு தந்தை, தாய், தாரகன், பிதாமகன் (பாட்டன்). வேத்யன் (அறியப்படவேண்டியவன்). பவித்ரமான (ஶுத்தமான) வஸ்து. ஓங்கார ப்ரதிபாத்யன். ரிங்நியாமகனாய் ரிக்ஶப்தவாச்யனாய் ரிக்குகளிலிருப்பவன். ஸாமவேத நியாமகனாய் ஸாமஶப்தவாச்யனாய் ஸாமவேதத்திலிருப்பவன். ஸாமவேத ப்ரதிபாத்யன். யஜுர்வேத நியாமகனாய் யஜுஶ்ஶப்தவாச்யனாய் யஜுர்வேதத்திலிருப்பவன் (9-17). பிராப்யன். இரக்ஷகன். ஸ்வாமி. எல்லோரையும் பிரத்யக்ஷமாய் காணுகிறவன். எல்லோருக்கும் ஆஶ்ரயன். (போஷிப்பவன்) ஶரண்யன், ஸ்னேஹிதன். உத்பாதகன். நாசகன். தாங்குபவன், பிரளயகாலத்தில் இந்த எல்லா ஜகத்தையும் தன்னிடத்தில் வைத்துக்கொள்ளுபவன். பீஜபூதன் (விதைபோன்றவன்) (9-18). ஸூர்யாதிகளிடமிருந்து தாபத்தையுண்டாக்குபவன். மேக சக்கிரத்திலிருந்து மழை பொழியச்செய்பவன். மோக்ஷத்தைக் கொடுப்பவன். நாஶத்தையுண்டாக்குபவன் (9-19). ஸர்வயஜ்ஞ போக்தா. ஸர்வயஜ்ஞ ஸ்வாமி (19-24). ஸர்வ

பூதங்களிலும் ஸமனுயிருப்பவன். நிஷ்காரணமாய் த்வேஷமில்லா தவன். நிஷ்காரணமாய் பிரியமில்லாதவன் (9-29).

தேவதைகளாலும், ரிஷிகளாலும் அறிந்துகொள்ளுவதற்கு முடியாத மஹாமஹிமையுடன் கூடினவன். எல்லா தேவதை களுக்கும், எல்லா ரிஷிகளுக்கும், மனுஷ்யர்களுக்கும் காரணன் (10-2). பிறப்பில்லாதவன். காரணனில்லாதவன். எல்லா ஜகத்துக் கும் முக்ய ஸ்வாமி (10-3). பூதங்களுக்கு (பிராணிகளுக்கு) புத்தி, ஞானம், அகார்யத்தில் விருப்பமின்மை அல்லது மித்யா ஞான மின்மை, க்ஷமை (பொருமை), ஸத்யம், இந்திரிய நிக்ரகம், பகவன் னிஷ்டாபுத்தி, ஸுகம், துக்கம், பிறப்பு, இறப்பு, பயம், அபயம், அஹிம்ஸை, ஸுகதுக்கங்களைப்போன்ற த்வந்த்வங்களின் நிர் விகாரதை, (விகாரமின்மை) துஷ்டி, தபஸ்ஸு, தானம், கீர்த்தி, அபகீர்த்தி முதலியவைகளைக் கொடுப்பவன் (10-4,5). இந்த பிர ஜைகளெல்லோரும் யாரிட வம்சத்தைச் சேர்ந்தவர்களோ அத்த கைய மனுக்களாலும், ஸப்த மஹாரிஷிகளாலும், ஸனகாதிமானஸ புத்ரர்களாலும் தியானிக்கப்படுபவன் (10-6). எல்லா ஜகத்துக் கும் உத்பாதகன். ஸர்வப்ரவர்த்தகன். (10-8). ப்ரீதி பூர்வகமாய் தன்னை பஜிப்பவர்களுக்கு மோக்ஷத்துக்கு ஸாதனமான ஞானத் தைக் கொடுப்பவன். (10-10). அந்த ஞானத்தினுல் அஜ்ஞானத் தினுலுண்டாயிருக்கும் பந்தத்தை நாசப்படுத்துபவன் (10-11). பரப்ரஹ்மம். உத்தமதேஜோரூபன். பவித்திரன். உத்தமன். புருஷன் (பூர்ணஷட்குணன்) எப்போதும் ஒரே விதமாயிருப்ப வன். திவ்யன், (லோக விலக்ஷணன்). ஆதிதேவன். வ்யாப்தன் (10-12). தேவதானவர்களால் தெறிந்துகொள்ளுவதற்கு அஸாக் யமான ஸ்வரூபமுடையவன் (10-14). தன்னுல் தன்னையே தெறிந் துக்கொள்ளுவதற்கு யோக்யன். பூதோத்பாதகன். பூதநியா மகன். தேவதைகளுக்கு தேவத்தன்மையை யளிப்பவன். ஜகத் துக்கு ஸ்வாமி. (10-15). எல்லா பிராணிகளின் ஹ்ருதயங்களுக்கு நியாமகனுய் அவைகளில் வஸிப்பவன். ஸர்வபிராணிகளைப் படைப்பவன். இருப்புக்குக்காரணன். நாசத்திற்குக்காரணன். (10-20). ஸூர்யர்களில் கார்த்திக மாதத்திற்கு நியாமகனுன விஷ்ணு என்கிற ஸூர்யன்.

ப்ரகாஶிக்கும் பதார்த்தங்களில் ஶ்ரேஷ்டனான ஸூர்ய னுக்கு நியாமகனாய் இதர தேஜஸ்ஸுள்ள பதார்த்தங்களைவிட ஆதிக்யத்தைக் கொடுத்துக்கொண்டே, வேதஶப்தங்களால் அறிய வருபவனாதலால் ரவிஶப்தவாச்யனாய் ரவியிலிருப்பவன். நாற்பத் தொன்பது மருத்தேவதைகளில் ஶ்ரேஷ்டனான மரீசிக்கு நியா மகனாய் ஸஜாதீயமான இதர வஸ்துக்களில் மரீசிக்கு மேன் மையை கொடுத்துக்கொண்டே மேகங்களை அசையச்செய்து கொண்டிருப்பதால் மரீசி என்ற பெயருடன் மரீசியிலிருப்ப வன். நக்ஷத்ரங்களில் ஶ்ரேஷ்டனான சந்திரனுக்கு நியாமகனாய் ஆஹ்லாதகரமான பதார்த்தங்களில் சந்திரனுக்கு ஆதிக்யத்தைக் கொடுத்துக்கொண்டே, அதிசயமான ஸுகமுடையவனாகையால் ஶஶீ என்கிற பெயருள்ளவனாய் சந்திரனிடமிருப்பவன் (10-21). வேதங்களில் ஶ்ரேஷ்டமான ஸாமவேதத்திற்கு நியாமகனாய் இதர வேதங்களைவிட ஸாமவேதத்திற்கு ஆதிக்யத்தைக் கொடுத் துக்கொண்டே, எல்லா இடங்களிலும் ஸமனாயிருப்பதினாலும், எல்லாவற்றையும் அறிந்தவனாகையினாலும் ஸாமவேதஶப்தவாச்ய னாய் ஸாமவேதத்திலிருப்பவன். தேவதைகளில் சிரேஷ்டனான இந்த்ரனுக்கு நியாமகனாய் இதர தேவதைகளைவிட இந்த்ரனுக்கு ஆதிக்யத்தைத் தந்துகொண்டே, ஸர்வ தேஶங்களிலுமிருப்ப தினால் வாஸவ: என்கிற பெயருடையவனாய் இந்த்ரனிலிருப்ப வன். இந்திரியங்களில் ஶ்ரேஷ்டமான மனதுக்கு நியாமகனாய் இதர இந்திரியங்களைவிட மன இந்திரியத்திற்கு ஆதிக்யத்தைத் தந்துகொண்டே, ஞானரூபனாகையால் மனஶ்ஶப்தவாச்யனாய் மனதிலிருப்பவன். ப்ராணிகளிடமிருக்கும் சேதனத்திற்கு (அதிக ஸ்மரண ஶக்திக்கு) நியாமகனாய் ஞான நியாமகனாகையால் சேதனாஶப்தவாச்யனாய் சேதனத்திலிருப்பவன் (10-22). ருத்ரர் களில் ஶ்ரேஷ்டனான ஶங்கரனென்கிற ருத்ரனுக்கு நியாமகனாய் இதர ருத்ரர்களைவிட இவனுக்கு ஆதிக்யத்தைத்தந்து கொண்டே, ஸுகத்திற்குக் காரணனாகையால் ஶங்கரனென்கிற பெயருடன் ஶங்கரனிலிருப்பவன். யக்ஷ ராக்ஷஸர்களில் ஶ்ரேஷ்ட னான குபேரனுக்கு நியாமகனாய் ஸஜாதீயரில் இக்குபேரனுக்கு ஆதிக்யத்தைத் தந்துகொண்டே தனத்திற்கு ஸ்வாமியாகையால்

வித்தேஶ ஶப்தவாச்யனாய் குபேரனிட மிருப்பவன். அஷ்ட வஸுக்களில் ஶ்ரேஷ்டனான அக்னிக்கு நியாமகனாய் இதர வஸுக்களைவிட இவனுக்கு மேன்மையைத் தந்துகொண்டே, எல்லாவற்றையும் ஶுத்தப்படுத்துவதினால் பாவகநாமகனாய் அக்னியிலிருப்பவன். பர்வதங்களில் ஶ்ரேஷ்டமான மேரு பர்வதத்திற்கு நியாமகனாய் இதர பர்வதங்களைவிட இதற்கு மேன்மையைத் தந்துகொண்டே, தனக்கு ப்ரேரகனில்லாதவனாகையால் மேரு ஶப்தவாச்யனாய் மேரு பர்வதத்திலிருப்பவன் (10-23). புரோஹிதர்களில் சிரேஷ்டனான ப்ருஹஸ்பதிக்கு நியாமகனாய்ப் புரோஹிதர்களில் இவருக்கு மேன்மையைத் தந்துகொண்டே ப்ரஹ்மாதிகளுக்கு யஜமானனாகையால் ப்ரஹஸ்பதி என்கிற பெயருள்ளவனாய் ப்ரஹஸ்பதியிலிருப்பவன். ஸேனாபதிகளில் ஶ்ரேஷ்டனான ஸ்கந்தனுக்கு நியாமகனாய் இதர ஸேனாபதிகளைவிட இவனுக்கு ஆதிக்யத்தைத் தந்துகொண்டே தன்னால் ஜகத்தை வெளிப்படுத்தப்படுவதினால் ஸ்கந்தனென்கிற பெயருடையவனாய் ஸ்கந்தனிடமிருப்பவன்.ஸரோவரங்களில் ஶ்ரேஷ்டமான ஸமுத்ரத்திற்கு நியாமகனாய் இதர ஸரோவரங்களைவிட ஸமுத்ரத்திற்கு மேன்மையைத் தந்துகொண்டே ஸாரபோக்தாவாகையால் ஸாகர நாமகனாய் ஸமுத்ரத்திலிருப்பவன் (10-24). மகரிஷிகளில் ஶ்ரேஷ்டரான ப்ருகு மஹர்ஷிக்கு நியாமகனாய் இதர மகர்ஷிகளைவிட இவருக்கு ஆதிக்யத்தைத் தந்துகொண்டே, விரோதிகளைச் சுடுவதினால் ப்ருகுஶப்தவாச்யனாய் ப்ருகுமஹர்ஷியினுள்ளிருப்பவன். வாக்யங்களில் முக்யமான ஓங்காரத்திற்கு நியாமகனாய் இதர அக்ஷரங்களைவிட இதற்கு மேன்மையைத் தந்துகொண்டே, முக்யனாகையால் ஏகஶப்தவாச்யனாய் நாலுவிதமான நாசமில்லாதவனாகையால் அக்ஷரஶப்த வாச்யனாய் ஓங்காரத்திலிருப்பவன். யஜ்ஞங்களில் மேலான ஜபயஜ்ஞத்திற்கு நியாமகனாய் இதர யஜ்ஞங்களைவிட இதற்கு மேன்மையைத் தந்துகொண்டே, பிறந்தவர்களை ரக்ஷிப்பதினாலும், பூஜ்யனானதினாலும் ஜபயஜ்ஞ நாமகனாய் ஜபயஜ்ஞத்திலிருப்பவன். அசையாப்பதார்த்தங்களில் மேலான ஹிமவத்பர்வதத்திற்கு நியாமகனாய் இதர பர்வதங்களைவிட இதற்கு மேன்மையைத் தந்துகொண்டே ஹ்ரீ: ஶ்ரீ: என்கிற

ரூபங்களுள்ள மஹாலக்ஷ்மிக்கு ஆஶ்ரயனானபடியால் ஹிமாலய ஶப்தவாச்யனாய் ஹிமவத்பர்வதத்திலிருப்பவன் (10-25). ஸர்வ விருக்ஷங்களில் ஶ்ரேஷ்டமான அஶ்வத்த விருக்ஷத்திற்கு நியாமகனாய் இதர விருக்ஷங்களைவிட இதற்கு மேன்மையைத் தந்துகொண்டே குதிரையைப்போலிருப்பவனாகையால் அஶ்வத்த நாமகனாய் அஶ்வத்த விருக்ஷத்திலிருப்பவன். தேவரிஷிகளில் சிரேஷ்டனான நாரதமஹரிஷிக்கு நியாமகனாய் இதர தேவரிஷிகளை விட இவருக்கு மேன்மையைத் தந்துகொண்டே, ஞானத்தைத் தருபவனாகையால் நாரதரென்னும் பெயருடையவனாய் நாரதருக்குள்ளிருப்பவன். கந்தர்வருள் மேலான சித்ரரதனுக்கு நியாமகனாய் இதரகந்தர்வரைவிட இவனுக்கு மேன்மையைக் கொடுத்துக்கொண்டே, விசித்ரரான அதிதேவாதிகளை இரதமாயுள்ளவனாகையால் சித்ரரதனென்கிற பெயருள்ளவனாய் சித்ரரதனுள்ளிருப்பவன். ஸித்தரில் மேலானவனாயும், மௌனஶீலனாயும் ஸூசக ரூபனாயும், ரக்ஷகனாயும், ஜகத்தை தன்னுள் வைத்துக்கொண்டிருப்பவனாயு மிருப்பதினால் கபிலனென்கிற பெயருடையவன். (இது ஸாக்ஷாத்ரூபம்) (10-26). குதிரைகளில் பாற்கடலிற் பிறந்த ஶ்ரேஷ்டமான உச்சைஶ்ரவஸ்ஸென்னும் குதிரைக்கு நியாமகனாய் இதர குதிரைகளைவிட இதற்கு மேன்மையைத் தந்துகொண்டே, அதிகமான கீர்த்தியை யுடையவனாகையால் உச்சைஶ்ரவஸ்ஸென்னும் பெயருடையவனாய் உச்சைஶ்ரவஸ்ஸென்னும் குதிரையிலிருப்பவன். யானைகளில் மேலான ஐராவதத்திற்கு நியாமகனாய் இதர யானைகளைவிட இதற்கு மேன்மையைத் தந்துகொண்டே, வைகுண்டத்திலிருக்கும் ஐரமென்னும் ஸரோவரத்தை இரக்ஷிப்பதினால் ஐராவதஶப்தவாச்யனாய் இந்த்ரனின் வாஹனமான ஐராவதமென்கிற யானையிலிருப்பவன். மனிதருள் ஶ்ரேஷ்டனான சக்ரவர்த்திக்கு நியாமகனாய் இதர மனிதர்களைவிட இவனுக்கு மேன்மையைத் தந்துகொண்டே, மனிதர்களுக்கு ஈஶ்வரனாகையால் நராதிகனென்னும் பெயருடையவனாய், சக்ரவர்த்தியிலிருப்பவன்(10-27). ஆயுதங்களில் மேலான வஜ்ராயுதத்திற்கு நியாமகனாய் இதர ஆயுதங்களைவிட இதற்கு மேன்மையைக் கொடுத்துக்கொண்டே, ஸர்வதோஷ ரஹிதனாகையால் வஜ்ரநாமகனாய் வஜ்ராயுதத்தி

விருப்பவன். பசுக்களில் மேலான காமதேனுவுக்கு நியாமகனாய் இதர பசுக்களைவிட இதற்கு மேன்மையைத் தந்துகொண்டே வேண்டுபவர்கள் விரும்பும் பதார்த்தங்களைக் கொடுப்பவனாகை யால் காமதேனு நாமகனாய் காமதேனுவிலிருப்பவன். ஸ்ருஷ்டி காரணனான மன்மதனுக்கு நியாமகனாய் அநேக விதங்களான ஸுகங்களை அனுபவிப்பவனாகையால் கந்தர்ப நாமகனாய் மன்மத னிலிருப்பவன். ஒரு தலையுள்ள ஸர்ப்பங்களில் மேலான வாஸுகிக்கு நியாமகனாய் இதர ஸர்ப்பங்களைவிட இதற்கு மேன்மையைத் தந்துகொண்டே தன்னிடலோகத்தில் வஸிப்பவர்களுக்கு ஸுகத் தைக்கொடுப்பவனாகையால் வாஸுகி என்ற பெயருடையவனாய் வாஸுகி என்ற ஸர்ப்பத்திலிருப்பவன் (10-28). அநேக தலை களுள்ள ஸர்ப்பங்களில்மேலான அனந்தனுக்கு (ஆதிசேஷனுக்கு) நியாமகனாய் இதர அநேக சிரஸ்ஸுகளுள்ள ஸர்ப்பங்களைவிட இவனுக்கு மேன்மையைத் தந்துகொண்டே * மஹாகுணபூர்ண னாகையால் அனந்த சப்தவாச்யனாய் அனந்தனில் (ஆதிசேஷ னில்) இருப்பவன். நீரில் ஸஞ்சரிக்கும் ப்ராணிகளில் மேலான வருணனுக்கு நியாமகனாய் இதர ஜலசர (நீரில் ஸஞ்சரிக்கும்) ப்ராணிகளைவிட வருணனுக்கு மேன்மையைத் தந்துகொண்டே, மேலான ஆனந்தத்தைக் கொடுப்பவனாகையால் வருணசப்த வாச்யனாய் வருணனிலிருப்பவன். பித்ருதேவதைகளில் மேலான அர்யமனென்கிற பித்ரு தேவதைக்கு நியாமகனாய் இதர பித்ரு தேவதைகளைவிட இவனுக்கு மேன்மையைத் தந்துகொண்டே, அறியவேண்டியவைகளை அறிந்துகொண்டிருப்பதினால் அர்யம னென்கிற பெயருடையவனாய் அர்யமனென்கிற பித்ரு தேவதையிலிருப்பவன். நியமிப்பவர்களில் மேன்மையுள்ள யம னுக்கு நியாமகனாய் இதர நியாமகர்களைவிட இவனுக்கு மேன்மை யைத் தந்துகொண்டே நியமிப்பவனாகையால் யமனென்கிற பெய ருடையவனாய் யமனிலிருப்பவன் (10-29). தைத்யருள் சிரேஷ்ட னான ப்ரஹ்லாதனுக்கு நியாமகனாய் மற்ற தைத்யர்களைவிட இவ னுக்கு மேன்மையைத் தந்துகொண்டே, மேலான ஸுகமுடையவ

---

* 'மஹா குணத்வாத்ய மனந்த மாஹு:' மஹா குணங்களுடைய வனாகையால் யாரை அனந்தனென்று சொல்லுகிறார்களோ அத்தகைய.

ஞதலால் ப்ரஹ்லாதனென்கிற பெயருடையவனாய் ப்ரஹ்லாதனி லிருப்பவன். விலங்கு முதலியவற்றால் கட்டுப்படுத்துபவரில் மேலானவனான காலனுக்கு நியாமகனாய் இதர கட்டுப்படுத்துபவர்களை விட இவனுக்கு மேன்மையைக் கொடுத்துக்கொண்டே நன்றாய் அறிந்துகொள்ளுபவனாகையால் கால நாமகனாய் காலனி லிருப்பவன். மிருகங்களில் சிரேஷ்டமான ஸிம்ஹத்திற்கு நியாமகனாய் இதர மிருகங்களைவிட இதற்கு மேன்மையைத் தந்து கொண்டே, தன்னைத்தேடும் பக்தர்களுக்கு ப்ரபுவாகையால் மிருகேந்திரனென்னும் பெயருடையவனாய் ஸிம்ஹத்திலிருப்பவன். பக்ஷிகளில் ஶ்ரேஷ்டனான கருடனுக்கு நியாமகனாய் இதர பக்ஷிகளைவிட இப்பக்ஷிக்கு மேன்மையைத் தந்துகொண்டே, விசேஷமாய் தன்னை வணங்குபவர்களுக்கு ஆஶ்ரயனாகையால் வைனதேயனென்ற பெயருடையவனாய் கருடனிலிருப்பவன் (10-30).

ஶுத்தப்படுத்தும் வஸ்துக்களில் ஶ்ரேஷ்டமான வாயுவுக்கு நியாமகனாய் ஶுத்தப்படுத்தும் இதர வஸ்துக்களைவிட இதற்கு மேன்மையைத்தந்துகொண்டே, ரக்ஷிப்பவர்களுக்கு பூஜ்யனாகையால் பவன ஶப்தவாச்யனாய், வாயுவினுள்ளிருப்பவன். ஶஸ்திரதாரிகளில் ஶ்ரேஷ்டனான, லோகத்தை விளையாடச்செய்யும்ராமனென்கிற ஸாக்ஷாத்ரூபமுடையவன். மீன்களில ஶ்ரேஷ்டமான முதலைக்கு நியாமகனாய் இதர மீன்களைவிட இதற்கு மேன்மையைத் தந்துகொண்டே உலகத்திற்கு அல்ப ஞானத்தைக் கொடுப்பவனாகையால் மகரமென்கிற பெயருடையவனாய் முதலையி லிருப்பவன். நதிகளில் மேலான ஜான்ஹவிக்கு (கங்கைக்கு) நியாமகனாய் இதர நதிகளைவிட இதற்கு மேன்மையைத் தந்து கொண்டே ஸம்ஸாரத்தை அஸாரமென்று அறிந்துகொண்டு, அதை விடுபவர்களுக்கு ரக்ஷகனாகையால் ஜான்ஹவி ஶப்தவாச்யனாய் ஜான்ஹவி (கங்கா) நதியிலிருப்பவன் (10-31). பிறப்பிக்கப் படும் ப்ராணிகளுக்கு காரணன். ரக்ஷகன். நாசகன். வித்யைகளில் மேலான ப்ரஹ்ம வித்யைக்கு நியாமகனாய் இதர வித்யைகளைவிட இதற்கு மேன்மையைத் தந்துகொண்டே, ஜீவர்களுக்கு பதியாய், அவர்களிலிருப்பதினாலும், ஞானஸ்வரூபனாகையினாலும் அத்யாத்ம வித்யா நாமகனாய் அத்யாத்ம (ப்ரஹ்ம) வித்யையிலிருப்பவன்,

வாதம், ஜல்பம், விதண்டம் என்னும் இக்கதைகளை நடத்தும் ஜனங்களால் செய்யப்படும் வாதத்திற்கு நியாமகனும் வாச்யனுகையால் வாதமப்தவாச்யனும் வாதத்திலிருப்பவன் (10-32). அக்ஷரங்களில் ம்ரேஷ்டமான அ என்னும் அக்ஷரத்திற்கு நியாமகனும் இதர அக்ஷரங்களைவிட இதற்கு மேன்மையைத் தந்துகொண்டே அ என்று அழைக்கப்படுவதினுல் அகார மப்தவாச்யனும் அ என்னும் எழுத்திலிருப்பவன். ஸமாஸங்களில் மேலான த்வந்த்வ ஸமாஸத்திற்கு நியாமகனும் இதர ஸமாஸங்களைவிட இதற்கு ப்ராதான்யத்தைத் தந்துகொண்டே, வெளியிலுமுள்ளுமிரண்டு ரூபங்களுடனிருப்பதினுல் த்வந்த்வ மப்தவாச்யனும் த்வந்த்வ ஸமாஸத்திலிருப்பவன். நாசமில்லாதவனுனதால் அக்ஷர மப்தவாச்யன். ஸம்ஹாரகனுனதால் காலநாமகனும் காலத்திலிருப்பவன். தாரணபோஷணுதிகளைச்செய்பவன். எல்லா திக்குகளிலும் முகமுள்ளவன். சதுர்முகனுள்ளிருப்பவன். ஸர்வத்ர ஸர்வாவயவங்களையுடையவன் (10-33). ஸம்ஹாரகனுகையால் ம்ருத்யு நாமகனும் ம்ருத்யுவுக்கு நியாமகனும் ம்ருத்யுவிலிருப்பவன். பிறப்பவர்களின் பிறப்புக்கு நியாமகனும் பிறப்பிப்பதினுல் உத்பவனென்கிற பெயருடையவனும் பிறப்பிலிருப்பவன். ஸ்த்ரீகளின் கீர்த்திக்கு நியாமகனும் புகழப்படுபவனுகையால் கீர்த்தி மப்தவாச்யனும் கீர்த்தியிலிருப்பவன். ஸ்ரீக்கு (காந்திக்கு) நியாமகனும் ஸ்ரீக்கு ஆம்ரயனுகையால் ஸ்ரீமப்தவாச்யனும் ஸ்ரீயிலிருப்பவன். வாக்குக்கு நியாமகனென்று சொல்லிக்கொள்ளப்படுவதினுல் வாக்மப்தவாச்யனும் வாக்கிலிருப்பவன். ஸ்மரணைக்கு (நினைவுக்கு) நியாமகனும் நினைப்பதற்கு யோக்யனுகையால் ஸ்ம்ருதி நாமகனும் ஸ்ம்ருதியிலிருப்பவன். மேதா நியாமகனும் மேதா மப்தவாச்யனும் மேதையிலிருப்பவன். தைர்யத்திற்கு நியாமகனும் ஜகத்தை தரிப்பதினுல் த்ருதி மப்தவாச்யனும் த்ருதியிலிருப்பவன். க்ஷமைக்கு (பொறுமைக்கு) நியாமகனும் க்ஷமா மப்தவாச்யனும் க்ஷமையிலிருப்பவன் (10-34). † ரதந்தராதி நாமங்களில் ம்ரேஷ்டமான ப்ருஹத்ஸாமத்திற்கு நியாமகனும் இதர

* வாதங்களிலுள்ள (தருக்கத்தின்) வகைகள்.

† ஸாமவேதத்தினுட் பிறிவுகளின் பெயர்.

ஸாமங்களைவிட இதற்கு மேன்மையைத் தந்துகொண்டே, அதிக மான பலமுள்ளவனுதலாலும், அமேயனுனதினுலும் (அளவிட முடியாதவனுனதினுலும்) ப்ருஹத்ஸாமஶப்தவாச்யனும் ப்ருஹத் ஸாமத்திலிருப்பவன். சந்தஸ்ஸுகளில் ஶ்ரேஷ்டமான காயத் ரிக்கு நியாமகனும் இதர சந்தஸ்ஸுகளைவிட இதற்கு மேன்மை யைத்தந்துகொண்டே, தன்னை துதிப்போருக்கு ரக்ஷிப்பதினுல் காயத்ரி ஶப்தவாச்யனும் காயத்ரியிலிருப்பவன். மாதங்களில் மார்கஶிர மாதத்திற்கு நியாமகனும் இதர மாதங்களைவிட இதற்கு மேன்மையைத்தந்துகொண்டே மார்க்கங்களுக்கு ஶீர்ஷஸ்தானீய னுகையால் (ஶிரஸ்ஸைப்போன்றவனுகையால்) மார்க்கஶீர்ஷ ஶப்த வாச்யனும் மார்க்கஶிரமாதத்திலிருப்பவன். ருதுக்களில் ஶ்ரேஷ்ட மான வஸந்தருதுவுக்கு நியாமகனும் இதர ருதுக்களைவிட இதற்கு மேன்மையைத் தந்துகொண்டே அவாளவாளிட யோக் தானுஸாரமாய் கெட்ட ஞானத்தையும் நல்ல ஞானத்தையும் பிறப்பிப்பவனுதலால் குஸுமாகர ஶப்தவாச்யனும் வஸந்தருதுவி லிருப்பவன் (10-35).

வஞ்சகர்களில் சூதுக்கு நியாமகனும் ஆட்டத்தில் ஆஸக்த னுகையால் த்யூத ஶப்தவாச்யனும் சூதிலிருப்பவன். தேஜஸ்விகளி லிருக்கும் தேஜஸ்ஸுக்கு நியாமகனும் ப்ரகாஶிப்பதினுல் தேஜஶ் ஶப்தவாச்யனும் தேஜஸ்ஸிலிருப்பவன். ஜயஶீலரிட மிருக்கும் ஜயத்திற்கு நியாமகனும் ஜயஶப்தவாச்யனும் ஜயத்திலிருப்பவன். நிஶ்சயஞானமுள்ளவர்களிலுள்ள நிஶ்சய ஞானத்திற்கு நியா மகனும் வ்யவஸாய ஶப்தவாச்யனும் நிஶ்சயஞானத்திலிருப்பவன். பலமுள்ளவர்களிடமிருக்கும் பலத்திற்கு நியாமகனும் ஸத்வஶப்த வாச்யனும் பலத்திலிருப்பவன். (10-36). யாதவர்களில் ஶ்ரேஷ்ட னுன வஸுதேவ புத்ரனுன ஸ்ரீகிருஷ்ணன் (இது ஸாக்ஷாத்ரூபம்) பாண்டு குமாரர்களில் ஶ்ரேஷ்டனுன அர்ஜுனனுக்கு நியாமகனும் பீமனைத்தவிற மற்ற பாண்டவர்களைவிட அர்ஜுனனுக்கு மேன் மையைத் தந்துகொண்டே தனஞ்ஜய ஶப்தவாச்யனும் அர்ஜுன னுள்ளிருப்பவன். முனிகளில் வேதவ்யாஸர் (இது ஸாக்ஷாத் ரூபம்). கவிகளில் ஶ்ரேஷ்டனுன உஶனஸ் என்கிற (ஶுக்ராசார்ய ரென்கிற) கவிக்கு நியாமகனும் இதர கவிகளைவிட இவருக்கு

மேன்மையைத் தந்துகொண்டே, ஸ்ருஷ்டிக்கும் எண்ணமுள்ளவனுகையால் உஶனஸ் ஶப்தவாச்யனுய் உஶனஸ் என்கிற (சுக்ராசார்யரென்கிற) கவியிலிருப்பவன் (10-37). தண்டிப்பவர்களால் செய்யப்படும் தண்டனைக்கு நியாமகனுய் தண்டித்துக்கொண்டிருப்பதினுல் தண்ட ஶப்தவாச்யனுய் தண்டனையிலிருப்பவன். ஜயமடைய வேண்டுமென்கிற எண்ணமுள்ளவரிடமுள்ள நீதிரூபமான தர்மத்திற்கு நியாமகனுய் நீதி ஶப்தவாச்யனுய் நீதியிலிருப்பவன். இரகசியமான வஸ்துக்களில் ஶ்ரேஷ்டமான த்யானத்திற்கு நியாமகனுய் முனிகளால் பூஜ்யனுகையால் மௌன ஶப்தவாச்யனுய் த்யானத்திலிருப்பவன். ஞானமுள்ளவர்களிலிருக்கும் ஞானத்திற்கு நியாமகனுய் ஞானரூபனுனதால் ஞான ஶப்தவாச்யனுய் ஞானத்திலிருப்பவன் (10-38). ஸமஸ்தபூதங்களுக்கும் காரணன். ஸமஸ்த பதார்த்தங்களிலு மிருப்பவன் (10-39). அளவில்லாத விபூதிரூபங்களையுடையவன் (10-40). எந்த பதார்த்தம் தன்னிட ஜாதியில் மேலானதோ, எந்த பதார்த்தம் செல்வத்துடன் கூடியதோ, எது விசேஷமாய் விருத்தியடைந்திருக்கிறதோ அவ்வெல்லா பதார்த்தங்களிலும் தேஜோரூபமான அம்ஶத்துடனிருப்பவன் (10-41). தன்னிட ஓர் அம்ஶத்தினுல் இவ்வெல்லா உலகத்தையும் வ்யாபித்திருப்பவன் (நிறைந்திருப்பவன்) (10-42).

புருஷோத்தமன். நிச்சயமான பின்சொல்லப்பட்ட மாகாத்ம்யமுடையவன் (11-3). யோகேஶ்வரன். ப்ரபு, நாசரஹிதன் (11-4). அப்ராக்ருதங்களான நாநாவிதங்களான ரூபங்களுடையவன். நாநாவிதங்களான வர்ணங்களையும், நாநாவிதங்களான ஆகாரங்களையுமுடையவன். அளவில்லாத ரூபங்களுடையவன் (11-5). ஆதித்யர்களுக்கும், வஸுக்களுக்கும், ருத்ரர்களுக்கும், அஶ்வினி தேவதைகளுக்கும், மருத்கணத்திற்கும் இதுவரைக்கும் கண்டிராத ஆஶ்சர்யகரமான பதார்த்தங்களுக்கும், இந்த சராசராத்மகமான ப்ரபஞ்சத்திற்கும் ஆஶ்ரயன் (11-6,7). மகாயோகேஶ்வரன் (11-9). அநேக முகங்களையுடையவன். அநேக கண்களையுடையவன். அப்ராக்ருதங்களான அநேக ஆபர

ணங்களை தரித்திருப்பவன். அப்ராக்ருதங்களான மேல் தூக்கப் பட்ட அநேக ஆயுதங்களை தரித்திருப்பவன் (11-10).

அப்ராக்ருதங்களான ஹாரங்களை (மாலைகளை) தரித்திருப் பவன். திவ்யமான பீதாம்பரத்தைத் தரித்திருப்பவன். திவ்ய கந்தத்தைப் பூசிக்கொண்டிருப்பவன். ஸர்வாஶ்சர்யமான ரூப முள்ளவன். க்ரீடாதிகுணமுடையவன். எல்லா தேசங்களிலும் (இடங்களிலும்) எல்லா காலங்களிலும் நிறைந்தவன். ஸர்வகுண பூர்ணன். எல்லாதிக்குகளிலும் முகங்களையுடையவன் (11-11). ஆகாயத்தில் ஒரே காலத்தில் உதயமடைந்துள்ள (விடிந்திருக்கும்) ஆயிரக்கணக்கான ஸூர்யர்களின் காந்திக்குச்சரியானகாந்தியுள்ள வன் (11-12). தேவதைகளுக்கு தேவத்தன்மையைக் கொடுப்பவன் (11-13). தேவதைகளுக்கும், ஸமஸ்த பூதவிசேஷஸங்கங்களுக்கும், சதுர்முகனுக்கும், சதுர்முகனின் துடையிலுட்கார்ந்திருக்கும் ருத்ர னுக்கும் அற்புதமான ஸர்ப்பங்களுக்கும் ஆஶ்ரயன்(11-15). அநேக கைகளாலும், அநேக வயருகளினாலும், அநேக முகங்களினாலும் அநேக கண்களினாலும் கூடிய விஶ்வரூபமுடையவன். எல்லா தேசங்களிலும் அளவில்லா ரூபங்களுடையவன். நாசமில்லாத வன். பிறப்பில்லாதவன் (11-16). கிரீடம் கதா சக்ரம் இவைகளு டையவன். * தேஜ: புஞ்ஜன். எல்லா தேசங்களிலும் ப்ரகாஶமுடை யவன். யாராலும் காணுவதற்கு அஶக்யமான விஶ்வரூபமுடைய வன். விஶேஷமாய் நாலுதிக்குகளிலும் எரிந்துகொண்டிருக்கும் சூர்யாக்னிகளிட ப்ரகாசத்தைப்போன்ற அளவற்ற ப்ரகாசமுள்ள வன் (11-17). ஞானிகளினால் அறியப்படுவதற்கு யோக்யன். அக்ஷர (நாசமற்ற) ஸ்வரூபமுடையவன். இந்தஜகத்துக்கு முக்யாஶ்ரயன். நாசமற்றவன். அனாதியான பரம்பரையாய் வந்த தர்மத்திற்கு ரக்ஷகன். அனாதி நித்யனான புருஷன் (11-18). அளவற்ற பராக் ரமமுள்ளவன். அளவற்ற பாஹுக்களை (கைகளை) யுடையவன். சந்திர ஸூர்யர்களுக்கு ஆஶ்ரயமான கண்களையுடையவன். முகத்தில் ப்ரகாஶமான அக்னியை யுடையவன். தன்னிட தேஜஸ் ஸினால் இவ்வெல்லா உலகத்திற்கும் தாபமுண்டாக்குபவன் (11-19). ஆகாய பூமியின் மத்தியில் வ்யாபித்திருப்பவன் (நிறைந்

* ஒளியின் குவியல்

திருப்பவன்). எல்லாதிக்குகளிலும் வியாபித்திருப்பவன். தர்ஶனத்திலேயே எல்லா ஜகத்துக்கும் பயத்தையுண்டாக்கும் அத்புதமான, உக்ரமான ரூபமுடையவன் (11-20).

எல்லா தேவதைகளால் ப்ரவேசிக்கப்படுபவன். பயமடைந்த, பத்தாஞ்ஜலிகளான (கைகூப்பிக்கொண்டிருக்கும்) ஜனங்களால் துதிக்கப்படுபவன். மகரிஷிகளே முதலானவர்களால் விசேஷ குணங்களைச் சொல்லும் ஸ்தோத்ரங்களால் துதிக்கப்படுபவன் (11-21). ருத்ரர்கள், ஆதித்யர்கள், வஸுக்கள், விஶ்வேதேவதைகள், அஶ்வினி தேவதைகள், மருத்கணங்கள், பித்ருகணங்கள், கந்தர்வர்கள், யக்ஷர்கள், தைத்யர்கள், ஸித்தர்கள், இவர்களால் ஆஶ்சர்யத்தினால் கண்டுகொள்ளப்படுபவன் (11-22). வெகுமுகங்கள், வெகுகண்கள், வெகு புஜங்கள், வெகு வயறுகள், வெகு துடைகள், வெகு பாதங்கள், வெகு கோரைப்பற்கள் இவைகளால் பயங்கரமான ரூபமுடையவன் (11-23). ஆகாயத்தை தாக்கிக்கொண்டிருக்கும் ரூபமுடையவன், அநேக வர்ணங்களுடையவன். பெரியதாய் திறக்கப்பட்டிருக்கும் வாயுடையவன். ப்ரகாஶிக்கும் விஶாலமான கண்களையுடையவன் (11-24). கோரைப்பற்களால் பயங்கரமான ப்ரளயகாலத்தின் அக்னிக்கு ஸத்ருஶமான முகமுடையவன். உலகத்திற்கு ஆதாரன். தேவதைகளுக்கு ஸ்வாமி (11-25).

இராஜர்களிட கூட்டத்துடன் கூடிய துர்யோதனுதி எல்லா ஜனங்கள், பீஷ்மர், த்ரோணர், கர்ணன் மற்றும் பாண்டவர் பக்ஷத்திலுள்ள யுத்தம் செய்யும் ஜனங்கள் இவர்களை வெகுவேகமாய் உட்செல்லுவித்துக்கொள்ளும் பயங்கரமான முகமுடையவன். பற்களின் ஸந்துகளில் அகப்பட்டுக்கொண்டு பொடிபொடியா யிருக்கும் ஜனங்களின் சிரஸ்ஸுகளையுடையவன் (11-26,27). மழைகாலத்தில் நதிகள் அதிகவேகத்துடன் ஸமுத்ரத்தை யடைவதைப்போல் அதிகமாய் எரிந்துகொண்டிருக்கும் முகத்தை ப்ரவேஶிக்கும் வீரர்களையுடையவன் (11-28). எப்படி விளக்குகளைக்குறித்து பதங்கங்கள் (விளக்கையணைக்கும் புழுக்கள்) நாசமடைவதற்காக வருகின்றனவோ அப்படியே நாசமடைவதற்காக முகத்தைக் குறித்து வரும் ஜனங்களையுடையவன். எல்லா ஜகத்

தையும் வாயில் போட்டுக்கொண்டு சப்பளிப்பவன். ஸமஸ்த ஜகத்தையும் வ்யாபித்திருக்கும் காந்தியுடையவன் (11-29,30). தேச காலங்களில் பரிபூர்ணன். லோகநாசகன்.

மற்றும் அர்ஜுனன்முதலிய சிலரைத்தவிர யுத்தத்தில் சேர்ந்திருக்கும் எல்லா யோதரையும் ஸம்ஹரிப்பதற்காக ப்ரவ்ருத்தனுயிருப்பவன் (முயற்சித்திருப்பவன்)(11-32). த்ரோண பீஷ்ம ஜயத்ரதகர்ணனே முதலான வீரஶ்ரேஷ்டர்களை மடிந்தவரைப்போல் செய்தவன் (11-34). ஸர்வேந்திரிய ப்ரேரகன். ஜகத்துக்கு ஸந்தோஷகரமானகீர்த்தியுள்ளவன். ராக்ஷஸர்களைப்பயப்படுத்தி திக்குதிக்குகளில் ஓடச்செய்பவன். ஸித்தர்களின் கூட்டங்களால் வணங்கிக்கொள்ளப்படுபவன் (11-36). ஸகல ஜகத்விலக்ஷணன். சதுர்முக ப்ரஹ்மாவையும் படைப்பவன். (11-37). தேவஶ்ரேஷ்டன். புராணபுருஷன். இந்த ஜகத்துக்கு முக்யமான ஆஶ்ரயன். எல்லாவற்றையும் தெரிந்துகொள்ளுபவன். வேத்யன். (தெரிந்துகொள்ளப்படுபவன்). உத்தம தேஜ:ஸ்வரூபன். ஜகத்தை வ்யாபித்துக்கொண்டிருப்பவன் (11-38). வாயு அக்னி யமன் வருணன் இது முதலிய ஶப்தங்களால் முக்யமாய் சொல்லிக்கொள்ளப்படுபவன் (11-39). அநந்த வீர்யன். அளவற்ற பராக்ரமமுடையவன். எல்லா பதார்த்தங்களிலும் வ்யாபித்துக்கொண்டிருப்பதினுல் வேதாதி ப்ரமாணங்களில் ஸர்வ என்கிற பெயரால் அழைக்கப்படுபவன் (11-41, 42). சராசராத்மகமான ஜகத்துக்கு தந்தை. மிகவும் பூஜ்யன். குரு. மூவ்வுலகத்திலும் ஸமாதிகமற்றவன். நிகரற்ற ஐஶ்வர்யமுடையவன் (11-43). துதிக்கப்படுபவன் (11-44). பக்தியில்லாமல் செய்யப்படும் வேதாத்யயனத்தினுலும், அநேக யஜ்ஞானுஷ்டானங்களாலும். தானங்களாலும், வர்ணுஶ்ரம விஹிதமான கர்மங்களாலும், உக்ரமான தபஸ்ஸினுலும் அர்ஜுனனைத் தவிர இதரர்களுக்குக் காணப்படாத விஶ்வரூபமுடையவன். (11-48). தேவதைகளும் காணுவதற்கு அபேக்ஷிக்கும் விஶ்வரூபமுடையவன் (11-52). உத்தமமான பக்தியில்லாமல் அறிவதற்கும் காணுவதற்கும் பிரவேஶிப்பதற்கும் அஶக்யமான ரூபமுடையவன் (11-53).

ஶரீரமென்று சொல்லப்படும் மஹாபூதம் முதலான ஸமஸ்த ப்ரபஞ்சரூபமான க்ஷேத்திரத்தை யறிந்தவன் (13-1). மோக்ஷ ஜனகமான ஞானத்திற்கு விஷயன் (அறியப்படுபவன்). பரப்ரஹ்ம ஸ்வரூபன். பஞ்சமஹா பூத விலக்ஷணன் (13-12). ஸர்வத்ர கைகால் களையுடையவன். ஸர்வத்ர (எங்கும்) கண்களையும், தலைகளையும், முகங்களையும், காதுகளையுமுடையவன். எல்லாவற்றையும் வியாபித்துக்கொண்டிருப்பவன் (13-13). எல்லா இந்திரியங்களுக்கும், குணங்களுக்கும் ப்ரகாஶகன். ப்ராக்ருதமான இந்திரிய மில்லாதவன். ஆஸக்திரஹிதன். ஸர்வதாரகன். ஸத்வரஜஸ்தமோ குண ரஹிதன். ஆனந்தாதி குணங்களை அனுபவிப்பவன் (13-14). பூதங்களின் உள்ளும் வெளியிலுமிருப்பவன். வேருவிதமான கருத்தில்லாதவன். எல்லா தேசங்களிலும் ஸஞ்சரிப்பவன். சூக்ஷ்மனாதலால் பிறரால் அறியமுடியாதவன். தூரத்திலிருப்பவன். ஸமீபத்திலிருப்பவன். (13-15). எல்லா ப்ராணிகளிலும் ஒருவனாகவே இருப்பவன். எல்லா ப்ராணிகளுக்கும் ரக்ஷகன். எல்லாவற்றையும் பக்ஷிப்பவன். பிறப்பிப்பவன் (13-16). பூதங்கள் நாசமடைந்தபோதிலும் தான் நாசமடையாதவன் (13-27). கர்ம ஸம்பந்தமற்றவன் (13-31). ஆகாயம் எல்லாவற்றிலு மிருந்தபோதிலும் எப்படி அந்தந்த பதார்த்தங்களின் குணங்களின் ஸம்பந்தத்தை யடைவதில்லையோ, அப்படியே எல்லா இடங்களிலிருந்தபோதிலும் அந்தந்த பதார்த்தங்களின் குணஸம்பந்தமில்லாதவன் (13-32). ஸூர்யனொருவனே இவ்வுலகத்தை எப்படி ப்ரகாஶப்படுத்துவனோ, அப்படியே எல்லா உலகத்தையும் ப்ரகாஶப்படுத்துபவன் (13-33).

தன்னிட பார்யையான ப்ரஹ்மமென்று சொல்லிக்கொள்ளப் படும் மஹாலக்ஷ்மியை கர்ப்பத்தைத் தரிக்கும்படிக்குச் செய்பவன். அதினால் எல்லா பூதங்களையும் படைப்பவன் (14-3). எல்லா பூதங்களுக்கும் தந்தை (14-4). மஹாலக்ஷ்மியின் ஸ்திதி (இருப்பு) க்குக்காரணன். நாசமற்ற முக்தர்களிட ஸமூகத்தின் இருப்புக்குக் காரணன். ஶாஶ்வதமான தர்மத்திற்கு ரக்ஷகன். மோக்ஷ ஸம்பந்தமான ஸுகத்தைக் கொடுப்பவன் (14-27).

விசாரிக்கப்படுபவன். புனராவர்த்திஶூன்யமான ப்ராப்ய ஸ்வரூபமுடையவன். ஆத்ய புருஷன் (முதலிலிருப்பவன்). அனாதியான ஸம்ஸாரத்திற்கு ப்ரவர்த்தகன் (15-4). ஸூர்யனால் ப்ரகாஶப்படுத்துவதற்கு முடியாத ரூபமுள்ளவன். சந்த்ரனால் ப்ரகாஶப்படுத்துவதற்கு முடியாத ரூபமுடையவன். அக்னியால் ப்ரகாஶப்படுத்துவதற்கு முடியாத ரூபமுடையவன் (15-6). உலகத்தை ப்ரகாஶப்படுத்தும் ஸூர்யனிடமிருக்கும் தேஜஸ்ஸுக்கு நியாமகன். உலகத்தை ப்ரகாஶிக்கச்செய்யும் சந்திரனிலுள்ள தேஜஸ்ஸுக்கு நியாமகன். (15-12) அக்னியிலுள்ள தேஜஸ்ஸுக்கு நியாமகன். பூமியிற் புகுந்து தன்னிட ஶக்தியினால் எல்லா ப்ராணிகளையும் தரிப்பவன். சந்திரனில் நியாமகனாயிருந்து ரஸரூபமான விபூதிரூபத்தினால் தான்யபல வ்ருக்ஷங்களை விளைவிப்பவன் (15-13).

ப்ராணிகளிட தேகத்தில் வைஶ்வானரனென்கிற அக்னியிலிருக்கும் ரூபத்தினால் ப்ராணாபானங்களுடன் கூடிக்கொண்டு நான்கு விதங்களான அன்னத்தை பசனம்செய்பவன் (பக்குவப்படுத்துபவன்) (15-14). ஸர்வப்ராணிகளின் ஹ்ருதயத்தில் வஸிப்பவன். எல்லா வேதங்களாலும் ப்ரதிபாத்யன் (சொல்லிக்கொள்ளப்படுபவன்). வேதார்த்தங்களை நிர்ணயப்படுத்தும் ப்ரஹ்மஸூத்ரங்களைச் செய்தவன். நிஜமான வேதார்த்தங்களை அறிந்தவன் (15-15). க்ஷராக்ஷரபுருஷர்களைவிட (நாசமடையக்கூடிய சரீரமுடைய புருஷர்களைவிடவும், நாசமடையாத சரீரத்துடன்கூடிய புருஷர்களைவிடவும்) உத்தம புருஷன். பரமாத்மாவென்று வேதங்களால் சொல்லிக்கொள்ளப்படுபவன். மூவ்வுலகத்திலும் ப்ரவேஶித்து அவைகளை ரக்ஷிப்பவன். நாசமற்றவன். ஸமர்த்தன் (15-17). க்ஷரஜீவர்களை மீறினவன். அக்ஷரஜீவரைவிட உத்தமன். ஶ்ருதிஸ்ம்ருதிகளில் புருஷோத்தமனென்று ப்ரஸித்தியடைந்தவன் (15-18). 'ஓம் தத் ஸத்' என்கிற பெயருடையவன். வேதங்களின் அபிவ்யக்திக்குக் காரணன் (17-23). ஸர்வபூதங்களின் (ப்ராணிகளின்) ஹ்ருதய குகையிலிருந்து அந்த அஸ்வதந்த்ரர்களான ப்ராணிகளின் செய்கைகளைச் செய்விப்பவன் (18-61).

## ஜீவ ப்ரகரணம்.

க்ஷரரென்றும் அக்ஷரரென்றும் சேதனர்கள் இருவகைப் பட்டவர்கள். பிறப்பிறப்பில்லாத தேகமுள்ள மஹாலக்ஷ்மி அக்ஷர சேதனள். பிறப்பிறப்புள்ள தேகத்துடன் கூடிய சதுர்முகர் முதலிய எல்லா ஜீவர்களும் க்ஷர சேதனர்கள். இவ்விருவகைப்பட்ட சேதனர்களில் அக்ஷர சேதனளான மஹாலக்ஷ்மி வ்யாப்தள். விகாரம் (மாறுதல்) இல்லாதவள் (15-16). கிருஷ்ணனைவிட வேறானவள். (15-17.) ஸ்ரீ கிருஷ்ணனைவிட கடையானவள் (15-18). ஸ்ரீ பரமாத்மாவால் (கிருஷ்ணனால்) நியம்யள் (கட்டளையிடப்படுபவள்). எல்லாப்ரபஞ்சத்தைவிட உத்தமள். ஜகத்தை தரிப்பவள். (7-5). எல்லா பூதங்களுக்கும் காரணள் (7-6). பரமாத்மாவின் பார்யாள். ஜகத்தைக் கர்ப்பத்தில் தரிப்பவள் (14-3). ஜகத்துக்குத்தாய் (14-4).

அக்ஷர சேதனள்.

க்ஷரசேதனர்களான ஜீவர்கள் யந்திரத்தின் மேல் நிற்கும் பதார்த்தங்கள் யந்திரத்தை தரித்திருப்பவனால் நியமிக்கப்படுவதைப்போல், எல்லா வ்யாபாரங்களிலும் நியமிக்கும் ஸ்வபாவமுள்ள நாராயணனால் நியம்யர்கள் (அடக்கப்படுபவர்கள்) (18-61). நாராயணனைவிட வேறுபட்டவர்கள் (15-16). பரமாத்மாவின் அம்ஶர்கள் (அம்ஶத்தைப்போல் அல்பர்கள் பரமாத்மாவின் பாகங்களல்ல, பரமாத்மாவுக்கு அடிமைப்பட்டவர்கள்). அனாதிநித்யர்கள் (ஆதியந்தமில்லாதவர்கள்). ப்ரக்ருதிகார்யமான ஶரீரத்திலுள்ள மனது முதலிய ஆறு ஞானேந்திரியங்களையும் விஷயங்களில் ப்ரவர்த்திக்கச்செய்பவர்கள் (15-7). இந்த ஶ்ரோத்ரம் (காது), சக்ஷுஸ் (கண்), த்வக் (தோல்) ரஸனம் (நாக்கு) க்ராணம் (மூக்கு) மனது ரூபங்களான ஞானேந்திரியங்களையும், வாக் பாணி பாத பாயூபஸ்தங்களென்ற கர்மேந்திரியங்களையும் ஆஶ்ரயித்து விஷயங்களை அனுபவிப்பவர்கள். (15-9).

க்ஷரசேதனர்கள்.

ப்ரக்ருதி நிர்மிதமான சரீரத்திலிருந்து ப்ராக்ருதமான ஸுககதுக்காதிகளை அனுபவிப்பவர்கள் (13-21). பரமாத்மாவால் பிறப்பவர்கள் (13-24). நாசமடையும் தேகமுடையவர்கள். பழய வஸ்

திரங்களைவிட்டு புதிய வஸ்திரங்களைத் தரிப்பதைப்போல் ஜீர்ண மான (கிழத்தனத்தை யடைந்த) சரீரங்களை விட்டு புதியதான தேகங்களை ஸ்வீகரிப்பவர்கள் (2-22). ஶஸ்திரங்களால் வெட்டப் படமாட்டாதவர்கள். அக்னியினுல் சுடப்படமாட்டாதவர்கள். நீரினுல் நனைக்கப்படமாட்டாதவர்கள் (2-23). எங்கும் நிறைந்த பரமாத்மாவை ஆஶ்ரயித்திருப்பவர்கள். அணுரூபர்கள் (நுண்ணி யவர்கள்) (2-24). ஸ்வரூபத்தினுல் பிறப்பவர்களல்லர். இறப்பவர் களுமல்லர் (2-20). தேஹோத்பத்தியுடையவர்கள் (தேகத்தின் ஸம்பந்தமடைபவர்கள்). அவ்யக்தத்திலேயே தேகத்தின் லயமடைபவர்கள் (2-28). தமக்குண்டாயிருக்கும் வெகுஜன்மங் களை யறியாதவர்கள் (4-5). பரமாத்மாவின் பகலாரம்பத்தில் பர மாத்மாவிட மிருந்து வெளியாய், இரவாரம்பத்தில் பரமாத்மாவில் லயமடைபவர்கள்.

க்ஷரசேதனர் களின் பிறிவும், வர்ணங்களும்.

இந்த க்ஷரசேதனர்கள் அவாளவாளிட குணகர்மங்களின் விபாகபூர்வகமாய் ப்ராஹ்மண, க்ஷத்ரிய வைஶ்ய, ஶூத்ர ஸங்கர மென்னும் ஐந்து ஜாதியுடையவர்களாய் பிறப்பிக்கப்பட்டிருக் கின்றனர் (4-13). ஸ்வபாவஸித்தமான வெவ் வேறு குணகர்மங்களை யுடையவர்கள் (18-41). ப்ராஹ்மணர்கள் பகவன்னிஷ்டையான (பகவானி டத்திலேயே இடப்பட்ட) புத்தியையும் இந்திரிய நிக்ரஹத்தையும், காயிக (தேகத்தினுல் செய்யப்படும்) வாசக (வாக்கினுல் செய்யப்படும்) மானஸிக (மனதினுல் செய்யப்படும்) ங்களென்ற முவ்வகையான தபஸ்ஸுகளையும், உள்ஶுத்தி (மனஶ்ஶுத்தி) வெளிஶுத்தி (தேக சுத்தி) இவைகளையும், பொறுமை, மனோ வாக் காய கர்மங்களில் ஒரேவிதமாயிருப்பு, ஞானம், விஞ்ஞானம், 'தர்மாதர்மங்களுண்டு, அவைகளுக்குப் பலனுண்டு' என்கிற ஆஸ்திக்ய புத்தி இவைகளையுடையவர்கள் (18-42).

க்ஷத்ரியர்கள்—ப்ராகல்ப்யம் (நிபுணத்வம்), தைர்யம், தக்ஷதை, ஆயிரக்கணக்கான தடைகள் வந்தபோதிலும் ஆரம் பித்த கார்யத்தை முடிக்கும் ஸாமர்த்தியத்தையும், ப்ராணம்

போகும் ஸமயம் நேர்ந்தபோதிலும் யுத்தத்திலிருந்து பின்வாங்காமை, தாத்ருத்வம் (கொடுக்குந்தன்மை), ப்ரஜாபாலன ஸாமர்த்தியம் இவைகளையுமுடையவர்கள். இவர்களுக்கு இக்குணங்கள் ஸ்வாபாவிகமானவைகள் (18-43). வைஶ்யர்களுக்கு—வ்யாபாரம் கோரக்ஷணை இது முதலியவைகள் ஸ்வாபாவிகமானவைகள். ஶூத்ரர்கள் ப்ராஹ்மண க்ஷத்ரிய வைஶ்யர்களின் ஸேவைஎன்கிற ஸ்வாபாவிக தர்மமுடையவர்கள் (18-44). ஸங்கரஜாதியர்கள் பகவத்பக்தி முதலிய குணங்களையும் தமக்குசிதமான நாமஸ்மரணாதி கர்மங்களையுமுடையவர்கள்.

இவ்வைவகையான சேதனர்கள் ஸாத்விகராஜஸ தாமஸர்களென * மூவ்வகைப்பட்டவர்கள் (17-2). ஸாத்விக ஶ்ரத்தையுடையவர்கள் ஸாத்விகர்கள். ராஜஸ ஶ்ரத்தையுள்ளவர்கள் ராஜஸர்கள். தாமஸ ஶ்ரத்தையுள்ளவர்கள் தாமஸர்கள் (17-3). இம்மூவரும் குணத்ரயங்களின் ஸம்பந்தமுடையவர்கள் (18-40).

ஸாத்விகாதி குணப்பிரிவு.

ஸாத்விகர்கள் அநேக ஜன்மங்களில் செய்திருக்கும் புண்ய பலத்தினால் அல்ப பலன்களின் விருப்பமில்லாத மனதுடையவர்கள். தைவீஸம்பத்தை ஆஶ்ரயித்தவர்கள். பகவானைத்தவிர மற்ற பதார்த்தங்களில் மனதில்லாதவர்களாய் ஸர்வ பூதங்களுக்கும் காரணனான, நாசமற்ற ஸ்ரீகிருஷ்ணனின் குணங்களையறிந்து அவனை பஜிப்பவர்கள் (9-13). ஸமஸ்த வேதப்ரதிபாத்யமான ப்ரஹ்ம விஷயகமான வேதாந்தங்களைக் கேழ்ப்பவர்கள். உறுதியான அஹிம்ஸை ப்ரஹ்மசர்யம் முதலிய வ்ரதங்களையுடையவர்கள். சிடர்களுக்கு உபதேஶிப்பவர்கள். கல்யாணகுணங்களுடன் கூடியிருக்கும் ஸ்ரீவாஸுதேவனை மனோவாக்காயங்களால் வணங்குபவர்கள். ஸ்ரீகிருஷ்ணனிடத்தில் அசையா பக்தியுடையவர்கள். ஸ்ரீ கிருஷ்ணனின் த்யானத்தைச் செய்பவர்கள் (9-14). ஞானயஜ்ஞத்தினால் ஸ்ரீ கிருஷ்ணனை பூஜிப்பவர்கள். எல்லா ஜகத்திலும் வ்யாப்தனானவன் பரமாத்மா ஒருவனே என்றும் ஜகத்விலக்ஷண

* தைவஸ்ருஷ்டி என்றும் ஆஸுரஸ்ருஷ்டி என்றும் (16-5) பிரிக்கப்பட்டிருக்கும் தேவாஸுரர்களில் தேவதைகள் ஸாத்விகரில் சேர்ந்தவர்கள். அஸுரர்கள் தாமஸரில் சேர்ந்தவர்கள்.

னென்றும் உபாஸனை செய்பவர்கள். இதரர்களுக்கு பயத்தைத் தராதவர்கள். தாங்கள் சுயம் பயமற்றவர்கள். மனஶ்ஶாந்தி யுடையவர்கள். ஞானோபாயங்களில் ஸ்திரமாயிருப்பவர்கள். ஸத் பாத்ரங்களில் தானம் செய்பவர்கள். இந்திரிய நிக்ரஹமுள்ளவர் கள். ஜ்யோதிஷ்டோமாதி யஜ்ஞங்களைச் செய்பவர்கள். தேவபித்ரு யஜ்ஞங்களைச் செய்பவர்கள். வேதாத்யயனங்களைச் செய்பவர்கள். ப்ரஹ்மசர்யாதி தபஸ்ஸுள்ளவர்கள். மனோவாக்காய கர்மங்களில் ஒரேவிதமாயிருப்பவர்கள் (16-1). தொந்தரவு செய்யாதவர்கள். நிஜத்தையே சொல்லுபவர்கள். கோபமற்றவர்கள். ஔதார்ய முள்ளவர்கள். பகவானிடத்தில் ஸ்திரமாயிருப்பவர்கள். பிறரிட அபவாதங்களைச் சொல்லாதிருப்பவர்கள். பூதங்களில் தயையுடை யவர்கள். விஷயங்களில் ஆஸக்தியில்லாதவர்கள். கொடுமையற்ற வர்கள். கெட்டகார்யங்களைச்செய்வதில் வெட்கமுள்ளவர்கள். ஸ்தைர்யமுள்ளவர்கள் (16-2). ப்ராகல்ப்ய (தார்ஷ்டிக்ய) முள்ள வர்கள். பொறுமையுள்ளவர்கள். தைர்யமுள்ளவர்கள். பாஹ்யாந் தர ஶுத்தியுடையவர்கள், துரோகம் செய்யாதவர்கள். அஹங் காரமில்லாதவர்கள் (16-3). ஸாத்விகஶ்ரத்தையுள்ளவர்கள் (17-3). தேவதைகளைக்குறித்து யாகம்செய்பவர்கள். ஆயுள், சித்தஶுத்தி, சரீரஸாமர்த்யம், ஆரோக்யம், ஸுகம், ப்ரீதி, இவைகளை நன்றாய் வ்ருத்திசெய்யும் ரஸவத்தான பசையுடன் கூடிய, வெகுகாலம் சரீரத்திற்கு குணத்தை கொடுக்கும் மனோஹரமான ஆகாரங்களைப் புசிப்பவர்கள் (17-8). பலத்திலாசையில்லாமல் பகவானிடத்தில் மனதைவைத்து, 'இது நம்மால் செய்யப்பட வேண்டியது' என்கிற புத்தியினால் ஶாஸ்த்ரங்களால் சொல்லப்படும் ஸாத்விக யாகத் தைச்செய்பவர்கள் (17-11). பலேச்சை இல்லாதவர்களாய் தேவ தைகள், ப்ராஹ்மணர்கள், குருக்கள் மற்றும், ஞானிகள் இவர்க ளிட பூஜை, பாஹ்யாந்தர ஶுத்தி, மனோவாக்காய கர்மங்களில் ஒரே விதமாயிருக்கை, ப்ரஹ்மசர்யம், அஹிம்ஸா ரூபமான ஶரீர ஸம்பந்தமான தபஸ்ஸு இவைகளையுடையவர்கள் (17-14).

பிறருக்கு உபத்ரவமுண்டாக்காத, ஸத்யமான, கேழ்ப்பதற்கு ப்ரியமான, ஸுககரமான உச்சாரணமுள்ள வேதாத்யயன ரூட மான, வாங்மயமான ஸாத்விக தபஸ்ஸுடையவர்கள்; மன:

ப்ரஸன்னதை க்ரூரத்வ மில்லாதிருக்கை, மனனம் செய்கை, (கேட்டதை அடிக்கடி நினைத்தல்), பரமாத்மாவிடத்தில் மனதின் இருக்கை, மனஶ்ஶுத்தி (மனதில் காமக்ரோதலோபங்களின்மை) இவ்விதங்களான ஸாத்விகங்களான தபஸ்ஸுடையவர்கள் (17-16). கொடுக்கவேணுமென்கிற ஆஸ்திக்ய புத்தியுடன் கூடியவராய் ஶாஸ்திரங்களில் சொல்லியவாறு விஹிதமான காலத்தில், விஹிதமான தேஶத்தில், ஸத்பாத்ரத்தில் தானம் செய்பவர்கள். "நமக்கு உபகாரம் செய்திருப்பதினால் இவருக்குக் கொடுக்க வேண்டும்" என்கிற எண்ணமற்றவர்களாய் ஸாத்விகமான தானம் செய்பவர்கள் (17-20).

பரஸ்பரம் பின்னமான ஸமஸ்த ப்ராணிகளிலும் நியாமகனாய் வஸிக்கும் பரமாத்மா ஒருவனே என்றும், ஸர்வோத்தமனென்றும் பூதங்களைவிட வேருபட்டவனென்றும், நாசமற்றவனென்றும், ஆஶ்ரயபேதத்தினால் தன்னிட நியாமகரூபங்களில் பேதமற்றவன் என்கிற இவ்விதமான ஸாத்விகஞானமுடையவர்கள் (18-21). ஶாஸ்த்ரத்தினால் செய்யத்தகுந்ததென்று தம் தம் வர்ணாஶ்ரமங்களுக்கு விஹிதமான ஸ்னேஹத்வேஷமூலகங்களல்லாத கர்மங்களை, அபிமானமற்றவர்களாயும், பலத்தில் ஆசையற்றவர்களாயும் செய்பவர்கள் (18-23). ஸாத்விகமான கர்த்ருத்வமுடையவர்கள். பலத்தில் ஆசையைவிட்டு அஹங்கார மற்றவர்களாய், ஸந்தோஷத்துடன் (தம் இஷ்டம் ஸித்திக்குமாயின் ஸந்தோஷப்படாமலும், ஸித்திக்காவிடின் துக்கப்படாமலும்) கர்மங்களைச் செய்பவர்கள் (18-26). ஸ்வர்க்காதி அல்பமான பலன்களுக்கு ஸாதனமான ப்ரவ்ருத்தி தர்மங்களையும், மோக்ஷத்திற்கு ஸாதனமானநிவ்ருத்தி தர்மங்களையும், கர்த்தவ்யாகர்த்தவ்யங்களையும், பரதர்மானுஷ்டானத்தினாலுண்டாகும் பயத்தையும், ஸ்வதர்மத்தினாலுண்டாகும் அபயத்தையும், பந்தத்தையும், மோக்ஷத்தையும் நிஜமாய் அறிவிக்கும் ஸாத்விக புத்தியுடையவர்கள் (18-30). விஹிதவிஷயகமான பக்தியுடன் கூடிக்கொண்டிருக்கும் மன: ப்ராணேந்த்ரிய க்ரியைகளையும், விஹிதமல்லாத விஷயங்களிற் செல்லாமற் செய்துகொள்ளும் ஸாத்விகதைர்யத்தையுமுடையவர்கள் (18-33). எந்தஸுகத்தில் அதிக பரிசயத்தினால் மனது ஸுக

மடையுமோ, துக்கம் நாசமடையுமோ, எது அனுபவிக்கும்போது விஷத்தைப்போலிருந்து கடைசியில் அம்ருதத்தைப்போன்றதாகுமோ, எது பரமாத்மாவின் ஞான ப்ரஸாதங்களினுலுண்டாகிறதோ அத்தகைய ஸாத்விகஸுகமுடையவர்கள் (18-37).

இத்தகைய தைவீஸம்பத்துடைய ஸாத்விக ஜனங்கள் தம் தம் வர்ணுஶ்ரமங்களுக்கு உசிதமான கர்மங்களால் பரமாத்மாவைப் பூஜித்து ஞானத்தைச் சம்பாதித்துக்கொண்டு (14-6), நித்ய ஸுகத்தைத் தரக்கூடிய மோக்ஷத்தை யடைவார்கள் (16-5).

ராஜஸ சேதனர்கள்.

ராஜஸர்கள் ராஜஸ ஶ்ரத்தையுடன் கூடியவர்கள். யக்ஷர்களையும், ராக்ஷஸர்களையும் பூஜிப்பவர்கள் (17-4). அதிககாரமாயும், புளிப்பாயும், உவர்ப்பாயும், (ஓமத்தைப்போல்) அத்யுஷ்ணமாயும், தீக்ஷ்ணமாயும் (கடுகைப்போல்), ஸ்வாபாவிகமாய் ரஸமற்றதாயும், ஸந்தாபகரமானதாயும் இருக்கும் பதார்த்தங்களைப் புசிப்பவர்கள் (17-9). பலாபேக்ஷையுள்ளவர்களாய் தம்மிட பெருமையை வெளிப்படுத்துவதற்காகவே யாகம் செய்பவர்கள் (17-12). ஸத்காரம் (மனதினுலாதரம்) மானம் (வாக்கினுல் ஆதிக்கை), பூஜை இவைகள் தமக்கு வேண்டுமென்கிற எண்ணத்துடன் தம்மிடமில்லாத பெருமையை வெளியிடுவதற்காகவே முவ்வகையான தபஸ்ஸைச் செய்பவர்கள் (17-18). ப்ரத்யுபகாரமடையவேண்டு மென்றாகிலும், பலனடைய வேண்டுமென்கிற எண்ணத்தினுலாகிலும், கஷ்டத்துடன் தானம் செய்பவர்கள் (17-21). பலாசையினுல் அஹங்காரத்தினுல் கர்மங்களைச் செய்பவர்கள் (18-24). விஷயங்களில் ப்ரீதியுடையவர்கள். கர்மபலன்களை அபேக்ஷிப்பவர்கள். பிறருக்கு தொந்தரவு செய்யவேண்டுமென்கிற எண்ணமுள்ளவர்கள். லோபமுடையவர்கள். ஶாஸ்த்ரத்தில் சொல்லிய ஶுத்தி (ஶௌசம்) இல்லாதவர்கள். பலனுண்டாகில் ஸந்தோஷமடைபவர்கள். பலனடையாவிடின் துக்கப்படுபவர்கள் (18-27). தர்மாதர்மங்களையும், கார்யாகார்யங்களையும் ஸம்ஶயத்துடன் கூடியே அறிந்துகொள்ளும் புத்தியுடையவர்கள் (18-31). பலத்தை அபேக்ஷித்து தர்மார்த்த காமங்களையடைவதற்காகச்செய்யும் கார்யங்களில் தைர்ய

முடையவர்கள் (18-34). அனுபவிக்கும்போது அம்ருதத்தைப் போன்றதாயும், முடிவில் விஷத்தைப்போன்றதாயு மிருக்கும் விஷயேந்த்ரிய சம்பந்தத்தினுலுண்டாகும் ஸுகமுடையவர்கள். இத்தகைய ராஜஸர்கள் நடுத்தரத்தினர்கள். துக்கங்களால் கூடிய ஸுகத்தை யடைபவர்கள் (14-18). (இவர்கள் ஸாத்விகர்களைப் போல் வெறும் ஸுகத்தை மாத்திரமாகிலும், தாமஸரைப்போல் வெறும் துக்கத்தை மாத்திரமாகிலுமடைவதில்லை. ஸுகதுக்கங் களைச்சேர்ந்தே யனுபவித்து வருபவர்கள்).

தாமஸ சேதனர்கள்

தாமஸஜீவர்கள் (தைத்யர்கள்) மனிதஶரீரத்தைப்போல் ஸாதாரண ஜனங்களுக்குத்தோன்றும் அப்ராக்ருதமான ஶரீரத்தைத் தரித்து, பக்தர்களுக்கு அனுக்ரஹிப்பதற்காகவே அவதரித்த, சராசராத்மகமான ப்ரபஞ்சத்திற்கு முக்ய நியாமகனுன ஸ்ரீ கிருஷ்ணனை— அவனிட ஸர்வோத்தமத்வம் முதலிய மஹாமஹிமைகளை அறியாமல் தூஷிப்பவர்கள் (9-11). வீணுசையுடையவர்கள் (இவர்களிட ஆசைகள் பயனற்றதாகும்). பயனற்ற யஜ்ஞாதி கர்மங்களுள்ளவர்கள் (இவர்கள் செய்யும் யஜ்ஞாதி கர்மங்கள் பயனற்றவைகளாகும்.) வீணுன ஞானமுடையவர்கள். (இவர்களிட ஞானம் பலனுக்கு காரணமாவதில்லை) விவேகமற்றவர்கள். மோஹகமான, அஜ்ஞானத்தைப் பிறப்பிக்கக்கூடிய ஆஸுர (ராக்ஷஸ) ப்ரக்ருதியை ஆஶ்ரயித்தவர்கள். (இவர்களை ராக்ஷஸர்கள், தைத்யர்கள்) (9-12). இவர்கள் தம்பம், மதம், அபிமானம் இவைகளையுடையவர்கள். ஸாதுக்களை துன்பப்படுத்துபவர்கள். நிஷ்டூரமான (கொடுமையான) வார்த்தைகளை யாடுபவர்கள் (16-4) 'விஹித கர்மங்களைச் செய்யவேண்டும், நிஷித்த கர்மங்களைச்செய்யக்கூடாது' என்கிற ஞானமற்றவர்கள். பாஹ்யாந்தர ஶுத்தியற்றவர்கள். நிஜமாடாதவர்கள். பொய் சொல்லுபவர்கள். ஸதாசாரமற்றவர்கள். முத்துச்சிப்பியில் அஞ்ஞானத்தினுல் தோன்றும் வெள்ளியைப்போல் ஜகத்து ப்ரஹ்மத்தில் அஞ்ஞானத்தினுல் தோன்றுகிறது, ப்ராந்தி கல்பிதமானது, மித்யை (பொய்) என்று சொல்லுபவர்கள். இது முத்துச்சிப்பி என்கிற ஞானமுண்டானவுடன் அதில் தோன்றும் வெள்ளி எப்போது (முக்காலத்திலு) மில்லா

தது என்று எப்படி தெரியவருகிறதோ, அப்படியே ப்ரஹ்ம ஞானம் பிறந்த உடனே ப்ரஹ்மத்தில் தோன்றும் ஜகத்து எப்போது மில்லாததென்று தெரியவருவதென்று சொல்லுபவர்கள். நியாமகனான பரமாத்மா இல்லை என்று சொல்லுபவர்கள். பரஸ்பர ஸம்பூதமல்லாத (ப்ரக்ருதி மஹதஹங்காராதி க்ரமத்தினால் அல்லது யஜ்ஞத்தினால் மழை, மழையினால் அன்னம், அன்னத்தினால் ப்ராணிகள் இவ்வித க்ரமத்தினால் பிறக்காத) தென்று சொல்லுபவர்கள். ஸதஸத்விலக்ஷணம் (ஸத்யமானதல்ல, அஸத்யமானதல்ல, பிறந்ததல்ல எல்லாவற்றைவிட விலக்ஷணமானது) என்று சொல்லுபவர்கள். காமத்திற்குக் காரணமான அவித்யா கார்யம் (மாறுதல்) என்று சொல்லுபவர்கள் (16-8). துஷ்டமனதுடையவர்கள். இவ்விதமான ஞானமுடையவர்களாய் கோரமான கர்மங்களைச் செய்பவர்கள். ஸாதுக்களுக்கு பகைவர்கள். ஜகத்தை நாசப்படுத்துவதற்காகவே பிறந்தவர்கள் (16-9). டம்பத்தினாலும் அஹங்காரத்தினாலும், மதத்தினாலும் கூடிக்கொண்டு முடிப்பதற்கு முடியாத விஷயங்களை அபேக்ஷிப்பவர்கள். ஸ்வாபாவிகமான மித்யாஞானத்தினால் துஶ்ஶாஸ்திரத்தில் சொன்ன துர் விஷயங்களை கிரகித்து, துராசாரமுடையவர்களாய், அல்ப ஸுகத்திற்காக ப்ரவர்த்திப்பவர்கள் (16-10). மரணமடைகிறவரைக்கும் முடிவற்ற சிந்தையுடையவர்கள். விஷயானுபவங்களே முக்யமென்றறிந்து அவைகளில் மூழ்கியவராயிருப்பவர்கள். ஐஹிக (இவ்வுலக) ஸுகத்தைத் தவிர ஆமுஷ்மிக (மேலுலகத்தின்) ஸுகமில்லை என்று நிச்சயித்து (16-11), ஆசை என்கிற பாசத்தினால் கட்டுபட்டவராய், காமக்ரோதங்களுக்கு முக்யாஶ்ரயராய் திருட்டு முதலிய அர்வ்யாபாரங்களைச்செய்து, காம்ய விஷயங்களை அனுபவிப்பதற்கு தனத்தை அபேக்ஷிப்பவர்கள் (18-12). நானே ஈஶ்வரன் என்று சொல்பவர்கள். தம்மைத்தாமே மேலோரென்று அறிந்துகொள்பவர்கள். வினயமற்றவர்கள். தனத்தினாலும், மானத்தினாலும், மதத்தினாலும் கூடிக்கொண்டு, விதியை (கட்டளையை) மீறி டம்பத்தினால் பெயர் கிடைக்கவேண்டுமென்றே யாகங்களைச் செய்பவர்கள் (16-17) அஹங்காரம், பலம், தர்பம், காமம், க்ரோதம் இவைகளையுடையவர்களாய், தன்னிடத்

திலும் பிறரிடத்திலும் நியாமகனாயிருக்கும் பரமாத்மாவை த்வே
ஷிப்பவர்கள் (16-18). தாமஸமான ஶ்ரத்தையுடையவர்கள். பூத
ப்ரேதங்களைப் பூஜிப்பவர்கள் (17-4). ஶாஸ்த்ரங்களல்லாத
ஆகமங்களால் சொல்லப்பட்ட, தமக்கும் பிறருக்கும் தொந்தர
வைத்தரக்கூடிய தபஸ்ஸையும், யாகங்களையும் தம்பத்தினாலும்,
அஹங்காரத்தினாலும், ஆக்ரஹத்தினாலும் செய்பவர்கள். விஷயங்
களில் ஆசையும் ஆஸக்தியுமுடையவர்கள் (17-5). விவேகமற்றவர்
களாய் ஶரீரத்தில் நியாமகராயிருக்கும் தேவதைகளுக்கும், மற்
றெல்லாவற்றிற்கும் நியாமகனாய் ஶரீரத்திலிருக்கும் பரமாத்
மாவை குணமற்றவனென்றும், அல்பகுணமுடையவனென்றும்
தூஷிப்பவர்கள். ஒருயாமத்தை (மூன்றுமணிநேரம்) கடந்த அன்
னத்தையும், ருசிகெட்ட பதார்த்தங்களையும், பழையதையும், எச்சில்
களையும் ப்ரீதியுடன் புசிப்பவர்கள். அன்னதானமற்ற, தக்ஷிணை
யற்ற, மந்த்ரமற்ற, ஶ்ரத்தையற்ற யஜ்ஞத்தைச்செய்பவர்கள்
(17-13). அவிவேக மூலகமான துராக்ரஹத்தினால் தாங்கள்
துக்கப்பட்டுக்கொண்டே பிறரை நாசப்படுத்துவதற்காகவே
காயிக வாசிக மானஸிகமான (தாமஸ) தபஸ்ஸைச்செய்பவர்கள்.
அஶுத்தமான தேஶத்திலும், அஶுத்தமான காலத்திலும் ஆதர
வின்றி அபமானப்படுத்திக்கொண்டே அபாத்திரர்களுக்கு
(யோக்யதையற்றவர்களுக்கு) தானம் செய்பவர்கள் (17-22). கார்ய
மான தேகம், ஶிலாகாஷ்டாதிகளால் செய்யப்பட்ட விக்ரஹம்,
இவைகளும் ஜீவர்களுமே ஸகலகுணபூர்ணமான ப்ரஹ்மமென்கிற
புத்தியுள்ளவர்கள். நிஜமான அர்த்தங்களை அறியாமல் யுக்திக்கு
விருத்தமான மித்யையான அர்த்தங்களை விஷயீகரிக்கும் (அறி
யும்) இழிவான பலனுடைய ஞானமுடையவர்கள் (18-22). முன்
னேரிடும் பாவத்தையும், தனக்குண்டாகும் கெடுதியையும், பிற
ருக்குண்டாகும் தொந்தரவையும் கவனிக்காமல், தன்னிடதிறமை
யையறியாமலே வெரும் மூடத்தனத்தினால் கர்மங்களைச் செய்
பவர்கள், (18-25). நியமங்களை விட்டவர்கள். விவேகமற்றவர்கள்.
வினயமற்றவர்கள். மூர்க்கர்கள். இழிவான கார்யங்களைச் செய்
பவர்கள். சோம்பலுடையவர்கள். மனோதளர்ப்பல்பமுடையவர்
கள். இன்று செய்ய வேண்டியதை வெகுநாள் கழித்துச் செய்

பவர்கள். (18-28). அஜ்ஞானத்தினால் மூடப்பட்டிருப்பவராகை யால் அதர்மத்தை தர்மமென்று கிரஹிக்கும் புத்தியுள்ளவர்கள். எல்லாவற்றையும் விபரீதமாய் கிரஹிக்கும் புத்தியுள்வர்கள். (18-32). துஷ்டபுத்தியுடையவர்கள். இவ்விதமான தாமஸர்கள் ஸ்ரீ பரமாத்மாவினால் அஸுர யோனியில் பிறப்பிக்கப்படுபவர்கள் (16-19). இவ்விதமாக அஸுரயோனிகளை அடிக்கடி யடைந்து கொண்டே ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவை யடையாமலே அதோ கதியை (வெறும் துக்கானுபவரூபமான அந்தந்தமஸ்ஸை) யடை பவர்கள் (16-20).

---

## ஜட ப்ரகரணம்.

ஜடமான ப்ரக்ருதி ஸத்வரஜஸ்தமோ குணாத்மகமானது. மஹத்தத்வம், அஹங்காரதத்வம், ப்ருதிவீ, அப்பு, தேஜஸ்ஸு, வாயு, ஆகாயம், புத்தி, க்ராணம், த்வக், சக்ஷுஸ், ஶ்ரோத்ரம், ரஸனம், வாக், பாணி, பாதம், பாயு, உபஸ்தம், ஶப்தம், ஸ்பர்ஶம், ரூபம், ரஸம், கந்தம், என்கிற 23 வகையானது (13-5). இச்சை, த்வேஷம், ஸுகம், துக்கம், ஞானாத்மகமான மனோவ்ருத்தி, தைர்யம் என்கிற விகாரங்களையுடையது (13-6). பரமாத்மாவின் அதீனமானது. விடுவித்துக்கொள்ளுவதற்கு அஶக்யமானது (7-14). தேகத்துடன் கூடியிருக்கும் ஜீவர்களுக்கு உபகாரியாய் தேகத்திலிருப்பதினால் அதிபூதமென்று அழைக்கப்படுவது (8-4). சதுர்முகரிட ஆயுள் (நூரு வர்ஷங்கள்) ரூபமான பரமாத்மாவின் பகலானதும் தன்னிடத்திலுள்ள ஜகத்தை வெளிப்படுத்துவது, இரவானதும் மற்றும் தன்னிடம் சேர்த்துக்கொள்ளுவது. (8-18). அடிக்கடி பகலிற் பிறந்து இரவில் நாசமடையும் ஜகத்தை தன்னுள் உள்ளது. (8-19). பரமாத்மாவினால் நியம்யமாய் ஜகத்தைப்பிறப் பிப்பது (9-10). அநாதியானது. தன்னாலுண்டாயிருக்கும் தேகத் திலிருக்கும் ஜீவர்களுக்கு தன்னாலுண்டாகும் ஸுகதுக்காதிகளை அனுபவிக்கச் செய்வது (13-20). ஜீவர்களை தன்னிட குணங்களின் ஸம்பந்தத்தினால் இழிவான மற்றும் மேலான யோனிகளில் பிறப் பிப்பது (13-21). நாசமற்ற தேவ மனுஷ்ய தைத்ய ஜீவர்களை தன்னாலுண்டான தேகத்தில் கட்டுப்படுத்துவது. (14-5).

### குணத்ரயங்களின் செய்கை.

தோஷமற்ற ப்ரகாஶகமான ஸத்வகுணம் நிர்மலமானதாகை யால் ஸுகத்தினாலும் ஞானத்தினாலும் தேவ (ஸாத்விக) ஜீவர்களை கட்டுப்படுத்துகிறது. (ஸுகத்தையும் ஞானத்தையும் கொடுப் பது) (14-6). 'இது நமக்கு வேண்டும்' என்கிற எண்ணத்தையும்,

பதார்த்தங்களில் ஆஸக்தியையும் பிறப்பிக்கும் ராகாத்மகமான ரஜோகுணம் கர்மத்திஞல் மனுஷ்ய ஜீவர்களை கட்டுப்படுத்துகிறது (14-7). அஜ்ஞானத்தைப் பிறப்பிக்கும் தமோகுணம் ஸமஸ்த ப்ராணிகளுக்கும் மோகத்தை (மித்யா ஞானத்தை) யுண்டாக்குவது. மற்றும் ப்ரமாதம், ஆலஸ்யம், இவைகளால் தைத்யஜீவர்களை கட்டுப்படுத்துவது (14-8). ஸத்வகுணம் ஸுகத்தைக்கொடுப்பது. ரஜோகுணம் கர்மத்தை யுண்டாக்குவது. தமோகுணம் தத்வ ஞானத்தை மறைத்து ப்ரமாதத்தை யுண்டாக்குவது (14-9). ஸகல ப்ராணிகளின் தேகங்களிலும் ஸத்வகுணம் விருத்தியடைந்திருக்கையில் ரஜோகுணதமோகுணங்களை அடக்கி, தன்னிட கார்யத்தை ஸாதித்துக்கொள்ளுவது. ரஜோகுணம் விருத்தியடைந்தபோது ஸத்வகுண தமோகுணங்களை யடக்கி தன்னிட கார்யத்தை ஸாதித்துக்கொள்ளுவது. தமோகுணம் விருத்தியடைந்திருக்கும்போது ஸத்வகுண ரஜோகுணங்களை யடக்கி தன் கார்யத்தை ஸாதித்துக்கொள்ளுவது (14-10). எப்பொழுது இத்தேகத்தில் ஶ்ரோத்ராதிகளில் (காது முதலியவைகளில்) ஶப்தாதிஞானரூபமான ப்ரகாஶமும், மற்றும் ஸுகம் முதலியவைகளுண்டாகின்றனவோ அப்பொழுது ஸத்வகுணம் அபிவ்ருத்தமாயிருக்கிறதென்று அறிய வேண்டும் (14-11). ரஜோகுணம் தான் அபிவ்ருத்தமாயிருக்கும் போது—ஸத்பாத்திரங்களில் தனுதிகளைக் கொடுப்பதற்கு மனது வராமற்செய்வது. பயனற்ற வேலைகளைச் செய்விப்பது. காம்யகர்மங்களை ஆரம்பிக்கச்செய்வது, மனதுக்கு ஸுகமின்மை, ஸ்ப்ருஹை (அகப்படாத வஸ்துக்களில் வேண்டுமென்கிற ஆசை) இவைகளை யுண்டாக்குவது. (லோபாதிகள் ரஜோகுணத்தின் கார்யங்கள்) (14-12). தமோகுணம் விருத்தியடைந்திருக்கும்போது ஶ்ரோத்ராதிகளில் ஶப்தாதிகளின் ஞான முண்டாகாமை, ப்ரயத்னம் செய்யாமை, அனவதானதை (கவனிக்காமை) விபரீதஞானம் இவைகளை யுண்டாக்கக்கூடியது. (அஜ்ஞாநாதிகள் தமோகுணகார்யங்கள்) (14-13). ஸத்வகுணம் தான் விருத்தியடைந்திருக்கும்போது மரணமடைபவர்களை விஷ்ணு ஞானிகளடையும் நிர்மலமான தேகத்தை யடையும்படியாகச் செய்வது (14-14). ரஜோகுணம் தான் விருத்தியடைந்திருக்கும்போது மரணமடைந்தவரை காம்ய கர்மங்களைச்செய்பவர்களிடகுலத்தில் பிறப்பிப்பது. தமோகுணம் தான் விருத்தியடைந்திருந்தபோது மரணமடைந்தவனை தைத்ய குலத்தில் பிறப்பிக்கிறது (14-15). ஸத்வகுணம் ஞானத்தையும் (தத்வ ஞானத்தையும்) ரஜோகுணம் ஸ்வர்க்காதி விஷயங்களில் ஆஸக்தியையும், தமோகுணம் ப்ரமாத மோக அஜ்ஞானங்களையும் உண்டாக்குவது (14-17).

ஸ்ரீ:

|| ஸ்ரீ ராமசந்த்ரோ விஜயதே ||

# ஸ்ரீ பகவத்கீதா.

---

## ப்ரதிபத பதார்த்த தாத்பர்ய விசாரங்களுடன் கூடியது

ஸ்ரீ குருப்யோ நம:

த்ருதராஷ்ட்ர உவாச—

(மூலம்)—தர்மக்ஷேத்ரே குருக்ஷேத்ரே ஸமவேதா யுயுத்ஸவ:||
மாமகா: பாண்டவாஶ்சைவ கிமகுர்வத ஸஞ்ஜய ||1||

(பதவுரை)—தர்மக்ஷேத்ரே, குருக்ஷேத்ரே, ஸமவேதா:, யுயுத்ஸவ:| மாமகா:, பாண்டவா:, ச, ஏவ, கிம், அகுர்வத, ஸஞ்ஜய ||

| | | | |
|---|---|---|---|
| த்ருதராஷ்ட்ர: | = த்ருதராஷ்டர் | மாமகா: | = என் ஸம்பந்திகளான துர்யோதனாதிகள் |
| உவாச | = கேழ்க்கிறார். | ச | = மற்றும் |
| ஸஞ்ஜய! | = ஸஞ்ஜயனே! | பாண்டவா: | = பாண்டு குமாரர்களான தர்மராஜரே முதலானவர்கள் |
| தர்மக்ஷேத்ரே | = தர்மபூமியான | கிம் | = என்ன |
| குருக்ஷேத்ரே | = குருக்ஷேத்ரத்தில் | அகுர்வத | = செய்தார்கள்? |
| யுயுத்ஸவ: (ஸந்த:) ஏவ | = போர்புறிவதற்கு விருப்பமுள்ளவராயே | | |
| ஸமவேதா: | = கூடியிருக்கும் | | |

ஸஞ்ஜய உவாச—

(மூ)—த்ருஷ்ட்வா து பாண்டவானீகம் வ்யூடம் துர்யோதனஸ்
ததா (ஊ-ர) ||
ஆசார்ய முப ஸங்கம்ய ராஜா வசன மப்ரவீத் ||2||

(ப. உ.) த்(ரு)ஷ்ட்வா, து, பாண்டவானீகம், வ்யூடம், துர்யோதன:, ததா(ஊா) | ஆசார்யம், உப-ஸங்கம்ய, ராஜா, வசனம், அப்ரவீத் ||

| | | | |
|---|---|---|---|
| ஸஞ்ஜய: | = ஸஞ்ஜயன் | அனீகம் | = படையை |
| உவாச | = சொல்லுகிறான் | த்ருஷ்ட்வா து | = கண்ட உடனே |
| ததா(தா) | = அச்சமயத்தில் | ஆசார்யம் | = த்ரோணாசார்யனை |
| ராஜா | = அரசனான | | |
| துர்யோதன: | = துர்யோதனன் | உபஸங்கம்ய | = அடைந்து |
| வ்யூடம் | = அணிவகுக்கப்பட்ட | வசனம் | = வார்த்தையை |
| பாண்டவ- | = பாண்டவரின் | அப்ரவீத் | = ஆடினான். |

(மூ)—பஶ்யைதாம் பாண்டு புத்ராணா மாசார்ய மஹதீம் சமூம்||
வ்யூடாம் த்ருபத புத்ரேண தவ ஶிஷ்யேண தீ(யீ)மதா ||3||

(ப. உ.) பஶ்ய, ஏதாம், பாண்டு-புத்ராணாம், ஆசார்ய, மஹதீம், சமூம்|
வ்யூடாம், த்ருபத-புத்ரேண, தவ, ஶிஷ்யேண, தீ(யீ)மதா ||

| | | | |
|---|---|---|---|
| ஆசார்ய | = த்ரோணாசார்யரே! | வ்யூடாம் | = அணிவகுக்கப்பட்டிருக்கும் |
| தவ | = உம்மிட | | |
| தீ(யீ)மதா | = புத்திமானை | பாண்டு-புத்ராணாம் | = பாண்டுகுமாரர்களின் |
| ஶிஷ்யேண | = சீடனை | மஹதீம் | = பெரியதான |
| த்ருபத-புத்ரேண | = த்ருபத குமாரனை த்ருஷ்டத்யும்னனால் | ஏதாம் | = இந்த |
| | | சமூம் | = படையை |
| | | பஶ்ய | = பாரும். |

(மூ)—அத்ர ஶூரா மஹேஷ்வாஸா: பீமார்ஜுன ஸமா யுதி(யி) ||
யுயுதா(யா)னோ விராடஶ் ச த்ருபதஶ் ச மஹாரத: ||4||

(ப. உ.) அத்ர, ஶூரா:, மஹேஷ்வாஸா:, பீமார்ஜுனஸமா:, யுதி(யி)| யுயுதா(யா)ன:, விராட:, ச, த்ருபத:, ச, மஹாரத: (ஶ:) ||

| | | | |
|---|---|---|---|
| அத்ர | = இப்படையில் | | (எவரெவரெனின்) |
| மஹேஷ்வாஸா: | = பெரியவில்லுகளையுடைய | யுயுதான: | = ஸாத்யகி |
| | | ச | = மற்றும் |
| யுதி(யி) | = யுத்தத்தில் | விராட: | = விராட மஹாராஜன் |
| பீமார்ஜுன ஸமா: | = பீமார்ஜுனர்களுக்குச் சமானரான | மஹாரத: | = மஹாரதி(யி)களை |
| ஶூரா: | = வீரர்கள் | த்ருபத: | = த்ருபத மஹாராஜன் |
| ஸந்தி | = இருக்கிறார்கள். | ச | = மற்றும் |

வாயு: = காற்று
அம்ப(ஸ)ஸி = ஜலத்தில் (இருக்கும்)
நாவம், இவ = படகைப்போல்
ஹரதி = அபஹரிக்கிறது. (நாஶம் செய்கிறது.)
ஹி = இது ப்ரமாண ஸித்தமானது.

(மூ)—தஸ்மாத்யஸ்ய மஹாபா(வா)ஹோ நிக்ருஹீதானி ஸர்வஶ: ||
இந்த்ரியாணீந்த்ரியார்தே(யே)ப்யஸ் தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டிதா || 68 ||

(ப. உ.) தஸ்மாத், யஸ்ய, மஹாபா(வா)ஹோ, நிக்ருஹீதானி, ஸர்வஶ: | இந்த்ரியாணி, இந்த்ரியார்த்தேப்(பீ)ய:, தஸ்ய, ப்ரஜ்ஞா, ப்ரதிஷ்டிதா ||

மஹாபா ஹோ = பாஹுபராக்ரமஶாலியான அர்ஜுனு!
தஸ்மாத் = இந்த்ரிய நிக்ரஹமுடையவனுக்கு மன: ப்ரஸாதமும் (அமைதியும்) மன: ப்ரஸாதமுடையவனுக்கு மனோ நிரோதமும் (தடையும்) மனோ நிரோத முடையவனுக்கு ஶ்ரவண மனனத்தினால் பா(ஸா)வனையும், (த்யானமும்) பா(ஸா)வனையுடையவனுக்கு அபரோக்ஷ ஞானமும் உண்டாகிறதினால்
யஸ்ய = எவனுடைய
இந்த்ரியாணி = இந்த்ரியங்கள்
ஸர்வஶ: = ஸகலமான
இந்த்ரியார்த்தே(யே)ப்(பீ)ய: = இந்த்ரிய விஷயங்களிலிருந்து
நிக்ருஹீதானி = கட்டுப் பட்டிருக்கின்றனவோ (விஷயங்களைக் குறித்துப் போகாமற் செய்யப் பட்டிருக்கின்றனவோ)
தஸ்ய = அம்மனிதனிட
ப்ரஜ்ஞா = அபரோக்ஷ ஞானம்
ப்ரதிஷ்டிதா = ஸ்திர(யி)ரமானது.

(மூ)—யா நிஶா ஸர்வபூ(ஸ-ு)தானும் தஸ்யாம் ஜாக(ம)ர்தி ஸம்யமீ||
யஸ்யாம் ஜாக்ரதி பூ(ஸ-ு)தானி ஸா நிஶா பஶ்யதோ முனே: || 69 ||

(ப. உ.) யா, நிஶா, ஸர்வபூ(ஸ-ு)தானும், தஸ்யாம், ஜாக(ம)ர்தி, ஸம்யமீ | யஸ்யாம், ஜாக்ரதி, பூ(ஸ-ு)தானி, ஸா, நிஶா, பஶ்யத:, முனே:||

| | |
|---|---|
| ஸர்வ பூ(ஹு) தானும் | = ஸகல ப்ராணி களுக்கும் |
| யா | = எந்த பரமாத் மாவின் ஸ்வ ரூபம் |
| நிஶா (இவ) | = இரவி லிருக்கும் பதார்த்தங்களை ப்போல் காணப் படுவதில்லையோ |
| தஸ்யாம் | = அந்த பரமாத் மாவின் ஸ்வரூப விஷயத்தில் |
| ஸம்யமீ | = ஸ்வாதீனமான இந்த்ரியங்களை யுடைய ஞானி யானவன் |
| ஜாகர்தி | = ஜாக்ரதையா யிருக்கிருன். (பரமாத்மாவின் ஸ்வரூபத்தைப் பார்க்கிருன்.) |
| பூ(ஹு)தானி | = இந்த்ரிய நிக்ர ஹமில்லாத மனிதர்கள் |
| யஸ்யாம் | = எந்த ஶப்தம் ஸ்பர்ஶம் முதலி யவிஷயங்களில் |
| ஜாக்ரதி | = ஜாக்ரதையா யிருக்கிருர்க ளோ (விஷயங் களைத் தெரிந்து கொள்கிருர்க ளோ) |
| ஸா | = அந்த விஷயங் கள் |
| முனே: | = பரமாத்மாவின் மனனம் செய் யும் (ப்ரஹ்ம விசாரத்தைச் செய்து கொண் டிருக்கும்) |
| பஶ்யத: | = பரமாத்மாவின் அபரோக்ஷ ஞானமடைந்தி ருக்கும் மனித னுக்கு |
| நிஶா | = இரவிலிருக்கும் பதார்த்தங்களை ப்போல் (காண ப்படமாட் டாது.) |

(க. உ) :—எவனொருவன் விஷயங்களில் ஆஸக்தனுகாமல் பரமாத்மாவின் த்யானுதிகளைச் செய்கிருனே, அவனே அப ரோக்ஷ ஞானியாவான்.

அவதரணிகை :—ஞானியானவன் விஷயங்களில் ஆஸக்தனு காமற் போனுல், அன்னுதிகளை யடையாமல் அவனுக்கு ஜீவனமே கஷ்டமாகுமாகையால், விஷயங்களில் ஆஸக்தனுகக் கூடா தென்று சொல்வது எப்படிப் பொருந்தும்? என்னும் ஶங்கைக் குச் சமாதானத்தைச் சொல்கிருன் :—

(மூ)—ஆபூர்யமாண மசல ப்ரதிஷ்டம்
ஸமுத்ரமாப: ப்ரவிஶந்தி யத்(்வ)வத் ||

தத்(த்)வத்காமா யம் ப்ரவிஶந்தி ஸர்வே
ஸ ஶாந்திமாப்னோதி ந காமகாமீ || 70 ||
விஹாய காமான்யஸ் ஸர்வான் புமாம்ஶ்சரதி நிஸ்ப்ருஹ:||
நிர்மமோ நிரஹங்காரஸ் ஸ ஶாந்திமதி(யி)க(ம)ச்ச(ஹ)தி ||71||

*(ப. உ.) ஆபூர்யமாணம், அசல-ப்ரதிஷ்டம், ஸமுத்ரம், ஆப:, ப்ரவிஶந்தி, யத்வத் | தத்வத், காமா:, யம், ப்ரவிஶந்தி, ஸர்வே, ஸ:, ஶாந்திம், ஆப்னோதி, ந, காமகாமீ || விஹாய, காமான், ய:, ஸர்வான், புமான், சரதி, நிஸ்ப்ருஹ: | நிர்மம:, நிரஹங்கார:, ஸ:, ஶாந்திம், அதி(யி)க(ம)ச்ச(ஹ)தி ||*

ஆபூர்யமாணம், அபி = கங்கை, கோதாவரீ முதலிய நதிகளின் ஜலத்தால் பூர்ணமாய்க் கொண்டிருந்த போதிலும்
அசலப்ரதிஷ்டம் = பெருகுதலே முதலியவைகளையற்று ஒரே விதமாயிருக்கும்
ஸமுத்ரம் = கடலை
ஆப: = கங்கை கோதாவரி முதலியநதி ஜலங்கள்
யத்வத் = எவ்வாறு
ப்ரவிஶந்தி = ப்ரவேஶிக்கின்றனவோ,
தத்வத் = அவ்வாறே
ஸர்வே = ஸமஸ்தங்களான
காமா: = விரும்பத் தக்க அன்னாதி விஷயங்கள்
யம் = எவனைக் குறித்து
ப்ரவிஶந்தி = ப்ரவேஶிக்கின்றனவோ (அடைகின்றனவோ)
ஸ: = அந்த புருஷன்
ஶாந்திம் = மோக்ஷத்தை
ஆப்னோதி = அடைகிறான்.
காமகாமீ = காம்யங்களாகிய அன்னம், ஸ்திரீ, மக்கள் முதலியவைகளை அபேக்ஷிக்கும் புருஷன்
(ஶாந்திம்) = மோக்ஷத்தை
ந, ஆப்னோதி = அடைவதில்லை
ய: = எவனொருவன்
நிஸ்ப்ருஹ: (ஸன்) = நிஷித்த பதார்த்தங்களின் ஆசையைத் துறந்தவனாய்
நிர்மம:(ஸன்) = எல்லாம் ஈஶ்வராதீனமானபடியால், நானே இவைகளுக்கெல்லாம் ஸ்வாமி என்னும் அபிமானமற்றவனாய்
நிரஹங்கார:(ஸன்) = நானே ஸ்வதந்த்ரகர்த்தா என்னும் அஹங்காரமற்றவனாய்

ஸர்வான் = ஸகலமான
காமான் = ஆசைகளை
விஹாய = விட்டு
சரதி = அநாயாஸமாக வந்த விஷயங்களை ஶரீர ரக்ஷார்த்தமாய் அனுபவிக்கிறான்
ஸ: = அந்த ஞானி
ஶாந்திம் = மோக்ஷத்தை
அதி(யி) க(ம)ச்ச (ஹ)தி = அடைகிறான்.

(க. உ.) :—ஸமுத்ரமானது (கடல்) எவ்வாறு பல நதி ஜலங்கள் தன்னை யடைந்துவந்தாலும் (தன்னுள் ப்ரவேஶித்தாலும்), அவைகளால் பெருகுவதில்லையோ, நதி ஜலங்கள் வராமலிருப்பதினால் குறைந்து போவதில்லையோ, வரவேண்டுமென்று ப்ரயத்னமும் செய்வதில்லையோ, அநாயாஸமாகவந்த ஜலங்களை தன்னுள் சேர்த்துக்கொள்கிறதோ, அவ்வாறே எந்த மனிதன் அன்னாதி விஷயங்கள் தன்னைக் குறித்து வந்தாலும் ஸந்தோஷப்படாமல், வராவிடின் து:கப்படாமல், அவைகளுக்காக ப்ரயத்னம் செய்யாமல், அநாயாஸமாக ஈஶ்வரேச்சையால் கிடைத்த அன்னாதி விஷயங்களை 'நான் செய்பவன், இது என்னுடையது' என்னும் அபிமானத்தை விட்டு அனுபவிக்கிறானோ, அப்படிப்பட்ட மனிதன் மோக்ஷத்தை யடைகிறான். 'எனக்கு இத்தகைய ஸ்த்ரீ வேண்டும், இத்தகைய குமாரன் வேண்டும், இத்தகைய அன்னம், இவ்விதமான படுக்கை, இவ்விதமான குதிரை, இவ்விதமான மோட்டார், வீடு, மெத்தை வேண்டும்' என்று அபேக்ஷிப்பவன், அவைகளை அடைவதற்காக எல்லா காலத்தையும் போக்கடித்துக்கொண்டு, ஈஶ்வராராதனை செய்வதற் கவகாஶமில்லாமல், ஈஶ்வர ஞானத்தை அடையாமல் அதினால் மோக்ஷத்தையும் அடையாமல் ஸம்ஸாரத்தை அனுபவிக்கிறான். ஞானிகள் அஜ்ஞானிகளைப்போல் நானாவிதங்களாகிய விஷயங்களை விரும்பாமல் கம்பீரமான ஸமுத்ரத்தைப்போல் அநாயாஸமாய் வந்த விஷயங்களை அனுபவித்துக்கொண்டே ஜீவனம் செய்கிறார்கள்.

(மூ)—ஏஷா ப்ராஹ்மீ ஸ்தி(யி)தி: பார்த்த நைநாம் ப்ராப்ய விமுஹ்யதி ||
ஸ்தி(யி)த்வாஸ்யாமந்தகாலேபி ப்ரஹ்ம நிர்வாண ம்ருச்ச(ஹ)தி ||72||

(ப. உ.) ஏஷா, ப்ராஹ்மீ, ஸ்தி(யி)தி:, பார்த்த, ந, ஏனாம், ப்ராப்ய, விமுஹ்யதி | ஸ்தி(யி)த்வா, அஸ்யாம், அந்தகாலே, அபி, ப்ராஹ்ம, நிர்வாணம், ரிச்ச(ஹ)தி ||

| | |
|---|---|
| பார்த்த | = அர்ஜுனா! |
| ஏஷா, ஸ்தி(யி)தி: | = இந்த ப்ராஹ்ம ஜ்ஞானிகளின் ஸ்தி(யி)தி |
| ப்ராஹ்மீ | = ப்ராஹ்ம ப்ராப்திக்குக் காரணமானது. |
| ஏனாம் | = இந்த ப்ராஹ்ம ஞானிகளின் ஸ்தி(யி)தியை |
| ப்ராப்ய | = அடைந்து |
| ந விமுஹ்யதி | = ஸம்ஸாரது:கத்தை அனுபவிப்பதில்லை. |
| அஸ்யாம் | = இந்த ப்ராஹ்ம ஞானிகளின் ஸ்தி(யி)தியில் |
| அந்தகாலே, அபி | = மரண காலத்திலும் |
| ஸ்தி(யி)த்வா | = இருந்து |
| நிர்வாணம் | = ப்ராக்ருத ஶரீர ரஹிதமான |
| ப்ராஹ்ம | = ப்ராஹ்மத்தை |
| ரிச்ச(ஹ)தி | = அடைகிறான். |

ஓம் தத் ஸத்

ஸ்ரீ பகவத் கீதையில் ஸ்ரீ கிருஷ்ணார்ஜுன ஸம்வாதத்தில்

ஸாங்க்ய யோகமென்னும்

இரண்டாவது அத்தியாயம் முற்றிற்று.

# மூன்றாவது அத்தியாயம்.

அர்ஜுன உவாச:—

(மூ)—ஜ்யாயஸீ சேத் கர்மணஸ்தே மதா புத்திர் ஜனார்த(ஊ)ன ||
தத் கிம் கர்மணி கோ(வோ)ரே மாம் நியோஜயஸி கேஶவ ||1||

(ப. உ.) ஜ்யாயஸீ, சேத், கர்மண:, தே, மதா, புத்தி:, ஜனார்த(ஊ)ன | தத், கிம், கர்மணி, கோ(வோ)ரே, மாம், நியோஜயஸி, கேஶவ ||

| | |
|---|---|
| ஜனார்தன | = துஷ்டஜன ஸம்ஹாரகனான க்ருஷ்ணா! |
| கர்மண: | = கர்மத்தைவிட |
| புத்தி: | = ஞானம் |
| ஜ்யாயஸீ (இதி) | = ஶ்ரேஷ்டமானதென்று |
| தே | = உனக்கு |
| மதா, சேத் தத் (தர்ஹி) | = ஸம்மதமாயிருக்குமாயின் |
| கேஶவ (கஶ்ச ஈஶஶ்ச கேஶௌ தௌ வர்தயதீதி) | = ப்ரஹ்மருத்ராதிகளுக்கு நியாமகனான க்ருஷ்ணா! |
| கோ(வோ)ரே | = ராகத்வேஷாதிகளுடன்கூடிய |
| கர்மணி | = யுத்தமென்னும் கர்மவிஷயத்தில் |
| கிம் | = எக்காரணத்தால் |
| மாம் | = என்னை |
| நியோஜயஸி | = செய் என்று உத்திரவிடுகிறாய். (காம்யகர்மமான யுத்தத்தைச் செய் என்றுசொல்வது எப்படி யுக்தமாகும்?) |

(மூ)—வ்யாமிஶ்ரேணேவ வாக்யேன புத்திம் மோஹயஸீவ மே||
ததே(ஏ)கம் வத(ஃ) நிஶ்சித்ய யேன ஶ்ரேயோஹ மாப்னுயாம் ||2||

(ப. உ.) வ்யாமிஶ்ரேண, ஏவ, வாக்யேன, புத்திம், மோஹயஸி, இவ, மே | தத், ஏகம், வத(ஃ), நிஶ்சித்ய, யேன, ஶ்ரேய:, அஹம், ஆப்னுயாம்.

| | |
|---|---|
| வ்யாமிஶ்ரேண | = சில இடங்களில் ஞானத்தைப் புகழ்வது, சில இடங்களில் கர்மத்தைப் புகழ்வது, அல்லது கர்மம் அபரோக்ஷ ஞானத்திற்கு ஸாதனமென்றுசில இடங்களில் சொல்வது, மற்றும் கர்மம் |

| | | | |
|---|---|---|---|
| | ஸ்வர்க்கத்திற்குச்சாதனமென்று சில இடங்களில் சொல்வது இவ்விதமாக கலப்பான | தத் | = கர்மம், ஞானம் இவைகளில் ஏது மேலானது, அல்லது கர்மம் ஸ்வர்க ஸுகங்களைக் கொடுப்பதோ, அபரோக்ஷ ஞானத்தைக் கொடுப்பதோ, இவைகளில் ஏது நிஜமானதோ |
| வாக்யேன ஏவ | = வாக்யத்திறைலேயே | | |
| மே | = என்னுடைய | | |
| புத்திம் | = புத்தியை | | |
| மோஹயஸி, இவ | = மோகப்படுத்துவதைப்போல் செய்கிறுயே. | | |
| யேன | = எதனுல் | ஏகம் | = அத்தகைய ஒன்றை |
| அஹம் | = நான் | நிஶ்சித்ய | = நிஶ்சயம் செய்துகொண்டு |
| ஶ்ரேய: | = கீர்த்தியை (நன்மையை) | | |
| ஆப்னுயாம் | = அடைவேனே | வத(உ) | = சொல். |

ஸ்ரீ பகவானுவாச :—

(மூ)—லோகேஸ்மின் த்(த்வி)விதா(யா) நிஷ்டா புரா ப்ரோக்தா மயா
னக(வ)-||
ஞானயோகே(மே)ன ஸாங்க்(கி)யானும் கர்மயோகே(மே)ன
யோகி(மி)னும் ||3||

(ப. உ.) லோகே, அஸ்மின், த்வி(த்வி)விதா(யா), நிஷ்டா, புரா, ப்ரோக்தா, மயா, அனக(வ) | ஞானயோகே(மே)ன, ஸாங்க்(கி)யானும், கர்மயோகே(மே)ன, யோகி(மி)னும்.

| | | | |
|---|---|---|---|
| ஸ்ரீ பகவான் | = ஸ்ரீ கிருஷ்ணன் | ஸாங்க்(கி)யானும் | = ஞானமே மோக்ஷத்திற்கு முக்யமான ஸாதனமாயுள்ள ஸனகாதிகளுக்கு |
| உவாச | = சொல்லுகிறுன். | | |
| அனக(வ) | = பாபமற்ற அர்ஜுனு! | | |
| அஸ்மின், லோகே | = இவ்வதிகாரிவர்கத்தில் (கூட்டத்தில்) | ஞானயோகே(மே)ன | = அற்பமான கர்மத்துடன் (கூடிய) அதிகமான ஞானரூபமான உபாயத் |
| நிஷ்டா | = ஸ்வரூபத்தாலிருப்பது என்னும் மோக்ஷம் | | |

தால் (ஆகிறது என்றும்)

யோகி(கி)னும் = மோக்ஷத்திற்கு கர்மமே முக்ய ஸாதனமாயுள்ள ஜனக, ப்ரியவ்ரதாதி ராஜர்களுக்கு

கர்ம யோகே(கே)ன = அப்ரசுர (அற்ப) மான ஞானத்துடன் கூடிய ப்ரசுர (அதிக) மானகர்மரூப உபாயத்தினால் (ஆகிறது என்றும்)

த்(வி)விதா (யா) = இருவகையுள்ளது (மோக்ஷம் அற்ப கர்மத்தால் கூடிய அதிக ஞான ஸாத்யமானது என்றும், அற்ப ஞானத்தோடு கூடிய அதிக கர்மஸாத்யமானது என்றும் இருவகைகளாயிருக்கின்றன)

(இதி) = என்று

மயா = என்னால் (ஸ்ரீக்ருஷ்ணனால்)

புரா = முன் (பூர்வ) அத்யாயத்தில்

ப்ரோக்தா = சொல்லப்பட்டிருக்கிறது.

(க. உ.):—மோக்ஷத்தை அடையும் அதிகாரிகள் அற்ப கர்மத்தோடு கூடிய அதிக ஞானத்தால் மோக்ஷத்தை அடைபவர்கள் என்றும், அற்ப ஞானத்தோடு கூடிய அதிக கர்மத்தால் மோக்ஷத்தை அடைபவர்கள் என்றும் இரண்டு வகுப்பாயிருக்கிறார்கள். ஆகையால் கர்மம் உத்தமமானது என்றும், ஞானம் உத்தமமானது என்றும் அந்தந்த அதிகாரிகளைக் குறித்து நான் சொல்லியிருக்கிறேன். நீ ஸனகாதிகளைப் போல் ஞானயோகி(கி) அல்ல. ஜனகமகாராஜர், ப்ரியவ்ரதர் முதலியவர்களைப்போல் கர்ம யோகி. ஆகையால் பகவத் பூஜார்த்தமாய் யுத்தமென்னும் கர்மத்தைச் செய்துகொண்டே, ஞானத்தால் மோக்ஷத்தை அடைய வேண்டுமே யல்லாது, ஜபத்யானாதிகளால் கிடைக்கும் மோக்ஷத்தை அடைவதற்கு யோக்யனாக மாட்டாய். ஆகையால் நீ யுத்தத்தை செய்யவேண்டியது.

(மூ)—ந கர்மணுமனாரம்பா(ஹா)ன்னைஷ்கர்ம்யம் புருஷோஃச்னுதே ||
ந ச ஸம்ன்யஸனாதே(தே)வ ஸித்திம் ஸமதி(யி)கச்ச(ஹ)தி ||4||

(ப. உ.) ந, கர்மணும், அனாரம்பா(ஹா)த், நைஷ்கர்ம்யம், புருஷ:, அஃச்னுதே | ந, ச, ஸம்ன்யஸனாத், ஏவ, ஸித்தி(த்தி)ம், ஸமதி(யி)க(ஹ)ச்ச(ஹ)தி ||

| | | | |
|---|---|---|---|
| புருஷ: | = மனிதன் | ஸம்ன்ய ஸனாத், ஏவ | = காம்ய கர்மத்தைச்செய்யாமலிருப்பதினால் மாத்ரமே |
| கர்மணாம் | = கர்மங்களின் | | |
| அனாரம் பா(ஆ)த் | = ஆரம்பிக்காமலிருப்பதினால் | | |
| நைஷ்கர்ம்யம் | = மோக்ஷத்தை | ஸித்திம் | = மோக்ஷத்தை |
| ந, அஶ்னுதே | = அடைவதில்லை. | ந ஸமதி(தி) கச்ச(ஸ)தி | = அடைவதில்லை. |
| ச | = மற்றும் | | |

அவதரணிகை:—"கர்மணா பத்(வய)யதே ஜந்துர்வித்யயா ச விமுச்யதே" என்னும் இது முதலிய ப்ரமாணங்கள்— கர்மங்கள் ப(ப)ந்தகங்களென்று சொல்லுவதால் நான் (அர்ஜுனன்) யுத்தம் செய்யமாட்டேன் என்னும் அர்ஜுனனின் ஆக்ஷேபத்திற்கு:— கர்மங்களைச் செய்யாமலிருப்பதனாலாகட்டும், காம்ய கர்மங்களைச் செய்யாமலிருப்பதனாலாகட்டும் மோக்ஷம் கிடைப்பதில்லை. ஜீவர்கள் தம்மிட ஸ்வாபாவிகமான ஸாத்விக ராஜஸதாமஸ குணங்களையனுசரித்து ஈஶ்வராதீனர்களாய் எப்பொழுதும் கர்மங்களைச் செய்துகொண்டே இருக்கிறார்கள். கர்மங்களைச்செய்யாமல் ஒரு நொடியாயினும் இருப்பது அஶக்யம். கர்மேந்த்ரியங்களை அடக்கிக்கொண்டு கர்மங்களைச் செய்யாமல், மனதில் பலவிதமான துர்விஷயங்களை நினைப்பவன் ப்ராந்தன், மற்றும் டாம்பிகன் என்று சொல்லிக்கொள்ளப்படுகிறான். எவன் கண் முதலிய இந்த்ரியங்களை மனதால் அடக்கிக்கொண்டு, அவைகள் விஷயங்களைக் குறித்து போகாமற்செய்துகொண்டு, ப(ஃ)லாபேக்ஷை யற்றவனாய் தம் தம் வர்ணாஶ்ரமங்களுக்கு யோக்யமான (விஹிதமான) கர்மங்களைச்செய்கிறானோ அவன் மேலானவன். கர்மங்களைச் செய்யாவிடின் தேஹரக்ஷணமே கஷ்டமாகிறது. "கர்மணா ப(ப)த்(ய)யதே ஜந்து:" என்னும் ப்ரமாணம் ப(ஃ)லாசையினால் விஷ்ணு பூஜோத்தே(த்தே)ஶ்யகமல்லாத அன்னிய தேவதோத்தே(த்தே)ஶ்யகமாய் செய்த கர்மங்களே ப்ரதிபந்தகங்களென்று சொல்வதினால் நிஷ்காமுகனாய் விஷ்ணுப்ரீத்யுத்தேஶமாய் க்ஷத்ரியனான உனக்கு விஹிதமான யுத்தமே முதலிய கர்மங்களைச் செய்வாயாக என்று 5, 6, 7, 8, 9-வது ஶ்லோகங்களினால் பதில் சொல்லுகிறான்:—

(மூ)—ந ஹி கஶ்சித் க்ஷணமபி ஜாது திஷ்டத்யகர்மக்ருத் ||
கார்யதே ஹ்யவஶ: கர்ம ஸர்வ: ப்ரக்ருதிஜைர்குணை: || 5 ||

(ப. உ.) ந, ஹி, க:, சித், க்ஷணம், அபி, ஜாது, திஷ்டதி, அகர்மக்ருத் | கார்யதே, ஹி, அவஶ:, கர்ம, ஸர்வ:, ம்ருதிஜை:, கு(ண)ணை: ||

| | |
|---|---|
| க:, சித், அபி | = எவனாயினும் |
| அகர்மக்ருத் (ஸன்) | = கர்மங்களைச் செய்யாதவனாய் |
| ஜாது | = எப்பொழுதும் |
| க்ஷணம் | = அற்பகாலமாகிலும் |
| ந, திஷ்டதி | = இருப்பதில்லை. |
| ஹி | = ப்ரஸித்தம் |
| அவஶ: (அவஶேன) | = விஷ்ணுவின் வஶனான |
| ஸர்வ:(ஸர்வேண) | = ஸகல ஜனங்களால் |
| ப்ரக்ருதிஜை: | = ப்ரக்ருதி கார்யங்களான |
| குணை: | = ஸத்வ ரஜஸ் தமோ குணங்களால் |
| கர்ம | = கர்மம் |
| கார்யதே | = செய்விக்கப் படுகிறது. |

(மூ)—கர்மேந்த்ரியாணி ஸம்யம்ய ய ஆஸ்தே மனஸா ஸ்மரன் ||
இந்த்ரியார்த்தான் விமூடாத்மா மித்(த்ய)யாசாரஸ்ஸ உச்யதே ||6||
யஸ்த்விந்த்ரியாணி மனஸா நியம்யாரப(ஹ)தேர்ஜுன ||
கர்மேந்த்ரியை: கர்மயோக மஸக்தஸ்ஸ விஶிஷ்யதே || 7 ||

(ப. உ.) கர்மேந்த்ரியாணி, ஸம்யம்ய, ய:, ஆஸ்தே, மனஸா, ஸ்மரன்| இந்த்ரியார்த்தான், விமூடாத்மா, மித்யாசார:, ஸ:, உச்யதே|| ய:, து, இந்த்ரியாணி, மனஸா, நியம்ய, ஆரப(ஹ)தே, அர்ஜுன | கர்மேந்த்ரியை:, கர்மயோக(ம)ம், அஸக்த:, ஸ:, விஶிஷ்யதே ||

| | |
|---|---|
| ய: | = யார் |
| கர்மேந்த்ரியாணி | = கர்மங்களைச் செய்யும் வாய், கை, கால் முதலிய இந்த்ரியங்களை |
| ஸம்யம்ய | = அடக்கிக் கொண்டு (கர்மங்களைச் செய்யாமல்) |
| இந்த்ரியார்த்தான் | = கண் முதலிய இந்த்ரியங்களுக்கு விஷயங்களான ஸ்த்ரீ, ரூப, அன்ன, ரஸாதிகளை |
| மனஸா | = மனதினால் |
| ஸ்மரன் (ஸன்) | = நினைப்பவனாய் |
| ஆஸ்தே | = இருக்கிறானோ |
| ஸ: | = அவன் |
| விமூடாத்மா | = ப்ராந்தன், |
| மித்யாசார: | = டாம்பிகன் (வஞ்சகன்) |

இதி = என்று
உச்யதே = சொல்லிக் கொள்ளப்படுகிறான்
அர்ஜுன = ஓ அர்ஜுன!
ய:, து = எவனாகிலும்
இந்த்ரியாணி = சக்ஷுராதி ஞானேந்த்ரியங்களை
மனஸா = மனதினால்
நியம்ய = ஸ்வாதீனப்படுத்திக் கொண்டு (சக்ஷுராதி இந்த்ரியங்களை துர் விஷயங்களைக் குறித்துப் போகாமற் செய்து கொண்டு)
அஸக்த: = பலாபேக்ஷை யற்றவனாய்
கர்மேந்த்ரியை: = கர்மங்களுக்குச் சாதகமான வாக் பாணி பாதாதி இந்த்ரியங்களால்
கர்மயோகம் = தம் தம் வர்ணாஶ்ரமங்களுக்கு தகுந்த யுத்தாதி கர்மரூப ஞானோபாயத்தை
ஆரப(௪)தே = செய்பவனாகிறானோ
ஸ: = அவன்
விஶிஷ்யதே = கர்மத்தைச் செய்யாதவனை விட உத்தமனாகிறான்.

(மூ)—நியதம் குரு கர்ம த்வம் கர்ம ஜ்யாயோ ஹ்யகர்மண: ||
ஶரீரயாத்ராபி ச தே ந ப்ரஸித்(௪)யேத(௩)கர்மண: || 8 ||

(ப. உ.) நியதம், குரு, கர்ம, த்வம், கர்ம, ஜ்யாய:, ஹி, அகர்மண: |
ஶரீரயாத்ரா, அபி, ச, தே, ந, ப்ரஸித்(௪)யேத், அகர்மண: ||

ஹி = எக்காரணத்தால்
அகர்மண: = கர்மத்தைச் செய்யாமலிருப்பதைவிட
கர்ம = கர்மத்தைச் செய்வது
ஜ்யாய: = ஶ்ரேஷ்டமானதோ
(அத:) = அக்காரணத்தால்
த்வம் = நீ
நியதம் = உனக்கு விஹிதமான
கர்ம = யுத்தமென்னும் கர்மத்தை
குரு = செய்.
ச = மற்றும்
அகர்மண: = கர்மத்தைச் செய்யாமலிருக்கும்
தே = உனக்கு
ஶரீரயாத்ரா, அபி = தேஹ ரக்ஷணை கூட
ந, ப்ரஸித்(௪)யேத் = ஸித்திக்காது.

(மூ)—யஜ்ஞார்த்தாத் கர்மணோன்யத்ர லோகோயம் கர்மப(௩)ந்த(௪)ன: ||
தத(௩)ர்த்தம் கர்ம கௌந்தேய முக்தஸங்க(௩)ஸ்ஸமாசர || 9 ||

(ப. உ.) யஜ்ஞார்த்தாத், கர்மண:, அன்யத்ர, லோக:, அயம், கர்மப(வ)ந்த(ய)ன:| தத(ஆ)ர்த்தம், கர்ம, கௌந்தேய, முக்தஸங்க(ம):, ஸமாசர ||

னாகிறேனோ

கௌந்தேய = அர்ஜுனா !
(யத:) = எக்காரணத்தால்
யஜ்ஞார்த்தாத் = யஜ்ஞநாமக பரமாத்மாவின்உத்தேசமாயுள்ள
கர்மண: = கர்மத்தைவிட
அன்யத்ர = இதரமான கர்மங்களில் (காம்ய கர்மங்களில்)
(ப்ரவ்ருத்த:) = முயற்சியுடைய
அயம் லோக: = இந்த மனிதன்
கர்மப(வ)ந்த(ய)ன: = கர்மத்தை ப(வ)ந்த(ய)கமாயுடையவ

அத: = அக்காரணத்தால்
முக்தஸங்க:(ம:) (ஸன்) = ப(ல)த்திலாசையற்றவனாய்
ததர்த்தம் = அந்த பரமாத்மாவின் உத்தேச்யமாக
கர்ம = உனக்கு (க்ஷத்ரியனுக்கு) விஹிதமான யுத்தாக்ய கர்மத்தை
ஸமாசர = செய்.

(மூ)—ஸஹயஜ்ஞா: ப்ரஜா: ஸ்ருஷ்ட்வா புரோவாச ப்ரஜாபதி: ||
அனேன ப்ரஸவிஷ்யத்(யீ)வமேஷ வோஸ்த்விஷ்டகாம
து(யு)க் || 10 ||

(ப. உ.) ஸஹயஜ்ஞா:, ப்ரஜா:, ஸ்ருஷ்ட்வா, புரா, உவாச, ப்ரஜாபதி;| அநேந, ப்ரஸவிஷ்யத்(யீ)வம், ஏஷ:, வ:, அஸ்து, இஷ்டகாமது(யு)க் ||

ப்ரஜாபதி: = ப்ரஜாபதியானவர்
புரா = பூர்வகாலத்தில்
ஸஹயஜ்ஞா: = யஜ்ஞத்தோடு கூடிய
ப்ரஜா: = ப்ரஜைகளை
ஸ்ருஷ்ட்வா = ஸ்ருஷ்டித்து
உவாச = சொன்னார் (எந்தவார்த்தையைச் சொன்னாரென்றால்அதை சொல்லுகிறார்.)
யூயம் = நீங்கள்
அனேன = இந்த யாகத்

தால்
(இஷ்டகாமான்) = இஷ்டமான விஷயங்களை
ப்ரஸவிஷ்யத்வம் = அடையுங்கள் (ஸம்பாதித்துக் கொள்ளுங்கள்)
ஏஷ: = இந்த யஜ்ஞம்
வ: = உங்களுக்கு
இஷ்டகாமது(யு)க் = விரும்பும் விஷயங்களின் போகங்களைகொடுப்பவைகளாய்
அஸ்து = ஆகட்டும்.

(மூ)—தே(ஷே)வான் பா(ஹா)வயதானேன தே தே(ஷே)வா பா(ஹா) வ
யந்து வ: ||
பரஸ்பரம் பா(ஹா)வயந்த: ஶ்ரேய: பரமவாப்ஸ்யத(ய) || 11 ||

(ப. உ.) தே(ஷ)வான், பா(ஹா)வயத, அனேன, தே, தே(ஷே)வா:, பா(ஹா)வயந்து, வ: | பரஸ்பரம், பா(ஹா)வயந்த:, ஶ்ரேய:, பரம், அவாப்ஸ்யத(ய) ||

அனேன = இந்த யஜ்ஞத்தால்
தே(ஷே)வான் = தேவதைகளை
பா(ஹா)வயத = பூஜியுங்கள் (த்ருப்தி படுத்துங்கள்)
தே, தேவா: = அந்த தேவதைகள்
வ: = உங்களை
பா(ஹா)வயந்து = இஷ்டமான பலங்களைக் கொடுத்து ஸந்தோஷப்படுத்துவாராக.
ஏவம் = இவ்விதமாக
பரஸ்பரம் = ஒருவருக்கொருவர்
பா(ஹா)வயந்த: ஸந்த: = த்ருப்தி படுத்திக்கொண்டவராய்
பரம் = உத்தமமான
ஶ்ரேய: = ஶ்ரேயஸ்ஸை
அவாப்ஸ்யத(ய) = அடையுங்கள்.

(மூ)—இஷ்டான் போ(ஹோ)கான் ஹி வோ தேவா தா(ஷா)ஸ்யந்தே
யஜ்ஞபா(ஹா)விதா: ||
தைர்த(ஷ)த்தானப்ரதா(ஷா)யைப்(ஷ)யோ யோ பு(ஹ)ங்க்தே
ஸ்தேன ஏவ ஸ: ||12||

(ப. உ.). இஷ்டான், போ(ஹோ)கான், ஹி, வ:, தேவா:, தா(ஷா)ஸ்யந்தே, யஜ்ஞபா(ஹா)விதா: | தை:, த(ஷ)த்தான், அப்ரதாய, ஏப்(ஷ)ய:, ய:, பு(ஹ)ங்க்தே;, ஸ்தேன:, ஏவ, ஸ: ||

யஜ்ஞபா(ஹா)விதா: = யாகத்தால் பூஜிக்கப் பட்ட
தே(ஷே)வா: = தேவர்கள்
வ: = உங்களுக்கு
இஷ்டான் = ப்ரியமான
போ(ஹோ)கா(ஶா)ன் = போக்யமான விஷயங்களை
தா(ஷா)ஸ்யந்தே = கொடுப்பார்கள்.
ஹி = ப்ரஸித்தம்.
ய: = எவன்
தை: = அந்த தேவர்களால்
த(ஷ)த்தான் = கொடுக்கப் பட்ட அன்னாதிகளை
ஏப்(ஷ)ய: = அந்த தேவர்களுக்கு
அப்ரதாய = கொடுக்காமல்

| | | | |
|---|---|---|---|
| புங்க்தே | = அனுபவிக்கிருேனு | ஸ்தேன: ஏவ | = திருடனேயாவான். |
| ஸ: | = அவன் | | |

(மூ)—யஜ்ஞ ஶிஷ்டாஶினஸ் ஸந்தோ முச்யந்தே ஸர்வ கில்பி
(ஷி)ஷை : ||
பு(ஞ்ஜ)ஞ்ஜதே தே த்வக(வ)ம் பாபா யே பசந்த்யாத்ம கார
ணுத் ||13||

(ப. உ.) யஜ்ஞ-ஶிஷ்டா-ஶின:, ஸந்த:, முச்யந்தே, ஸர்வகில்பிஷை: |
பு(ஞ்ஜ)ஞ்ஜதே, தே, து, அக(வ)ம், பாபா:, யே, பசந்தி, ஆத்மகாரணுத் ||

| | | | |
|---|---|---|---|
| (ஜனு:) | = ஜனங்கள் | ஆத்ம காரணுத் | = தேவதோத்தேஶமின்றி தங்களுக்காகவே |
| யஜ்ஞ- | = தேவர்களால் கொடுக்கப்பட்ட அன்னுதிகளால் யாகத்தைச் செய்து | பசந்தி | = சமைத்துக் கொள்ளுகிருர்களோ |
| ஶிஷ்ட- | = மிகுதியை | தே | = அவர்கள் |
| அஶின: | = உண்பவராய் | பாபா: | = பாவிகளாவர். |
| ஸர்வ கில்பிஷை: | = ஸகல பாவங்களினின்றும் | அகம் து | = பாவத்தையே (பாபகாரணமான உணவையே) |
| முச்யந்தே | = முக்தராகிருர்கள். | | |
| யே | = யார் | புஞ்ஜதே | = புசிக்கிருர்கள். |

(க. உ.) :—இவ்விதமாக ப்ரஜாபதியானவர் யஜ்ஞங்களை ஸ்ருஷ்டித்து 'நீங்கள் யஜ்ஞத்தால் தேவர்களை ஸந்தோஷப்படுத்துங்கள். அந்த தேவர்கள் நீங்கள் செய்த யஜ்ஞத்தால் த்ருப்தராய், உங்களுக்கு வேண்டிய இஷ்டங்களைக் கொடுப்பார்கள். நீங்கள் தேவர்களால் கொடுக்கப்பட்ட அன்னுதிகளை அவர்களுக்கு யஜ்ஞத்தின் மூலமாகக் கொடுக்காமற் போனுல் உங்களுக்கு பாபம் ஸம்பவிக்கிறது. தேவர்களுக்குக் கொடுத்து மீதியுள்ளதை புசித்தால் நீங்கள் ஸமஸ்த பாபங்களினின்றும் விலக்கப்படுவீர்கள் (பாபமற்றவராவீர்கள்)' என்று சொல்லியிருப்பதால் யஜ்ஞாதிகர்மங்கள் அவஶ்யமாய்ச்செய்யத்தக்கவைகள்,

(மூ)—அன்னாத் ப(ஹ)வந்தி பூ(ஹூ)தானி பர்ஜன்யாத(த்)ன்ன ஸம்ப(ஹ)வ: ||
யஜ்ஞாத் ப(ஹ)வதி பர்ஜன்யோ யஜ்ஞ: கர்மஸமுத்ப(ஹ)வ: ||14||

கர்ம ப்ரஹ்மோத்பவம் வித்தி(யி) ப்ரஹ்மாக்ஷர ஸமுத்பவம் ||
தஸ்மாத் ஸர்வக(ம)தம் ப்ரஹ்ம நித்யம் யஜ்ஞே ப்ரதிஷ்டிதம் ||15||

ஏவம் ப்ரவர்திதம் சக்ரம் நானுவர்தயதீஹ ய: ||
அகா(வா)யு ரிந்த்ரியாராமோ மோக(வ)ம் பார்த்த ஸ ஜீவதி||16||

(ப. உ.) *அன்னாத், ப(ஹ)வந்தி, பூ(ஹூ)தானி, பர்ஜன்யாத், அன்ன ஸம்ப(ஹ)வ: | யஜ்ஞாத், ப(ஹ)வதி, பர்ஜன்ய:, யஜ்ஞ:, கர்மஸமுத்ப(ஹ)வ:|| கர்ம, ப்ரஹ்மோத்ப(ஹ)வம், வித்தி(யி), ப்ரஹ்ம, அக்ஷரஸமுத்ப(ஹ)வம் | தஸ்மாத், ஸர்வக(ம)தம், ப்ரஹ்ம, நித்யம், யஜ்ஞே, ப்ரதிஷ்டிதம் || ஏவம், ப்ரவர்திதம், சக்ரம், ந, அனுவர்தயதி, இஹ, ய: | அகா(வா)யு:, இந்த்ரியாராம:, மோகம்(வம்) பார்த்த, ஸ:, ஜீவதி ||*

| | |
|---|---|
| அன்னாத் | = அன்னத்தால் |
| பூ(ஹூ)தானி | = ப்ராணிகள் |
| ப(ஹ)வந்தி | = பிறக்கின்றன. |
| பர்ஜன்யாத் | = பர்ஜன்யனால் (ஸூர்யனால்) |
| அன்ன- | = உணவுகள் |
| ஸம்ப(ஹ)வ: | = உண்டாகின்றன. |
| யஜ்ஞாத் | = யாகத்தினால் |
| பர்ஜன்ய: | = மழை |
| ப(ஹ)வதி | = உண்டாகிறது. |
| யஜ்ஞ: | = யாகம் |
| கர்ம ஸமுத்ப(ஹ)வ: | = கர்மத்தால் பிறக்கக்கூடியது. |
| கர்ம | = கர்மம் |
| ப்ரஹ்மோத்பவம் | = பரப்ரஹ்மத்தால் உண்டாவது. |
| ப்ரஹ்ம | = பரப்ரஹ்மம் |
| அக்ஷர- | = வேதாக்ஷரங்களால் |
| ஸமுத்ப(ஹ)வம் | = வெளியாகிறது. (வேதம் பூதங்களால் = பிராணிகளால் வெளியாவது) |
| (இதி) | = என்று |
| வித்தி(யி) | = தெரிந்துகொள். |
| ஸர்வக(ம)தம் | = எங்கும் நிறைந்த |
| ப்ரஹ்ம | = பரப்ரஹ்மம் |
| தஸ்மாத் | = யஜ்ஞத்தால் பரம்பரையாய் வெளியாகிறபடியால் |
| யஜ்ஞே | = யாகத்தில் |
| நித்யம் | = எப்பொழுதும் |
| ப்ரதிஷ்டிதம் | = ஸ்திரமாக |

| | | | |
|---|---|---|---|
| | இருக்கிறது. | | ரத்தை நிறுத்தி விடுகிறானோ) |
| ய: | = எவன் | | |
| ஏவம் | = இவ்வாறு | பார்த்த | = அர்ஜுனா! |
| ப்ரவர்த்திதம் | = நடந்துக்கொண்டிருக்கும் | ஸ: | = அவன் |
| சக்ரம் | = ஜகச்சக்ரத்தை | அகா(வா)யு: | = பாபத்திற்கு சாதகமான ஆயுளுடையவன். |
| இஹ | = இந்த லோகத்தில் | மோகம் | = வீணாக |
| ந, அனுவர்தயதி | = அனுஸரிப்பதில்லையோ (சக் | ஜீவதி | = பிழைக்கிறான். |




(க. உ.) :—இவ்வாறு நடக்கப்பட்ட சக்ரத்தில் சேர்ந்த யஞ்ஞத்தைச் செய்யாவிடில் பர்ஜன்யம் (மழை) முதலியவைகள் உண்டாகாமல் இந்த ஜகச்சக்ரம் நின்று பாபம் நேரிடுகிறது. மற்றும் இச்சக்ரத்தை நடத்தாதவனிட பிழைப்பு வ்யர்த்தமாகிறது. ஆகையால் க்ருஹஸ்தாஶ்ரமிகள் யஞ்ஞ, தான, தபோரூப கர்மங்க

ளைச் செய்யவேண்டியது. ஸன்யாஸி முதலானவர்கள் வித்யா தானம், அபயதானம், தன்னால் போஜ்யமான அன்னதானம், அத்யயனம், ப்ரவசனம், த்யானம் முதலிய வாசனிக (வாக்கினால் செய்யப்படும்) மானஸிக (மனதினால் செய்யப்படும்) யஜ்ஞங்களையும், க்ருச்ர சாந்த்ராயணாதி தபோரூபங்களான காயிக (தேகத்தினால் செய்யப்படும்) யாகங்களையும் செய்து இந்த ஜகச்சக்ரத்தை நடத்திக்கொண்டிருக்கத்தக்கது.

அவதாரிகை:—"இப்படி எல்லோராலும் கர்மம் செய்யப் படவேண்டியதேயாயின் கர்மத்தைச் செய்வதிலேயே மனது நிலைநின்று அவஶ்யமாய் செய்யவேண்டிய, விடாமல் பரமாத்மா விடத்திலேயே மனதை நிறுத்துவதென்னும் அஸம்ப்ரஜ்ஞாத ஸமாதியே பொருந்தாமற் போகும்" என்னும் ஶங்கைக்கு பதில் சொல்லுகிறான்:—

(மூ)—யஸ்த்வாத்மரதிரேவ ஸ்யாதா(ஊ)த்ம-த்ருப்தஶ்ச மானவ: ||
ஆத்மன்யேவ ச ஸந்துஷ்டஸ்தஸ்ய கார்யம் ந வித்யதே ||17||

(ப. உ.) ய:, து, ஆத்மரதி:, ஏவ, ஸ்யாத், ஆத்மத்ருப்த:, ச, மானவ: | ஆத்மனி, ஏவ, ச, ஸந்துஷ்ட:, தஸ்ய, கார்யம், ந, வித்யதே ||

| | |
|---|---|
| து | = ஸமாதியிலிருக்கும் |
| ய: | = எந்த |
| மானவ: | = அபரோக்ஷ ஞானியான மனிதன் |
| ஆத்மரதி: ஏவ | = பரமாத்மாவினாலேயே ஸுகத்தையடைந்தவனாய் (பரமாத்மாவின் தர்ஶனத்தாலேயே ஸுகமடைபவன்) |
| ஸ்யாத் | = ஆகிறானோ, |
| ச | = மற்றும் |
| ஆத்மத்ருப்த: | = பரமாத்மாவின் ப்ரஸாதத்தாலேயே இதர விஷயங்களில் போதுமென்னும் புத்தியையுடையவனாகிறானோ, |
| ச | = மற்றும் |
| ஆத்மனி ஏவ | = பரமாத்மாவிடத்திலேயே அதிகமான |
| ஸந்துஷ்ட: | = ஸந்தோஷமுள்ளவனாகிறானோ |
| தஸ்ய | = அந்த ஸமர்த்தனுக்கு |
| கார்யம் | = செய்யவேண்டிய கர்மம் |
| ந வித்யதே | = இருப்பதில்லை. |

(மூ)—நைவ தஸ்ய க்ருதேனார்த்தோ நாக்ருதேநேஹ கஶ்சன ||
ந சாஸ்ய ஸர்வபூ(ஹ-ஏ)தேஷு கஶ்சிதர்த்த-வ்யபாஶ்ரய: ||18||

(ப. உ.) ந, ஏவ, தஸ்ய, க்ருதேன, அர்த்த:, ந, அக்ருதேன, இஹ, க:, சன | ந, ச, அஸ்ய, ஸர்வபூ(ஹ-ஏ)தேஷு, க:, சித், அர்த்தவ்யபாஶ்ரய: ||

| | | | |
|---|---|---|---|
| தஸ்ய | = அஸம்ப்ரஜ்ஞாத ஸமாதிஸ்தனான மனிதனுக்கு | | செய்யாமலிருப்பதால் |
| | | கஶ்சன (தோஷ:) | = எந்த தோஷமும் |
| க்ருதேன | = செய்யப்பட்ட யஜ்ஞங்களால் | ந | = இல்லை. |
| | | ச | = மற்றும் |
| அர்த்த: | = ஸமாதியால் பிறந்த ஆத்மஞானத்தால் உண்டாகும் ஸுகத்தைவிட அதிகமான ஸுகம் | அஸ்ய | = அஸம்ப்ரஜ்ஞாத ஸமாதிஸ்தனான மனிதனுக்கு |
| | | ஸர்வ பூ(ஹ-ஏ) தேஷு | = கு(ரு)ருக்கள் முதலானவர்களில் |
| ந, ஏவ | = இல்லவேயில்லை. | க:, சித் | = எந்த |
| இஹ | = ஸமாத்யவஸ்தையில் | அர்த்த- | = ப்ரயோஜனத்தின் |
| அக்ருதேன | = முக்யமான ஸந்த்யாவந்தனாதி கர்மங்களை | வ்ய பாஶ்ரய: | = ஸம்பந்தமும் |
| | | ந | = இல்லை. |

(க. உ.):—அஸம்ப்ரஜ்ஞாத ஸமாதிஸ்தனான மனிதன் பரமாத்மாவின் தர்ஶனாதிகளால் க்ருதக்ருத்யன் (செய்ய வேண்டியதைச்செய்தவன்) ஆகிற படியால், அந்த பரமாத்மாவின் தர்ஶனத்தால் உண்டாகும் ஸுகரூபமான ப்ரயோஜனத்தைவிட கர்மங்களினாலாகட்டும், கு(ரு)ருக்கள் முதலானவர்களாலாகட்டும் அவனுக்கு அதிக ப்ரயோஜன முண்டாவதில்லை. மற்றும் நித்யங்களான ஸந்த்யாவந்தனாதிகளைச் செய்யாமற்போயினும் ப்ரத்யவாயமும் (பாவமும்) இல்லை. நித்ய நைமித்திக கர்மங்களைச் செய்யாமல் அஸம்ப்ரஜ்ஞாத ஸமாதியை செய்வதற்கு எவ்வித பாதகமும் இல்லை. அஸம்ப்ரஜ்ஞாத ஸமாதியற்ற மனிதனால் யஜ்ஞாதிகள் ஆவஶ்யகமாய் செய்யப்படவேண்டியவைகளே.

(மூ)—தஸ்மாத(ஃ)ஸக்தஸ்ஸததம் கார்யம் கர்ம ஸமாசர ||
அஸக்தோ ஹ்யாசரன் கர்ம பரமாப்னோதி பூருஷ: || 19 ||

(ப. உ.) தஸ்மாத், அஸக்த:, ஸததம், கார்யம், கர்ம, ஸமாசர | அஸக்த:, ஹி, ஆசரன், கர்ம, பரம், ஆப்னோதி, பூருஷ: ||

தஸ்மாத் = அஸம் ப்ரஜ்ஞாத ஸமாதிரஹிதனான மனிதனால் கர்மங்கள் அவஶ்யமாய்ச்செய்யப்படவேண்டியிருப்பதால்
(த்வம்) = நீ
கார்யம் = க்ஷத்ரியர்களால் செய்யப்படவேண்டிய
கர்ம = யுத்தகர்மத்தை
அஸக்த: (ஸன்) = பலத்தில் ஆசையற்றவனாய்

ஸததம் = எப்பொழுதும்
ஸமாசர = செய்.
ஹி = ஏனெனின்
பூருஷ: = புருஷன்
அஸக்த: (ஸன்) = பலேச்சையற்றவனாய்
கர்ம = தனக்கு விகிதமானகர்மத்தை
ஆசரன் (ஸன்) = செய்பவனாய்
பரம் = பரமாத்மாவை
ஆப்னோதி = அடைகிறான்.

(க. உ.):—இவ்வாறு ஜீவபரமாத்மாக்களுக்கு ப்ராப்த்ரு ப்ராப்யபாவத்தைச் சொல்லியிருப்பதால் ஜீவ பரமாத்மாக்களின் பேதமே ஸித்தமாகிறது.

(மூ)—கர்மணைவ ஹி ஸம்ஸித்தி(யு)மாஸ்தி(யி)தா ஜனகாதய:||
லோக ஸங்க்ரஹ மேவாபி ஸம்பஶ்யன் கர்துமர்ஹஸி || 20 ||

(ப. உ.) கர்மணா, ஏவ, ஹி, ஸம்ஸித்திம், ஆஸ்தி(யி)தா:, ஜனகாத(ஃ)ய: | லோகஸங்க்ரஹம், ஏவ, அபி, ஸம்பஶ்யன், கர்தும், அர்ஹஸி ||

ஜனகாதய: = ஜனக ப்ரியவ்ரதாதி மகாராஜர்கள்
கர்மணா ஏவ = கர்மத்தாலேயே
ஸம்ஸித்திம் = மோக்ஷத்திற்குக் காரணமான அபரோக்ஷ ஞானத்தை
ஆஸ்தி(யி)தா: = அடைந்திருக்கிறார்கள்.

ஹி = இதுப்ரஸித்தம்
த்வம் = நீ
ஏவ = கர்மத்திற்கு ஞானாதி பலங்கள் இருப்பதே யல்லாமல்
லோகஸங்க்ரஹம், அபி = நான் கர்மத்தைச்செய்யாவிடின் ஜனங்கள் கர்மங்களைச் செய்ய மாட்டார்கள்.

| | | | |
|---|---|---|---|
| | ஆகையால் ஜன ங்களால் கர்மங் களைச் செய்விக் கவேண்டுமென் பதையாயினும் | | ள்பவனாய் |
| | | (கர்ம) | = கர்மத்தை |
| | | கர்தும் | = செய்வதற்கு |
| | | அர்ஹஸி | = ஸமர்த்தனாகுக (கர்மங்களைச் செய்.) |
| ஸம்பஶ்யன் | = தெரிந்து கொ | | |

(மூ)—யத்(ஞ்)யதா(சா)சரதி ஶ்ரேஷ்ட ஸ்தத்ததே(தே)வேதரோ ஜன:||
ஸ யத்ப்ரமாணம் குருதே லோகஸ்தத(த)னுவர்த்ததே || 21 ||

(ப. உ.) யத், யத், ஆசரதி, ஶ்ரேஷ்ட:, தத், தத், ஏவ, இதர:, ஜன: | ஸ:, யத், ப்ரமாணம், குருதே, லோக:, தத், அனுவர்ததே ||

| | | | |
|---|---|---|---|
| ஶ்ரேஷ்ட: | = உத்தமனான புருஷன் | ப்ரமாணம் (இதி) | = ப்ரமாணமென்று |
| யத், யத் | = எந்தெந்த கர்மங்களை | குருதே | = செய்கிறானோ (தெரிந்து கொள்கிறானோ) |
| ஆசரதி | = செய்கிறானோ | | |
| இதர:, ஜன: | = இதர ஜனங்கள் | லோக: | = ஜனங்கள் |
| தத், தத், ஏவ | = அந்தந்த கர்மங்களையே | தத் | = அந்த ப்ரமாணமென்று தெரிந்து கொண்ட க்ரந்தத்தை |
| ஆசரதி | = செய்கிறார்கள். | | |
| ஸ: | = அந்த ஶ்ரேஷ்டனான மனிதன் | அனுவர்த்ததே | = அனுஸரிக்கிறார்கள். |
| யத் | = எந்த க்ரந்தத்தை | | |

(மூ)—ந மே பார்த்தாஸ்தி கர்தவ்யம் த்ரிஷு லோகேஷு கிஞ்சன ||
நானவாப்தமவாப்தவ்யம் வர்த ஏவ ச கர்மணி || 22 ||

(ப. உ.) ந, மே, பார்த்த, அஸ்தி, கர்தவ்யம், த்ரிஷு, லோகேஷு, கிம், சன | ந, அனவாப்தம், அவாப்தவ்யம், வர்த, ஏவ, ச, கர்மணி ||

| | | | |
|---|---|---|---|
| பார்த்த | = அர்ஜுனா! | அவாப்தவ்யம் | = கிடைக்கத்தக்கதும் |
| (யத:) | = எக்காரணத்தால் | கிஞ்சன | = சற்றேனும் |
| த்ரிஷு, லோகேஷு | = மூன்று லோகங்களிலும் | ந | = இல்லை. |
| | | (அத:) | = அக்காரணத்தால் |
| மே | = எனக்கு | மே | = எனக்கு |
| அனவாப்தம் | = கிடைக்காததும் | கர்தவ்யம் | = பல(ல)லாபேக்ஷையால் செய் |

| | | | |
|---|---|---|---|
| | யத்தக்க கர்மம் | வர்த (ஏவ) | = இருக்கவே யிருக்கிறேன். (ஜனங்களால் கர்மங்களைச் செய்விப்பதற்காக நான் கர்மங்களைச் செய்கிறேன்.) |
| ந, அஸ்தி | = இல்லை. | | |
| ச | = அப்படியிருந்த போதிலும் | | |
| கர்மணி | = கர்மத்தில் (கர்மத்தைச் செய்வதில்) | | |

(மூ)—யதி(ஹி) ஹ்யஹம் ந வர்தேயம் ஜாது கர்மண்யதந்த்ரித: ||
மம வர்த்மானு வர்தந்தே மனுஷ்யா: பார்த(ய) ஸர்வஶ: ||23||

(ப. உ.) யதி(ஹி), ஹி, அஹம், ந, வர்தேயம், ஜாது, கர்மணி, அதந்த்ரித: | மம, வர்த்ம, அனுவர்தந்தே, மனுஷ்யா:, பார்த்த, ஸர்வஶ: ||

| | | | |
|---|---|---|---|
| பார்த்த | = அர்ஜுனா! | மனுஷ்யா: | = மனிதர்கள் |
| அஹம் | = நான் | மம | = என்னுடைய |
| ஜாது | = எப்பொழுதாவது | வர்த்ம | = மார்க்கத்தை (கர்மத்தைச் செய்யாமலிருக்கும் மார்க்கத்தை) |
| அதந்த்ரித: (ஸன்) | = ஆலஸ்யமற்றவனாய் | | |
| கர்மணி | = கர்மத்தில் | | |
| யதி, ந, வர்தேயம் | = ப்ரவ்ருத்தனாகா விடில் | அனுவர்தந்தே | = அனுஸரிக்கிறார்கள். |
| ஸர்வஶ: | = ஸமஸ்தரான | ஹி | = ப்ரஸித்தம். |

(மூ)—உத்ஸீதே(தே)யுரிமே லோகா ந குர்யாம் கர்ம சேத(த)ஹம் ||
ஸங்கரஸ்ய ச கர்தா ஸ்யா முபஹன்யா மிமா: ப்ரஜா: ||24||

(ப. உ.) உத்ஸீதே(தே)யு:, இமே, லோகா:, ந, குர்யாம், கர்ம, சேத், அஹம் | ஸங்கரஸ்ய, ச, கர்தா, ஸ்யாம், உபஹன்யாம், இமா:, ப்ரஜா: ||

| | | | |
|---|---|---|---|
| அஹம் | = நான் | ஸங்கரஸ்ய | = கர்ம (தர்ம) லோபத்தாலுண்டாகும் அதர்மத்தால் எல்லோரிடகுலமும் கெட்டு, ஸ்த்ரீகளின் தோஷத்தால் உண்டாகும் வர்ணஸாங்கர்யத்தின் |
| கர்ம | = கர்மத்தை | | |
| ந, குர்யாம் சேத் | = செய்யாமற் போவேனாகில் | | |
| இமே | = இந்த | | |
| லோகா: | = ஜனங்கள் | | |
| உத்ஸீதே(தே)யு: | = கர்மங்களைச் செய்யாததினால் நரகாத்யனர்த்தங்களை அடைவார்கள். | கர்த்தா | = செய்பவன் |
| ச | = மற்றும் | ஸ்யாம் | = ஆவேன், |

| | | |
|---|---|---|
| இமா: | = இந்த | |
| ப்ரஜா: | = ஜனங்களை | |
| உபஹன் யாம் | = நாசப்படுத்திய வஞைவேன் (ஜனங்கள் நரகாத் யனர்த் தங்களை யடைவதற்கு நானே காரண ஞவேன்.) | |

(மூ)—ஸக்தா: கர்மண்யவித்வாம்ஸோ யதா(யா) குர்வந்தி பாரத ||
குர்யாத் வித்வாம் ஸ்ததா(யா)ஸக்தஶ்சிகீர்ஷுர் லோக ஸங்க்ரஹம் ||25||

(ப. உ.) ஸக்தா:, கர்மணி, அவித்(த்)வாம்ஸ:, யதா(யா), குர்வந்தி, பாரத | குர்யாத், வித்(த்)வான், ததா(யா), அஸக்த:, சிகீர்ஷு:, லோக ஸங்க்ரஹம் ||

| | | | |
|---|---|---|---|
| பாரத | = பரத குலத்தில் உதித்த அர்ஜுனு! | வித்வான் | = ஞானியும் |
| அவித்வாம்ஸ: | = அஞ்ஞானிகள் | அஸக்த: (ஸன்) | = பலாபேக்ஷையற்றவனுய் |
| கர்மணி | = கர்மவிஷயத்தில் | லோக ஸங்க்ரஹம் | = லோக ஸங்க்ரஹத்தை |
| ஸக்தா: (ஸந்த:) | = பலாபேக்ஷையுடையவர்களாய் | சிகீர்ஷு: | = செய்வதற்கு ஆசையுள்ளவனுய் (ஜனங்களால் கர்மங்களைச் செய்விப்பதற்காக) |
| யதா (யா) | = எவ்வாறு | | |
| கர்ம | = கர்மத்தை | | |
| குர்வந்தி | = செய்கிருர்களோ, | (கர்ம) | = கர்மத்தை |
| ததா(யா) | = அவ்வாறே | குர்யாத் | = செய்யத்தக்கது |

(மூ)—ந புத்திபே(ஜே)த(ஷ)ம் ஜனயேத(ஷ)ஜ்ஞாஞம் கர்மஸங்கி(ஷி)ஞம்||
ஜோஷயேத்ஸர்வ கர்மாணி வித்வான் யுக்தஸ்ஸமாசரன் ||26||

(ப. உ.) ந, புத்திபேதம், ஜனயேத், அஜ்ஞாஞம், கர்மஸங்கி(ஷி)ஞம் | ஜோஷயேத், ஸர்வகர்மாணி, வித்வான், யுக்த:, ஸமாசரன்||

| | | | |
|---|---|---|---|
| அஜ்ஞாஞம் | = பகவத் ஸ்வரூப ஞானமற்ற | புத்திபே(ஜே)தம் | = புத்தியின் மாருதலை |
| கர்மஸங்கி(ஷி)ஞம் | = கர்மத்தைச் செய்வதில் கருத்துடைய ஜனங்களின் | ந, ஜனயேத் | = உண்டாக்கக் கூடாது (கர்மத்தைச் செய்ய வேண்டுமென் |

| | | | |
|---|---|---|---|
| | னும் எண்ணத்தை மாற்றக் கூடாது.) | ஸமாசரன் (ஸன்) | = செய்துகொண்டே |
| | | ஸர்வ- | = ஸமஸ்த |
| வித்வான் | = ஞானியானவன் | கர்மாணி | = கர்மங்களேயும் |
| யுக்த:(ஸன்) | = பரமாத்மா விடத்தில் மனதைச் செலுத்தியவனாய் | ஜோஷயேத் | = செய்விக்கத் தக்கது (அஜ்ஞானிகளால் கர்மங்களேச் செய்விக்க வேண்டும்.) |
| கர்மாணி | = கர்மங்களே | | |

(மூ)—ப்ரக்ருதே: க்ரியமாணானி கு(ண)ணை: கர்மாணி ஸர்வஶ: ||
அஹங்கார-விமூடாத்மா கர்தாஹமிதி மன்யதே || 27 ||

(ப. உ.) ப்ரக்ருதே:, க்ரியமாணானி, கு(ண)ணை:, கர்மாணி, ஸர்வஶ: |
அஹங்கார-விமூடாத்மா, கர்தா, அஹம், இதி, மன்யதே ||

| | | | |
|---|---|---|---|
| அஹங்கார- | = அஹங்காரத்தால் | (ப்ரக்ருதே:) | = ஜட ப்ரக்ருதியின் |
| விமூட- | = மோகமடைந்த | (குணை:) | = ஸத்வ ரஜஸ் தமோ குணங்கள் இவைகளால் |
| ஆத்மா | = அறிவுடையவன் | | |
| ப்ரக்ருதே: | = மேலான கார்யங்களேயுடைய பரமாத்மாவின் | க்ரியமாணானி | = செய்யப்படும் |
| | | ஸர்வஶ: | = ஸமஸ்தமான |
| | | கர்மாணி | = நல்ல கர்மங்கள் மிஶ்ர (கலப்பு) கர்மங்கள்; கெட்ட கர்மங்கள் இவைகளே |
| குணை: | = ஞானேச்சாப்ரயத்னங்கள் | | |
| (ப்ரக்ருதே:) | = உத்தம, மத்யம அதம ஜீவர்களின் ஸ்வபாவத்திற்கு | (ப்ரதி) | = குறித்து |
| | | அஹம் | = நானே (ஒருவனே) |
| (குணை:) | = அனு குணங்களாகிய தத்வ ஞானம், மிஶ்ர ஞானம், மித்யா ஞானம் இவைகள் | கர்தா | = ஸ்வதந்திரமாக செய்பவன் |
| | | இதி | = என்று |
| | | மன்யதே | = தெரிந்து கொள்கிறான். |

(மூ)—தத்வவித்து மஹாபா(ஹோ)ஹோ கு(ண)ணகர்ம விபா(ஹா)க(ய)யோ: ||
கு(ண)ணா கு(ண)ணேஷு வர்தந்த இதி மத்வா ந ஸஜ்ஜதே
|| 28 ||

(ப. உ.) தத்வவித், து, மஹாபா(ஹோ), கு(ண)ணகர்மவிபா(ஹா)க(ஹ)யோ:| கு(ண)ணா:, கு(ண)ணேஷு, வர்தந்தே, இதி, மத்வா, ந, ஸஜ்ஜதே ||

| | |
|---|---|
| மஹாபா(ஹோ) | = அர்ஜுனா! |
| குணகர்மவிபா(ஹா)க(ஹ)யோ: | = பரமாத்மாவின் ஞானேச்சா ப்ரயத்னம் முதலிய குணங்கள், மற்றும் ப்ரக்ருதியின் ஸத்வரஜஸ்தமோ குணங்கள், மற்றும் ஸ்வதந்த்ரனான பரமாத்மாவின் கர்மங்கள், பரமாத்மாவின் அதீனனான ஜீவனால் செய்யப்படும் கர்மங்கள், விகாரமடைந்த ப்ரக்ருதியின் கர்மங்கள் இவைகளே முதலிய குண கர்மங்களின் வித்யாஸங்களின் |
| தத்வவித் | = தத்வங்களை அறிந்தவன் |
| கு(ண)ணா: | = பரமாத்மாவின் ஞானேச்சா ப்ரயத்னங்கள் |
| குணேஷு | = ஜீவனின் ஸ்வபாவாதி குணங்களில் |
| வர்தந்தே | = ப்ரேரகங்களாயிருக்கின்றன |
| இதி | = என்று |
| மத்வா | = தெரிந்துகொண்டு |
| ந, ஸஜ்ஜதே | = ஆஸக்தனாவதில்லை. (நானே செய்கிறேனென்றறிவதில்லை) |

(மூ)—ப்ரக்ருதேர்கு(ண)ண ஸம்மூடாஸ்ஸஜ்ஜந்தே கு(ண)ணகர்மஸு ||
தானக்ருத்ஸ்னவிதோ(டோ) மந்தான் க்ருத்ஸ்ன வின்ன விசாலயேத் ||29||

(ப. உ.) ப்ரக்ருதே:, குண-ஸம்மூடா:, ஸஜ்ஜந்தே, குண-கர்மஸு | தான், அக்ருத்ஸ்னவித:(டி:), மந்தா(டா)ன், க்ருத்ஸ்னவித், ந, விசாலயேத் ||

| | |
|---|---|
| யே | = எந்த |
| அக்ருத்ஸ்னவித:(டி:) | = குணம், கர்மம், இவைகளின் விபா(ஹா)கத்தைத் தெரியாத ஜனங்கள் |
| ப்ரக்ருதே: | = ஜட ப்ரக்ருதியின் |
| குண- | = ஸத்வ ரஜஸ் தமோ குணங்களால் |
| ஸம்மூடா: | = மோகிதராய் |
| குண- | = ப்ரக்ருதி கார்யமான இந்த்ரி |

| | | | |
|---|---|---|---|
| | யங்களிலும் (குணங்களிலும்) | தான் | = அந்த |
| கர்மஸு | = கர்மங்களிலும் | மந்தான் | = குணகர்ம விபாகத்தைத் தெரிந்து கொள்ளாமலிருக்கும் ஜனங்களை |
| ஸஜ்ஜந்தே | = அதிகமான நேஹமுடையவராகிறார்கள். | | |
| க்ருத்ஸ்னவித் | = முன் சொல்லியவாறு குணகர்ம விபாகத்தைத் தெரிந்தவன் | ந, விசாலயேத் | = குணகர்மங்களில் ஸ்னேஹத்தைவிடுவிக்கக் கூடாது. |

(மூ)—மயி ஸர்வாணி கர்மாணி ஸம்ன்யஸ்யாத்யாத்ம சேதஸா ||
நிராசீர் நிர்மமோ பூத்வா யுத்யஸ்வ விக(ம)தஜ்வர: ||30||

(ப. உ.) மயி, ஸர்வாணி, கர்மாணி, ஸம்ன்யஸ்ய, அத்யாத்ம-சேதஸா | நிராஸீ:, நிர்மம:, பூத்வா, யுத்யஸ்வ, விகதஜ்வர:||

| | | | |
|---|---|---|---|
| ஆத்யாத்ம சேதஸா (ஆத்யாத்மனிசேத:) | = ச்ரேஷ்டனை பரமாத்மா விடத்தி லிருக்கும் மனதால் | மயி | = என்னிடத்தில் (ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில்) |
| நிராசீ: (ஸன்) | = பலாபேக்ஷையற்றவனாய் | ஸம்ன்யஸ்ய | = அற்பித்து (இவ்வெல்லா கர்மங்களும் விஷ்ணு பூஜாத்மகமென்று அனுஸந்தானம் செய்து கொண்டு) |
| நிர்மம:(ஸன்) | = கர்த்ருத்வாபிமானத்தை யற்றவனாய் | | |
| ஸர்வாணி | = ஸமஸ்தங்களான | விக(ம)தஜ்வர:(ஸன்) | = துக்கமற்றவனாய் |
| கர்மாணி | = உன்னால் செய்யப்பட்டகர்மங்களை | யுத்யஸ்வ | = யுத்தத்தைச் செய்க. |

(மூ)—யே மே மதமித(ஃ)ம் நித்யமனுதிஷ்டந்தி மானவா: ||
ஶ்ரத்தா(ஃ)வந்தோநஸூயந்தோ முச்யந்தே தேபி கர்மபி:
(ஃ:) ||31||

(ப. உ.) யே, மே, மதம், இத(ஃ)ம், நித்யம், அனுதிஷ்டந்தி, மானவா; | ஶ்ரத்தா(ஃ)வந்த:, அனுஸூயந்த:, முச்யந்தே, தே, அபி, கர்மபி: (ஃ:) ||

| | | | |
|---|---|---|---|
| யே | = எந்த | | மல்) |
| மானவா: | = மனிதர்கள் | மே | = என்னுடைய |
| ஶ்ரத்தா வந்த: (ஸந்த:) | = என் வார்த்தையில் ஶ்ரத்தையுடையவர்களாய் | இதம் | = இந்த முன் சொல்லப் போகும் |
| அனஸூயந்த: (ஸந்த:) | = என்னிடத்தில் பொறாமை செய்யாமல் (கஷ்டமான கர்மத்தில் என்னை ப்ரேரேபிக்கிறானென்று தோஷத்தை நினைக்கா | மதம் | = மதத்தை |
| | | நித்யம் | = எப்பொழுதும் |
| | | அனுதிஷ்டந்தி | = அனுஷ்டிக்கிறார்களோ |
| | | தே, அபி | = அவர்களும் |
| | | கர்மபி: (ஹி:) | = கர்மங்களினின்றும் |
| | | முச்யந்தே | = விடுவிக்கப் படுகிறார்கள். |

(மூ)—யேத்வேதத(ஃ)ப்(ஹீ)யஸூயந்தோ நானுதிஷ்டந்தி மே மதம் ||
ஸர்வஜ்ஞான விமூடாம் ஸ்தான் வித்தி(யூ) நஷ்டானசேதஸ: ||32||

(ப. உ.) யே, து, ஏதத், அப்(ஹீ)யஸூயந்த:, ந, அனுதிஷ்டந்தி, மே, மதம் | ஸர்வஞானவிமூடான், தான், வித்தி(யூ), நஷ்டான், அசேதஸ: ||

| | | | |
|---|---|---|---|
| யே, து | = யார் | | வஸ்து விஷயகமான ஞானமற்ற |
| அப்(ஹீ)யஸூயந்த: (ஸந்த:) | = த்வேஷத்தைச் செய்து கொண்டே | தான் | = அந்த ஜனங்களை |
| ஏதத் | = இந்த | நஷ்டான் | = நாஶமடைந்தவராக (நரகாத்யனர்த்தங்களை அடைந்தவராக) |
| மே | = என்னுடைய | | |
| மதம் | = மதத்தை | | |
| ந, அனுதிஷ்டந்தி | = ஆசரிப்பதில்லையோ | வித்தி(யூ) | = தெரிந்து கொள். |
| ஸர்வஜ்ஞான விமூடான் | = தெரிந்து கொள்வதற்கு யோக்யமான ஸகல | | |

அவதரணிகை :—உன்னுடைய மதத்தை அனுஷ்டிப்பதால் மோக்ஷம் கிடைத்துக்கொண்டிருக்க, ஜனங்கள் ஏன் அதை அனுஷ்டிப்பதில்லை? என்னும் அர்ஜுனனின் ஆக்ஷேபத்திற்கு, அவர்களின் தாமஸஸ்வபாவமே காரணமென்றுசொல்லுகிறான்—

(மூ)—ஸத்(ஜீ)ருஶம் சேஷ்டதே ஸ்வஸ்யா: ப்ரக்ருதேர் ஞானவானபி||
ப்ரக்ருதிம் யாந்தி பூ(ஊ-ு)தானி நிக்ரஹ: கிம் கரிஷ்யதி || 33 ||

(ப. உ.) ஸத்(ஜீ)ருஶம், சேஷ்டதே, ஸ்வஸ்யா:, ப்ரக்ருதே:, ஞானவான், அபி | ப்ரக்ருதிம், யாந்தி, பூ(ஊ-ு)தானி, நிக்ரஹ:, கிம், கரிஷ்யதி ||

| | | | |
|---|---|---|---|
| ஞானவான், அபி | = ஞானியாயினும் | பூதானி | = ப்ராணிகள் |
| ஸ்வஸ்யா: | = தன்னுடைய | ப்ரக்ருதிம் | = தம் தம் ஸ்வபாவத்தை |
| ப்ரக்ருதே: | = ஸ்வபாவத்திற்கு | யாந்தி | = அடைகிறார்கள் |
| ஸத்ருஶம் | = அனுகுணமாக | நிக்ரஹ: | = மனோ நிக்ரஹம் |
| சேஷ்டதே | = வ்யாபாரங்களை செய்கிறான். | கிம் | = என்ன |
| | | கரிஷ்யதி | = செய்யும் ? |

அவதரணிகை :—இந்த்ரிய நிக்ரஹம்செய்வது மிகவும் கஷ்டமாயினும் அதிக ப்ரயத்னத்தால் ஆவஶ்யகமாக அதைச்செய்ய வேண்டுமென்று சொல்லுகிறான் :—

(மூ)—இந்த்ரியஸ்யேந்த்ரியஸ்யார்த்தே ராகத்(ஜீ)வேஷௌ வ்யவஸ்தி(யி)தௌ ||
தயோர்ந வஶமாக(ம)ச்சே(ஷே)த் தௌ ஹ்யஸ்ய பரிபந்தி(யி)னௌ ||34||

(ப. உ.) இந்த்ரியஸ்ய, இந்த்ரியஸ்ய, அர்த்தே, ராக(ம)த்வேஷௌ, வ்யவஸ்திதௌ | தயோ:, ந, வஶம், ஆக(ம)ச்சே(ஷே)த், தௌ, ஹி, அஸ்ய, பரிபந்தி(யி)னௌ ||

| | | | |
|---|---|---|---|
| இந்த்ரியஸ்ய-இந்த்ரியஸ்ய | = ப்ரதி இந்த்ரியத்தின் | | ்வேஷங்களின் |
| அர்த்தே | = விஷயத்தில் | வஶம் | = அதீனம் |
| ராகத்வேஷௌ | = அனுகூலமாயின் அன்பும், ப்ரதிகூலமாயின் த்வேஷமும் | ந, ஆகச்சேத் | = ஆகக் கூடாது. (ராகத்வேஷங்களை யனுஸரித்து நடக்கக் கூடாது) |
| வ்யவஸ்தி(யி)தௌ | = அவஶ்யகமாய் உண்டாகின்றன | தௌ | = அந்த ராகத்வேஷங்கள் |
| [ததா(யா)] (அபி) | = அப்படியிருந்தபோதிலும் | அஸ்ய | = கீர்த்தியை அபேக்ஷிப்பவர்களிட |
| தயோ: | = அந்த ராகத் | | |

| | | | |
|---|---|---|---|
| பரிபந்தி(யி)னௌ | = ஶத்ருக்கள். (கீர்த்தியை நாஶமடையும் | | படி செய்பவைகள்) |
| | | ஹி | = ப்ரஸித்தம். |

அவதரணிகை:—"நான் யுத்தமென்னும் கர்மத்தைச் செய்வதில்லை. ஜனகாதிகளைப்போல் த்யானாதிகளைச் செய்து கொண்டே, பிச்சையினால் ஜீவனம் செய்கிறேன்" என்னும் அர்ஜுனனின் வார்த்தைகளுக்கு ஸமாதானத்தைச் சொல்லுகிறான் :—

(மூ)—ஶ்ரேயான் ஸ்வத(ய)ர்மோ விகு(௩)ண: பரதர்மாத் ஸ்வனுஷ்டிதாத் ||
ஸ்வதர்மே நித(ய)னம் ஶ்ரேய: பரதர்மோ ப(௪)யாவஹ: ||35||

(ப. உ.) ஶ்ரேயான், ஸ்வத(ய)ர்ம;, விகு(௩)ண:, பரத(ய)ர்மாத், ஸ்வனுஷ்டிதாத் | ஸ்வத(ய)ர்மே, நித(ய)னம், ஶ்ரேய:, பரத(ய)ர்ம:, ப(௪)யாவஹ: ||

| | | | |
|---|---|---|---|
| ஸ்வதர்ம: | = தம் தம் வர்ணாஶ்ரமங்களுக்கு விஹிதமான தர்மம் | | விஹிதமான தர்மத்தைவிட |
| | | ஶ்ரேயான் | = ஶ்ரேயஸ்கரமானது. |
| விகு(௩)ண:, (அபி) | = சில பாகங்களினால் குறைந்தாலும் (ஸரியாக முடிப்பதற்கு முடியாமல் குறைவாயினும்) | ஸ்வதர்மே | = தம் தம் தர்மத்தில் |
| | | நிதனம், (அபி) | = மரண முண்டாயினும் |
| | | ஶ்ரேய: | = ஶ்ரேயஸ்கரமானது. |
| ஸ்வனுஷ்டிதாத் | = ஸம்பூர்ணமான பாகங்களால் செய்வதற்கு ஸாத்யப்படும் | பரதர்ம: | = இதர வர்ணாஶ்ரமங்களுக்கு விஹிதமான தர்மம் |
| பரதர்மாத் | = இதர வர்ணாஶ்ரமங்களுக்கு | ப(௪)யாவஹ: | = அனர்த்தத்தைத்தருவது. |

(க. உ.) இதர வர்ணாஶ்ரமதர்மங்கள் ஸகல அங்கங்களுடன் செய்வதற்கு ஸாத்யமாயிருந்து, அவைகளைச் செய்வதைவிட, தம் தம் வர்ணாஶ்ரமதர்மங்கள் ஸகல அங்கங்களுடன் செய்வதற்கு முடியாமல் அநேக அங்கங்களால் குறைவாயிருந்தபோதிலும் அவைகளைச் செய்வதே ஶ்ரேயஸ்கரமானது.

[உதாஹரணம் :—(1) ஸ்த்ரீ தனக்கு விஹிதமான தன் புருஷனிட பணிவிடை செய்வதில் பல குறைகளிருந்தாலும் அதிககுற்றமாவதில்லை. தனக்கு விஹிதமல்லாத இதர ஸ்த்ரீக்கு விஹிதமான இதர புருஷனிட பணிவிடையை வெகு மேன்மையாய்ச் செய்த போதிலும் அப்பணிவிடை அதிக குற்றமாகிறது.

(2) சேவகன் தான் செய்யவேண்டிய வேலைகளில் கொஞ்சம் குறைவாயினும் அதிக குற்றமாவதில்லை. அவனே வேறு அதிகாரியால் செய்யப்படவேண்டிய வேலைகளை வெகுவிமர்சையாய் செய்த போதிலும் அதிக குற்றமாகிறது.]

ஆகையால் நீ க்ஷத்ரியர்களுக்கு விஹிதமான யுத்தத்தைச் செய்யவேண்டுமேயல்லாது ஸன்யாஸிகளுக்கு விஹிதமான பிக்ஷாடனாதிகளைச் செய்யக்கூடாது.

அவதரணிகை :—ராகத்வேஷாதிகளில் எது ப்ரபலமானது? எதனால் மனிதர்களுக்கு பாபகர்மங்களில் ப்ரவர்த்தியுண்டாகிறது? அதைச் சொன்னால் அதை விட்டுவிடலாம் என்கிற கருத்துடன் அர்ஜுனன் ஸ்ரீகிருஷ்ணனை வினவுகிறான்.

அர்ஜுன உவாச:—

(மூ)—அத(ய) கேன ப்ரயுக்தோயம் பாபம் சரதி பூருஷ: ||
அநிச்சன்னபி வார்ஷ்ணேய ப(ப)லாதிவ நியோஜித: ||36||

(ப. உ.) அத(ய), கேன, ப்ரயுக்த:, அயம், பாபம், சரதி, பூருஷ:| அனிச்ச(ஹ)ன், அபி, வார்ஷ்ணேய, ப(ப)லாத், இவ, நியோஜித: ||

| | | | |
|---|---|---|---|
| வார்ஷ்ணேய | = வ்ருஷ்ணி குலத்தில் உதித்த ஸ்ரீ கிருஷ்ணா! | அத(ய) | = பரமாத்மாவை தவிர |
| அயம் | = இந்த | கேன | = காம, க்ரோத, லோப, மோஹ, மத, மத்ஸரம் இவைகளில் எதனால் |
| பூருஷ: | = மனிதன் | | |
| அனிச்ச(ஹ)ன் அபி | = பாப கார்யங்களை செய்வதில் விருப்பமில்லாவிடினும் | ப்ரயுக்த: | = ஏவப்பட்டவனாய் |
| ப(ப)லாத் | = கட்டாயமாய் | பாபம் | = பாபகார்யத்தை |
| நியோஜித: இவ | = கார்யத்தில் ஏவப்பட்டவனைப்போல் | சரதி | = செய்கிறான்? |

ஸ்ரீ பகவான் உவாச :—

(மூ)—காம ஏஷ க்ரோத ஏஷ ரஜோகு(ண)ண ஸமுத்ப(ஹ)வ: ||
மஹாஶநோ மஹாபாப்மா வித்யேன மிஹ வைரிணம் ||37||

(ப. உ.) காம:, ஏஷ:, க்ரோத:(ய:), ஏஷ:, ரஜோகு(ண)ண ஸமுத்ப(ஹ)வ:| மஹாஶன:, மஹாபாப்மா, வித்தி(யி), ஏனம், இஹ, வைரிணம் ||

ஸ்ரீபகவான் = ஸ்ரீ கிருஷ்ணன்
உவாச = (காமமே[ஆசையே]பாபகார்யத்தில் ப்ரவர்த்திக்கச் செய்வதென்று பதில்) சொல்லுகிருன் :—
ஏஷ: = இந்தஜனங்களை கெட்ட கார்யங்களில்ப்ரவர்த்திக்கும்படிக்கு செய்வது
காம: = காமமே(ஆசையே)
க்ரோதம் பாபகார்யத்தில் ப்ரவர்த்திக்கும்படி செய்வதாகக் கண்டு வந்துகொண்டிருக்க, காமத்தையே ப்ரவர்த்தகமென்று எவ்வாறு சொல்லுகிருய் எனின் சொல்லுகிருன் :—
ஏஷ: = இந்த காமமே
க்ரோத: = கோபம் (கோபத்திற்குக் காமம் காரணமாவதால் கோபமும் காமத்திலேயே சேர்ந்தது.)
ஏஷ: = இந்த காமம்
ரஜோகுண- = ரஜோ குணத்தால்
ஸமுத்ப(ஹ)வ: = பிறந்தது.
மஹாஶன: = அதிகமான (பூர்த்தி செய்வதற்கு ஸாத்யமல்லாத) விஷயங்களையுடையது.)
மஹாபாப்மா = மகா பாபத்திற்குக் காரணமானது.
இஹ = ஐஹிகாமுஷ்மிகபுருஷார்த்த ஸம்பாதன விஷயத்தில்
ஏனம் = இந்த காமத்தை
வைரிணம் = ஶத்ருவானதாக (ப்ரதிபந்தகத்தைச்செய்வதாக)
வித்தி(யி) = தெரிந்துக்கொள்.

(மூ)—தூ(ய)மேனுவ்ரியதே வஹ்னிர்யதா(யா)த(உ)ர்ஶோ மலேன ச ||
யதோ(யோ)ல்பே(வே)னுவ்ருதோ க(ம)ர்ப(ஹ)ஸ்ததா(யா) தேனேத(உ)மாவ்ருதம் ||38||

(ப. உ.) தூ(ய-ம)மேன, ஆவ்ரியதே, வஹ்நி:, யதா(யா), ஆத(ஒ)ர்ஶ:, மலேன, ச | யதா (யா), உல்பே(வே)ன, ஆவ்ருத:, க(ம)ர்ப:(ஹ:), ததா (யா), தேன, இத(ஒ)ம், ஆவ்ருதம் ||

| | |
|---|---|
| வஹ்நி: | = நெருப்பு |
| யதா(யா) | = எப்படி |
| தூ(ய-ம) மேன | = புகையால் |
| ஆவ்ரியதே | = மூடப்படுகிறதோ |
| ததா(யா) | = அப்படியே |
| இத(ஒ)ம் | = இந்த உத்தம ஜீவ ஸமுதாயம் |
| தேன | = அந்த காமத்தால் |
| ஆவ்ருதம் | = மூடப்பட்டிருக்கிறது. |
| ச | = மற்றும் |
| யதா(யா) | = எப்படி |
| ஆதர்ஶ: | = கண்ணாடி |
| மலேன | = தூசியினால் |
| ஆவ்ரியதே | = மூடப்படுகிறதோ |
| ததா (யா) | = அப்படியே |
| இத(ஒ)ம் | = இந்த மத்யம ஜீவ ஸமூஹம் |
| ஆவ்ருதம் | = மூடப்பட்டிருக்கிறது. |
| யதா(யா) | = எப்படி |
| கர்ப:(ஹ:) | = கர்ப்பமானது |
| உல்பே(வே)ன | = மாயையால் (கர்பவேஷ்டன சர்மத்தால்) |
| ஆவ்ருத: | = மூடப்பட்டிருக்கிறதோ |
| ததா(யா) | = அப்படி |
| இத(ஒ)ம் | = இந்த அதம ஜீவ ஸமூஹம் |
| ஆவ்ருதம் | = மூடப்பட்டிருக்கிறது. |

(க. உ.) :—உத்தம, மத்யம, அதம ஜீவர்கள் காமத்தால் மூடப்பட்டிருப்பதினால் அவர்களுக்கு ஞானமுண்டாவதில்லை. (காமம் ஜீவர்களை மூடிக்கொண்டு ஞானமுண்டாகாமற் செய்கிறது.)

அவதாரிகை :—காமம் ஞானமுண்டாவதற்கு ப்ரதிபந்தகம் (தடங்கல்) செய்கிறது என்று மாத்ரமல்ல. ஶாஸ்த்ரங்களால் உண்டான ஞானத்தையும் நாஶப்படுத்துகிறதென்று இரண்டு ஶ்லோகங்களால் சொல்லுகிறான் :—

(மூ)—ஆவ்ருதம் ஞான மேதேன ஞானினோ நித்யவைரிணா ||
காமரூபேண கௌந்தேய துஷ்பூரேணானலேன ச || 39 ||

(ப. உ.) ஆவ்ருதம், ஞானம், ஏதேன, ஞானின:, நித்யவைரிணா | காமரூபேண, கௌந்தேய, து(ஒ)ஷ்பூரேண, அனலேன, ச ||

| | | | |
|---|---|---|---|
| கௌந்தேய | = அர்ஜுனு! | அனலேன | = த்ருப்தியற்ற |
| ஞானின: | = ஞானியின் | நித்ய வைரிணு | = நித்ய ஶத்ருவான |
| ஞானம் | = ஶாஸ்த்ர ஜன்ய ஞானம் | காமரூபேண | = காமத்தால் |
| ஏதேன | = இந்த | ஆவ்ருதம் | = போர்க்கப்பட்டிருக்கிறது. (மூடப்பட்டிருக்கிறது.) |
| துஷ்பூரேண | = முடிப்பதற்கு ஶக்யமல்லாத | | |
| ச | = மற்றும் | | |

(மூ)—இந்த்ரியாணி மனோ புத்திரஸ்யாதி(யி)ஷ்டான முச்யதே ||
ஏதைர்விமோஹயத்யேஷ ஞானமாவ்ருத்ய தே(டே)ஹினம்
||40||

(ப. உ.) இந்த்ரியாணி, மன:, புத்தி:, அஸ்ய, அதி(யி)ஷ்டானம், உச்யதே | ஏதை:, விமோஹயதி, ஏஷ:, ஞானம், ஆவ்ருத்ய, தே(டே)ஹினம் ||

| | | | |
|---|---|---|---|
| அஸ்ய | = இந்த காமமென்னும் ஶத்ருவுக்கு | | இந்த்ரியங்களால் (உண்டாகும்) |
| இந்த்ரியாணி | = கண் முதலிய இந்த்ரியங்கள் | ஞானம் | = ஞானத்தை |
| மன: | = விருப்பங்களைப் பிறப்பிக்கும் மனது | ஆவ்ருத்ய | = சூழ்ந்து கொண்டு (உண்டாகாமற் செய்து) அல்லது |
| புத்தி: | = நிஶ்சயத்தைப் பிறப்பிக்கும் புத்தி (இவைகள்) | ஞானம் | = ஶாஸ்த்ரத்தால் உண்டான அறிவை |
| அதி(யி)ஷ்டானம் | = ஆஶ்ரயம் (இருப்பிடம்) | ஆவ்ருத்ய | = மூடிக்கொண்டு (அதனுல் கார்யமாகாமற் செய்து) |
| (இதி) | = என்று | தே(டே)ஹினம் | = ஜீவனை |
| உச்யதே | = சொல்லப்படுகிறது. | விமோஹயதி | = மோகப்படுத்துகிறது. (மயக்குகிறது.) |
| ஏஷ: | = இந்த காமம் | | |
| ஏதை: | = கண் முதலிய | | |

(மூ)—தஸ்மாத் த்வமிந்த்ரியாண்யாதௌ(டௌ)நியம்ய பரதர்ஷப () ||
பாப்மானம் ப்ரஜஹி ஹ்யேனம் ஞான-விஜ்ஞான-நாஶனம்
|| 41 ||

(ப. உ.) தஸ்மாத், த்வம், இந்த்ரியாணி, ஆதௌ(தௌ), நியம்ய, பரதர்ஷப(ஷ) | பாப்மானம், ப்ரஜஹி, ஹி, ஏனம், ஞான-விஞான-நாஶனம் ||

பரதர்ஷப = பரதகுலத்தில் ஶ்ரேஷ்டனான அர்ஜுனா!
தஸ்மாத் = இந்த்ரியங்களின் மூலமாய் காமம் மோஹகமானதால்
த்வம் = நீ
ஆதௌ (தௌ) = முதலில்
இந்த்ரியாணி = இந்த்ரியங்களை
நியம்ய = அடக்கி ஸ்வாதீனத்தில் வைத்துக் கொண்டு (துர்விஷயங்களில் போகாமற் செய்து கொண்டு)
ஞான- = ஸாதாரண ஞானம்
விஜ்ஞான- = விஶேஷஞானம் இவைகளை
நாஶனம் = நாஶப்படுத்தும்
பாப்மானம் = பாபிஷ்டமான (பாபஜனகமான)
ஏனம் = இக்காமத்தை
ப்ரஜஹி = நாஶப்படுத்து.
ஹி = இந்த்ரியங்களின் ஜயம் காமத்தை நாசப்படுத்துமென்பது ப்ரஸித்தம்.

அவதரணிகை :—பரமாத்மா ஸர்வோத்தமன், மற்றவர்களெல்லோரும் அவனிட ஆதீனர்கள் என்னும் ஞானமே இதர பதார்த்த விஷயகமான காமத்தை நாஶப்படுத்துகிறது. ஆகையால் பரமாத்மாவை ஸர்வோத்தமனென்று தெரிந்துகொண்டு, காமத்தை நாஶப்படுத்திக்கொள்ளென்று சொல்லுகிறான் :—

(மூ)—இந்த்ரியாணி பராண்யாஹுரிந்த்ரியேப்(ஶ்)ய: பரம் மன:||
மனஸஸ்து பரா புத்தி(ர்)ர்யோ புத்தே:(ர்) பரதஸ்து ஸ: ||42||
ஏவம் புத்தே:(ர்) பரம் பு(ரு)த்வா(வா)ஸம்ஸ்தப்யாத்மான
மாத்மனா ||
ஜஹி ஶத்ரும் மஹாபா(ஹோ)ஹோ காமரூபம் து(ரா)ராஸதம்
(ரா)ம் || 43 ||

(ப. உ.) இந்த்ரியாணி, பராணி, ஆஹு:, இந்த்ரியேப்(ஶ்)ய:, பரம், மன: | மனஸ:, து, பரா, பு(த்)த்தி:(ர்), ய:, புத்தே:(ர்), பரத:, து, ஸ: || ஏவம், புத்தே:, பரம், புத்வா(வா), ஸம்ஸ்தப்(ஶ்)ய, ஆத்மானம், ஆத்மனா| ஜஹி, ஶத்ரும், மஹாபா(ஹோ)ஹோ, காமரூபம், து(ரா)ராஸத(ரா)ம்||

| | |
|---|---|
| இந்த்ரியாணி | = இந்த்ரியாபிமானிகளான தேவதைகள் |
| (ஶரீராத்) | = ஶரீராபிமானி தேவர்களைவிட |
| பராணி (இதி) | = உத்தமர்களென்று |
| ஆஹு: | = (ஞானிகள்) சொல்லுகிறார்கள். |
| இந்த்ரியேப்(ஶி)ய: | = இந்த்ரியாபிமானிதேவர்களைவிட |
| மன: | = மனோபிமானி தேவன் |
| பரம் | = உத்தமன். |
| மனஸ:, து | = மனோபிமானி தேவனைவிட |
| புத்தி:(யூ:) | = புத்யபிமானி தேவதை |
| பரா | = உத்தமமானது. |
| ய: | = எவன் |
| புத்தே:, து | = புத்யபிமானி தேவதையைவிட அதிக |
| பரத: | = உத்தமனாய் |
| (அஸ்தி) | = இருக்கிறானோ |
| ஸ: | = அவன் |
| ஆத்மா | = பரமாத்மா. |

| | |
|---|---|
| மஹாபாஹோ | = அர்ஜுனா! |
| ஏவம் | = இவ்விதமாக |
| புத்தே: | = புத்யபிமானி தேவதையைவிட |
| பரம் | = உத்தமனான பரமாத்மாவை |
| பு(ஸா)த் (யி)வா | = அறிந்துகொண்டு |
| ஆத்மனா | = புத்தியால் |
| ஆத்மானம் | = மனதை |
| ஸம்ஸ்தப் (ஶி)ய | = ஸ்தம்பனம் செய்துகொண்டு (விஷயங்களைக் குறித்து போகாமற் செய்துகொண்டு) |
| து(ஜா)ரா ஸத(ஜ)ம் | = கஷ்டப்பட்டு போக்கடித்துக் கொள்வதற்கு ஸாத்யமான |
| காமரூபம் | = காமரூபமாகிய |
| ஶத்ரும் | = புருஷார்த்தத்தை நாஶப்படுத்தும் ஶத்ருவை |
| ஜஹி | = நாஶப்படுத்திக் கொள். |

(க. உ.):—பரமாத்மா ஸர்வோத்தமனென்று தெரிந்துகொண்டு, இதர விஷயங்களை ஆபேக்ஷிக்காமல், அந்த பரமாத்மாவின் பூஜார்த்தமாய் க்ஷத்ரியனான உனக்கு விஹிதமான (யோக்யமான) யுத்தமென்னும் கர்மத்தை நீ செய்.

ஓம் தத் ஸத்

ஸ்ரீ பகவத் கீதையில் ஸ்ரீ க்ருஷ்ணார்ஜுன ஸம்வாதத்தில்
கர்மயோக மென்னும்

மூன்றாவது அத்தியாயம் முற்றிற்று.

---

## நான்காவது அத்தியாயம்.

அவதாரணிகை :—யோகத்தில் ருசியை (ஆசையை) உண்டாக்குவதற்காக பின்னால் சொல்லப்பட்ட யோகம் (ஞானோபாயம்) பூர்வீகர்களால் ஆசரிக்கப்பட்டிருக்கிறதென்று 1, 2, 3 ஶ்லோகங்களால் சொல்லுகிறான் :—

ஸ்ரீ பகவானுவாச —

(மூ)—இமம் விவஸ்வதே யோக(ம)ம் ப்ரோக்தவானஹ மவ்யயம் ||
விவஸ்வான் மனவே ப்ராஹ மனுரிக்ஷ்வாகவேப்(ஞ)ரவீத் ||1||

(ப. உ.) இமம், விவஸ்வதே, யோக(ம)ம், ப்ரோக்தவான், அஹம், அவ்யயம் | விவஸ்வான், மனவே, ப்ராஹ, மனு:, இக்ஷ்வாகவே, அப்(ஞ)ரவீத் ||

| | | | |
|---|---|---|---|
| ஸ்ரீ பகவான் | = ஸ்ரீக்ருஷ்ணன் | | காக |
| உவாச | = சொல்லுகிறான். | ப்ரோக்தவான் | = சொல்லியிருக்கிறேன். |
| அஹம் | = நான் (ஸ்ரீகிருஷ்ணன்) | விவஸ்வான் | = ஸூர்யன் |
| அவ்யயம் | = நாஶமற்ற மோக்ஷ பலத்தைக் கொடுக்கும் | மனவே | = தன்குமாரனான மனுவுக்கு |
| | | ப்ராஹ | = சொன்னான். |
| | | மனு: | = மனு |
| இமம் | = இந்த | இக்ஷ்வாகவே | = தன் குமாரனான இக்ஷ்வாகு ராஜனுக்கு |
| யோக(ம)ம் | = ஞானோபாயத்தை | | |
| விவஸ்வதே | = ஸூர்யனுக் | அப்(ஞ)ரவீத் | = சொன்னான். |

(மூ)—ஏவம் பரம்பரா ப்ராப்தமிமம் ராஜர்ஷயோ விது:(ஞ:) ||
ஸ காலேனேஹ மஹதா யோகோ(ம) நஷ்ட: பரந்தப ||2||

(ப. உ.) ஏவம், பரம்பராப்ராப்தம், இமம், ராஜர்ஷய:, விது:(ஞ:) | ஸ:, காலேன, இஹ, மஹதா, யோக:(ம:), நஷ்ட:, பரந்தப ||

| | | | |
|---|---|---|---|
| ராஜர்ஷய: | = நிமி முதலான ராஜ ஶ்ரேஷ்டர்களும், ரு(ஷி)ஷிகளும், | பரம்பரா | = பரம்பரையாய் |
| | | ப்ராப்தம் | = வந்த |
| | | இமம் | = இந்த யோகத்தை (ஞானோபாயத்தை) |
| ஏவம் | = இவ்விதமாக | | |

| | | | |
|---|---|---|---|
| (ஸ்வபித்ருப்ய:) | = தம் தம் தந்தைகளான இக்ஷ்வாகு முதலானவர்களால் | மஹதா, காலேன | = வெகு காலமாய் விட்டதால் |
| விது:(டீ:) | = தெரிந்து கொண்டார்கள். | இஹ | = இந்த லோகத்தில் (மண்ணுலகில்) |
| பரந்தப | = சத்ரு தாபகனை அர்ஜுனா! | நஷ்ட: | = தெரியாமற் போய்விட்டிருக்கிறது. |
| ஸ:, யோக:(ஃ:) | = அந்த யோகம் | | |

(மூ)—ஸ ஏவாயம் மயா தேத்(ஃ)ய யோக(ஃ:) ப்ரோக்த: புராதன: ||
ப(ஃ)க்தோஸி மே ஸகா(வா) சேதி ரஹஸ்யம் ஹ்யேதது
(டீ)த்தமம் || 3 ||

(ப. உ.) ஸ:, ஏவ, அயம், மயா, தே, அத்(ஃ)ய, யோக(ஃ):, ப்ரோக்த:, புராதன: | ப(ஃ)க்த:, அஸி, மே, ஸகா(வா), ச, இதி, ரஹஸ்யம், ஹி, ஏதத், உத்தமம் ||

| | | | |
|---|---|---|---|
| புராதன: | = ப்ராசீனமான | | க்ருஷ்ணனுல்) |
| ஸ:, ஏவ | = அதுவே | அத்(ஃ)ய | = இப்பொழுது |
| அயம் | = இந்த | தே | = உனக்கு |
| யோக:(ஃ:) | = யோகம். | ப்ரோக்த: | = சொல்லப் பட்டது. |
| மே | = எனக்கு | | |
| பக்த:, அஸி | = பக்தனுயிருக்கிருய் | ஏதத் | = இந்த யோக(ஃ)ம் |
| ச | = மற்றும் | ரஹஸ்யம் | = மிகவும்ரஹஸ்யமானது, |
| ஸகா(வா) | = நேசனுய் | | |
| அஸி | = இருக்கிருய் | உத்தமம் | = உத்தமமானது |
| (இதி) | = என்று | (இதி) | = என்று |
| மயா | = என்னுல் (ஸ்ரீ | ஹி | = ப்ரஸித்தம். |

அர்ஜுன உவாச—

(மூ)—அபரம் ப(ஃ)வதோ ஜன்ம பரம் ஜன்ம விவஸ்வத: ||
கத(ஃ)மேதத்(ஃ) விஜானீயாம் த்வமாதௌ(டீ) ப்ரோக்த
வானிதி || 4 ||

(ப. உ.) அபரம், ப(ஃ)வத:, ஜன்ம, பரம், ஜன்ம, விவஸ்வத: | கத(ஃ)ம், ஏதத், விஜானீயாம், த்வம், ஆதௌ(டீ), ப்ரோக்தவான், இதி ||

| | | | |
|---|---|---|---|
| அர்ஜுன: | = அர்ஜுனன் | (அத:) | = ஆகையால் |
| உவாச | = வினவுகிறான். | த்வம் | = நீ (கிருஷ்ணன்) |
| ப(ஹ)வத: | = உன்னுடைய (ஸ்ரீ கிருஷ்ணனுடைய) | ஆதௌ (ஔ) | = முதலில் |
| ஜன்ம | = பிறப்பு | விவஸ்வதே | = சூர்யனுக்காக |
| அபரம் | = பிறகு (இப்பால்) உண்டானது. | ப்ரோக்தவான் | = சொல்லியிருக்கிறாய் |
| விவஸ்வத: | = ஸூர்யனின் | இதி | = என்னும் |
| ஜன்ம | = ஜன்மம் | ஏதத் | = இவ்விஷயத்தை |
| புரம் | = பூர்வ காலிகமானது. (முற்காலத்திலுண்டானது.) | (அஹம்) | = நான் |
| | | கத(ய)ம் | = எப்படி |
| | | விஜானீயாம் | = நிஜமென்று தெரிந்து கொள்வது? |

(க. உ.) :—ஸூர்யன் முன்னிருந்தவன், நீ பிறகு இப்பால் பிறந்தவன். ஆகையால் 'ஸூர்யனுக்கு நான் இந்த யோகத்தைச் சொன்னேன்' என்று நீ சொல்வது எப்படிப் பொருந்தும்? என்று ஆக்ஷேபம்.

ஸ்ரீ பகவானுவாச—

(ரு)—ப(ப)ஹூனி மே வ்யதீதானி ஜன்மானி தவ சார்ஜுன ||
தான்யஹம் வேத(உ) ஸர்வாணி ந த்வம் வேத்த(ய)பரந்தப||5||

(ப. உ.) ப(ப)ஹூனி, மே, வ்யதீதானி, ஜன்மானி, தவ, ச, அர்ஜுன | தானி, அஹம், வேத(உ), ஸர்வாணி, ந, த்வம், வேத்த(ய), பரந்தப ||

| | | | |
|---|---|---|---|
| ஸ்ரீ பகவான் | = ஸ்ரீ கிருஷ்ணன் | ப(ப)ஹூனி | = அனேகமான |
| உவாச | = பதில் அளிக்கிறான். | ஜன்மானி | = ஜன்மங்கள் |
| அர்ஜுன | = அர்ஜுனா! | வ்யதீதானி | = கடந்திருக்கின்றன. |
| மே | = என்னுடைய | அஹம் | = நான் |
| ப(ப)ஹூனி | = அனேகங்களான | தானி | = அந்த |
| ஜன்மானி | = ஜன்மங்கள் (அவதாரங்கள்) | ஸர்வாணி | = எல்லா ஜன்மங்களையும் |
| வ்யதீதானி | = கடந்திருக்கின்றன. | வேத(உ) | = தெரிந்தவனாயிருக்கிறேன். |
| ச | = மற்றும் | பரந்தப | = ஶத்ரு தாபகனான அர்ஜுனா! |
| தவ | = உன்னுடைய | த்வம் | = நீ |

தாணி = அந்த ஜன்மங்களை

ந வேத்த(த்) = தெரிந்தவனல்ல.

அவதரணிகை:—பிறப்பும், இறப்பும் இல்லாத பரமாத்மாவுக்கு ஜன்மம் (உத்பத்தி) என்பது எப்படிப் பொருந்தும்? என்னும் ஆக்ஷேபத்திற்கு—ஜன்மமென்றால் மனிதர்களைப்போல் கர்மானுஸாரமாய் பஞ்ச பூ(ஹ)தங்களால் புதியதாய் உண்டாகும் ஶரீர ஸம்பந்த(த)மல்ல. எப்பொழுதும் இருக்கும் அவனிட ஸ்வரூபத்தினாலேயே ப்ரத்யக்ஷமாவதே என்று ஸ்ரீ கிருஷ்ணன் சொல்லுகிறான் :—

(மூ)—அஜோபி ஸன்னவ்யயாத்மா பூ(ஹ)தானாமீஶ்வரோபி ஸன் ||
ப்ரக்ருதிம் ஸ்வாமதி(தி)ஷ்டாய ஸம்ப(ஹ)வாம்யாத்மமாயயா ||
|| 6 ||

(ப. உ.) அஜ:, அபி, ஸன், அவ்யயாத்மா, பூ(ஹ)தானாம், ஈஶ்வர: அபி, ஸன் | ப்ரக்ருதிம், ஸ்வாம், அதி(தி)ஷ்டாய, ஸம்ப(ஹ)வாமி, ஆத்மமாயயா ||

அஜ:, அபி = ஶரீரத்தினால் உத்பத்தியில்லாதவனாயினும்
அவ்யயாத்மா, ஸன், அபி = நாஶமற்ற தேஹமுடையவனாயிருப்பினும்
பூ(ஹ)தானாம் = ப்ராணிகளுக்கு
ஈஶ்வர:, (ஸன்), (அபி) = தலைவனாயிருப்பினும்
ஸ்வாம் = ஸ்வகீயமான (எனதாகிய)
ப்ரக்ருதிம் = ஸ்வபா(ஹா)வத்தை (அஸங்கத்வம் முதலானவைகளை)
அதி(தி)ஷ்டாய = ஆஶ்ரயித்துக் கொண்டே (அவதரித்த போதிலும் அஸங்கதம் முதலிய தர்மங்களை விடாமலே)
ஆத்மமாயயா = என் அறிவினால் (கர்மத்தாலல்லாமல்)
ஸம்ப(ஹ)வாமி = ப்ராது(உ)ர்ப(ஹ)விக்கிறேன் (ப்ரத்யக்ஷமாகிறேன்).

அவதரணிகை:—ஸ்ரீ கிருஷ்ணன் தான் அவதரிப்பதற்குக் காரணத்தைச் சொல்லுகிறான் :—

(மூ)—யதா(ஊா) யதா(ஊா) ஹி த(ய)ர்மஸ்ய க்(ஶ்ரீ)லாநிர் ப(ஹ)வதி பாரத ||
அப்யுத்தா(யா)ன மத(ய)ர்மஸ்ய ததா(ஊா)த்மானம் ஸ்ருஜாம்ய ஹம் || 7 ||

(ப: உ.) யதா(ஊா), யதா(ஊா), ஹி, த(ய)ர்மஸ்ய, க்லானி:, ப(ஹ)வதி, பா(ஹா)ரத || அப்யுத்தா(யா)னம், அத(ய)ர்மஸ்ய, ததா(ஊா), ஆத்மானம், ஸ்ருஜாமி, அஹம் ||

| | | | |
|---|---|---|---|
| பா(ஹா)ரத | = அர்ஜுனு! | ப(ஹ)வதி | = உண்டாகிறதோ |
| யதா(ஊா), யதா(ஊா) | = எந்தெந்த காலத்தில் | ததா(ஊா) | = அக்காலத்தில் |
| த(ய)ர்மஸ்ய | = தர்மத்திற்கு | அஹம் | = நான் |
| க்(ஶ்ரீ)லாணி: | = இழிவு (நாமம்) | ஆத்மானம் | = என்னை |
| ப(ஹ)வதி | = உண்டாகிறதோ | ஸ்ருஜாமி | = ஸ்ருஷ்டித்துக்கொள்ளுகிறேன். (நான் ப்ராதுர்பவிக்கிறேன்) |
| அத(ய)ர் மஸ்ய | = அதர்மத்திற்கு | | |
| அப்யுத்தா (யா)னம் | = அபிவ்ருத்தி (யி/யு) | ஹி | = ப்ரஸித்தம். |

அவதரணிகை:—பூர்ண காமனுனபடியால் தனக்கு யாதொரு ப்ரயோஜனமுமில்லாவிடினும், ஸஜ்ஜனர்களைக் காப்பாற்றுவதற்காகவே அவதரிக்கிறேன் என்று சொல்லுகிறுன்:—

(மூ)—பரித்ராணுய ஸாதூ(ய௵)னும் விநாஶாய ச து(ஊ)ஷ்க்ருதாம் ||
த(ய)ர்ம ஸம்ஸ்தா(யா)பனர்த்தா(யா)ய ஸம்ப(ஹ)வாமி யுகே (ஔ) யுகே(ஔ) || 8 ||

(ப. உ.) பரித்ராணுய, ஸாதூ(ய௵)னும், விநாஶாய, ச, து(ஊ)ஷ்க்ருதாம் | த(ய)ர்ம-ஸம்ஸ்தா(யா)பனர்த்தா(யா)ய, ஸம்ப(ஹ)வாமி, யுகே(ஔ), யுகே(ஔ) ||

| | | | |
|---|---|---|---|
| ஸாதூ (ய௵)னும் | = ஸாத்விகர்களின் | து(ஊ)ஷ் க்ருதாம் | = பாபிகளின் (தாமஸரின்) |
| பரித்ராணுய | = ரக்ஷணைக்காகவும் | விநாஶாய | = நாஶத்திற்காகவும் (அவர்களுக்கு தமஸ் |
| ச | = மற்றும் | | |

| | | | |
|---|---|---|---|
| | ஸுண்டாவதற்காகவும்) | யுகே(ஷே), யுகே(ஷே) | = ஒவ்வொரு யுகத்திலும் |
| த(ய)ர்ம- | = த(ய)ர்மத்தை | ஸம்ப(ஹ)வாமி | = அவதரிக்கிறேன். |
| ஸம்ஸ்தா(யா)பனார்த்தா(யா)ய | = நிலை நிருத்துவதற்காகவும் | | |

அவதரணிகை:—ஸ்ரீ கிருஷ்ணனுடைய ஜன்ம கர்மங்களை அறிந்தவனுக்கு ப(ஃ)லத்தைச் சொல்லுகிறான்:—

(மூ)—ஜன்ம கர்ம ச மே தி(ஃ)வ்யமேவம் யோ வேத்தி தத்வத: ||
த்யக்த்வா தே(ஷே)ஹம் புனர்ஜன்ம நைதி மாமேதி ஸோர்ஜுன || 9 ||

(ப. உ.) ஜன்ம, கர்ம, ச, மே, தி(ஃ)வ்யம், ஏவம், ய:, வேத்தி, தத்வத: | த்யக்த்வா, தே(ஷே)ஹம், புன:, ஜன்ம, ந, ஏதி, மாம், ஏதி, ஸ:, அர்ஜுன ||

| | | | |
|---|---|---|---|
| அர்ஜுன | = அர்ஜுனா! | | கிருஷ்ணனுடைய |
| ய: | = எவன் | ஸ: | = அவன் (என்னிடம் லோகவிலக்ஷணமான ஜன்ம கர்மங்களை அறிந்தவன்) |
| மே | = என்னுடைய | | |
| ஜன்ம | = அவதாரத்தையும் | | |
| ச | = மற்றும் | | |
| கர்ம | = கர்மத்தையும் | | |
| ஏவம் | = முன்சொல்லியவாறு | தே(ஷே)ஹம் | = சரீரத்தை |
| | | த்யக்த்வா | = விட்டு |
| தி(ஃ)வ்யம் | = ப்ரக்ருதி ஸம்பந்தமற்று லோகவிலக்ஷணமானவைகளென்றும் | புன: | = மற்றும் |
| | | ஜன்ம | = பிறப்பை |
| | | ந, ஏதி | = அடைவதில்லை. |
| | | மாம் | = என்னை |
| | | ஏதி | = அடைகிறான். (முக்தனாகிறான்). |
| தத்வத: | = நிஜமானவைகளென்றும் | | |
| வேத்தி | = தெரிந்துகொள் | | |

அவதரணிகை:—முன் சொல்லியவாறு ஞானமடைந்தவர்கள் பலத்தை அடைந்திருக்கிறார்களென்று சொல்லுகிறான்:—

(மூ)—வீதராக(ஃ)ப(ஃ)யக்ரோதா(யா) மன்மயா மாமுபா(ஶ்)ரிதா: ||
ப(வ)ஹவோ ஞானதபஸா பூதா மத்பா(ஹா)வ மாக(ஃ)தா: || 10 ||

(ப. உ.) வீத-ராக(ு)-ப(ஹ)ய-க்ரோதா:(யா:), மன்மயா:, மாம், உபா ஶ்ரிதா: | ப(ஹு)ஹவ:, ஞான-தபஸா, பூதா:, மத்பா(ஹா)வம், ஆகதா: ||

| | | | | |
|---|---|---|---|---|
| வீத- | = விடப்பட்ட | | ப(ஹு)ஹவ: | = அநேக ஜனங்கள் |
| ராக(ு)- | = ராகமென்ன | | ஞான- | = அறிவு மற்றும் |
| ப(ஹ)ய- | = ப(ஹ)யமென்ன | | தபஸா | = தபஸ்ஸு இவைகளால் |
| க்ரோ தா:(யா:) | = க்ரோதமென்ன இவைகளையுடைய | | பூதா: ஸந்த: | = ஶுத்த(ய)ராய் |
| மன்மயா: | = என்னையே உத்தமனுயுடையவர்கள் (ஸ்ரீ க்ருஷ்ணனே ஶ்ரேஷ்டனென்றறிந்திருப்பவர்கள்) | | மத்பா(ஹா)வம் (மயி பாவம்,) | = என்னிடத்தில் (பரமாத்மாவிடத்தில்) இருப்பை (மோக்ஷத்தை) |
| மாம் | = என்னை (ஸ்ரீ கிருஷ்ணனை) | | ஆக(ு)தா: | = அடைந்திருக்கிறார்கள். (ஸாயுஜ்ய லக்ஷணமோக்ஷத்தை அடைந்திருக்கிறார்கள்) |
| உபாஶ்ரிதா: | = ஆஶ்ரயித்திருக்கும் | | | |

(க. உ.) :—காமக்ரோதா(யா)திகளைத் துறந்து, பரமாத்மாவையே ஸர்வோத்தமனென்று அறிந்துகொண்டு, பரமாத்மாவையே ஆஶ்ரயித்துக்கொண்டிருக்கும் ஜனங்கள் இந்த ஞானமகிமையால் பரமாத்மாவில் ஸ்தி(யி)திரூபமாகிய (இருப்பென்னும்) ஸாயுஜ்ய ரூபமான மோக்ஷத்தை அடைந்திருக்கிறார்கள்.

விசாரம் :—"மன்மயா:" என்னும் பதத்திலிருக்கும் "மய" ஶப்தத்திற்கு ப்ரதா(யா)னமென்னும் அர்த்தமிருப்பதினால் "அஹம் மய: ப்ரதா(யா)ன: ஏஷாம் தே மன்மயா:" என்னும் விக்ரஹத்தினால் பரமாத்மாவே ப்ரதா(யா)னமாயுடையவரென்று அர்த்தம் செய்யப்பட்டிருக்கிறது.

ஶங்கராசார்யர் :—"மன்மயா:" என்னும் பதத்திற்கு "ப்ரஹ்மத(ு)ர்ஶின:" என்று அர்த்தம் செய்து, மற்றும் அதற்கு "ஈஶ்வராபே(ஹே)த(ு) த(ு)ர்ஶின:" ஜீவப்ரஹ்மாபேதமறிந்தவர்கள் என்று விவரித்திருக்கிறார். அது ஸரியானதல்ல. ஏனெனின்:— ஈஶ்வராபே(ஹே)த(ு)ஞானத்தை "ஈஶ்வரோஹம்" (கீதா 16-14)

என்னும் ச்லோகத்தில் ஆஸுர (தாமஸரின்) ஸ்வபா(ஹா)வ மென்று நிந்தித்திருப்பதினாலும், தானே ஈச்வரனென்னும் ஞானத்தினால் தமஸ்ஸுண்டாகிறது, மோக்ஷமுண்டாவதில்லை என்று. சொல்லியிருக்கிறபடியாலும், கீதா கர்த்தாவாகிய ஸ்ரீ கிருஷ்ணனுக்கு சங்கராசார்யரால் செய்யப்பட்டிருக்கும் அர்த்தம் அஸம்மதமானது, மற்றும் விருத்தமுமானது. 'மன்மயா:' என்னும் பதத்திற்கு அந்த அர்த்தம் ஆவதுமில்லை. ஆகையால் 'மன்மயா:' என்னும் பதத்திற்கு "ஈச்வராபே(ஹே)த(ஷ) த(ஷ)ர்சின:" என்னும் சங்கராசார்யரின் விவரணம் அங்கீகரிக்கத்தக்கதல்ல.

"மத்பா(ஹா)வமாக(ஃ)தா:" என்னும் பதத்திற்கு "மயி பா(ஹா)வம் மத்பாவம்" என்று பதத்தைப் பிரித்து, மயி=பரமாத்மாவில், பா(ஹா)வம்=ஸ்தி(யி)தியை, அடைகிறனென்று அர்த்தமாகிறபடியால், பரமாத்மாவிடத்தில் ஸ்தி(யி)திரூபமான ஸாயுஜ்ய மோக்ஷத்தை அடைகிறன் என்று அர்த்தம் செய்யப்பட்டிருக்கிறது. ஸ்ரீத(ய)ரஸ்வாமி முதலான அத்வைதிகள் "மத்பா(ஹா)வம்=மத்ஸாயுஜ்யம், ப்ராப்தா:" என்று அர்த்தம் செய்திருக்கிறார்கள். இந்த அர்த்தத்தையே ஸ்ரீ கிருஷ்ணனும் "நிவஸிஷ்யஸி மய்யேவ" (கீதா 12-8) என்னும் ச்லோகத்தில், ஞானி பரமாத்மாவில் ஸ்தி(யி)தியை=இருப்பை அடைகிறன் என்று வெளிப்படையாகச் சொல்லியிருப்பதால் இந்த அர்த்தமே ப்ராமாணிகமானது. 3-2-6-வது ப்ரஹ்மஸூத்ரத்தின் வ்யாக்யானமான "வேதாந்த கல்பதரு" என்னும் அத்வைத க்ரந்த(ம)த்தில் "ஸகுணப்ரஹ்மோபாஸன ப(ஃ)லம் ஈச்வர ஸாயுஜ்யம் ஹி......பே(ஹே)தாச்ரயத்வாத்" என்று சொல்லியிருப்பதால், ஸாயுஜ்ய மோக்ஷமென்றால் பரமாத்மாவைவிட வேறாக, பரமாத்மாவுடன் கூடியிருப்பதேயல்லாது பரமாத்மாவுடன் ஐக்யமல்ல.

(மூ)—யே யதா(யா) மாம் ப்ரபத்யந்தே தாம் ஸ்ததை(யை)வ ப(ஃ)ஜாம்யஹம் ||
மம வர்த்மாநுவர்த்தந்தே மனுஷ்யா: பார்த்த(ம) ஸர்வஶ: ||11||

(ப. உ.) யே, யதா(யா), மாம், ப்ரபத்(தி)யந்தே, தான், ததா(யா), ஏவ, ப(ஃ)ஜாமி, அஹம் | மம, வர்த்ம, அனுவர்தந்தே, மனுஷ்யா:, பார்த்த(ம), ஸர்வஶ: ||

யே = யார்
யதா(யா) = எவ்விதமாக
மாம் = என்னை (கிருஷ்ணனை)
ப்ரபத்(தீ) யந்தே = அடைகிறார்களோ (பஜிக்கிறார்களோ)
தான் = அவர்களை
ததா(யா) ஏவ = அவரிடசேவையை அனுசரித்தே
அஹம் = நான் (ஸ்ரீ கிருஷ்ணன்)
ப(ஃ)ஜாமி = பஜிக்கிறேன்.
(அவர்களிட சேவையையனுசரித்துஸ்வர்க்க மோக்ஷாதி பலன்களைக்கொடுக்கிறேன்.)
பார்த்த = அர்ஜுனா!
ஸர்வஶ: = எல்லா
மனுஷ்யா: = மனிதர்களும்
மம = என்னுடைய
வர்த்ம = மார்க்கத்தை (வழியை)
அனுவர்தந்தே = அனுஸரிக்கிறார்கள்.

அவதரணிகை:—ஸகல ப(ஃ)லங்களையும் கொடுக்கும் உன்னை (ஸ்ரீ கிருஷ்ணனை)க் குறித்து கர்மங்களைச் செய்யாமல், இதர தேவதைகளைக் குறித்து ஏன் கர்மங்களைச் செய்கிறார்கள்? என்னும் ஶங்கைக்குப் பதில் அளிக்கிறான்:—

(மூ)—காங்க்ஷந்த: கர்மணாம் ஸித்தி(யி)ம் யஜந்த இஹ தே(ஷே)வதா:
க்ஷிப்ரம் ஹி மானுஷே லோகே ஸித்தி(யி)ர் ப(ஃ)வதி கர்
மஜா ‖ 12 ‖

(ப. உ.) காங்க்ஷந்த:, கர்மணாம், ஸித்தி(யி)ம், யஜந்தே, இஹ, தே(ஷே)வதா: | க்ஷிப்ரம், ஹி, மானுஷே, லோகே, ஸித்தி: (யி:), ப(ஃ)வதி கர்மஜா ‖

கர்மணாம் = கர்மங்களின்
ஸித்தி(யி)ம் = ப(ஃ)லத்தை
க்ஷிப்ரம் = ஶீக்ரமாய்
காங்க்ஷந்த: = அபேக்ஷிக்கும் ஜனங்கள்
இஹ = இவ்வுலகில்
தே (ஷே) வதா: = என்னைவிடவேறான இந்த்ராதி தேவர்களை
யஜந்தே = யாகாதிகளால் பூஜிக்கின்றனர்.
ஹி = ஏனெனின்
மானுஷே, லோகே = மனுஷ்ய லோகத்தில்
கர்மஜா = இதர தேவதையின் உத்தேஶமாய்ச் செய்த கர்மங்களினுண்டாகும்
ஸித்தி(யி): = ப(ஃ)லமானது
க்ஷிப்ரம் = ஶீக்ரத்தில்
ப(ஃ)வதி = கிடைக்கிறது.

(க. உ.) :—"அந்தவத்து ப(ஃ)லம் தேஷாம்" (7-23) என்னும் ஶ்லோகத்தில் சொல்லியுள்ளவாறு அன்ய தேவர்களின் உத்தேஶ்யமாய்ச்செய்யப்பட்ட கர்மங்களினால் கிடைக்கும் ப(ஃ)லம் நாஶமடையக் கூடியதாயினும், அற்பமாயினும், ஶீக்ரத்தில் கிடைக்கும் என்னும் ஆஶையினால் அன்னிய தேவதைகளின் பொருட்டு கர்மங்களைச் செய்கின்றனர்.

அவதாரிகை :—பரமாத்மாவின் ஸ்வரூபத்தை நிரூபிக்கின்றனன்:—

(மூ)—சாதுர்வர்ண்யம் மயா ஸ்ருஷ்டம் கு(ஃ)ணகர்ம விபா(ஹா) க(ஃ)ஶ: ||
தஸ்ய கர்த்தாரமபி மாம் வித்(யி) யகர்தாரமவ்யயம் || 13 ||

(ப. உ.) சாதுர்வர்ண்யம், மயா, ஸ்ருஷ்டம், கு(ஃ)ணகர்மவிபா(ஹா) க(ஃ)ஶ: | தஸ்ய, கர்தாரம், அபி, மாம், வித்தி(யி), அகர்தாரம், அவ்யயம் ||

| | | | |
|---|---|---|---|
| மயா | = என்னால் (ஸ்ரீ கிருஷ்ணனால்) | அவ்யயம் | = நாஶமற்ற |
| சாதுர்வர்ண்யம் | = ப்ராஹ்மண, க்ஷத்ரிய, வைஶ்ய, ஶூத்ர ரென்னும் நான்கு வர்ணங்களின் கூட்டம் | மாம் | = என்னை |
| | | தஸ்ய | = அந்த நான்கு வர்ணங்களின் |
| | | கர்தாரம் | = கர்தாவாக |
| | | வித்தி(யி) | = தெரிந்து கொள். |
| குணகர்ம விபா(ஹா) க(ஃ)ஶ: | = பரஸ்பரம் வெவ்வேறான அவரவரிட குணங்களுடனும் கர்மங்களுடனும் கூடியதாய் | அகர்தாரம் (நவித்யதே கர்தா யஸ்ய தம்) அபி | = கர்த்தா இல்லாதவனும் (பரமாத்மாவை ஸ்ருஷ்டிப்பவனில்லை, பிறப்பற்றவன் என்றும்) |
| ஸ்ருஷ்டம் | = ஸ்ருஷ்டிக்கப் பட்டிருக்கிறது | வித்தி(யி) | = தெரிந்து கொள். |

(மூ)—ந மாம் கர்மாணி லிம்பந்தி ந மே கர்மப(ஃ)லே ஸ்ப்ருஹா ||
இதி மாம் யோபி(அ)ஜானாதி கர்மபி(அ)ர்ந ஸ ப(ப)த்(யி) யதே || 14 ||

(ப. உ.) ந, மாம், கர்மாணி, லிம்பந்தி, ந, மே, கர்மப(ஃ)லே, ஸ்ப்ருஹா | இதி, மாம், ய:, அபி(ஹி)ஜாநாதி, கர்மபி:(ஹி:), ந, ஸ:, ப(ப)த்(ய)யதே ||

| | | | |
|---|---|---|---|
| கர்மாணி | = கர்மங்கள் | கர்மப(ஃ)லே | = கர்மத்தினுண்டாகும் பலத்தில் |
| மாம் | = என்னை | ஸ்ப்ருஹா | = அபேக்ஷை |
| ந, லிம்பந்தி | = ஸம்ப(ப)ந்தப்படுவதில்லை. (ஜகத் ஸம்ஹாராதிவ்யாபாரத்தினால் எனக்கு பாபமுண்டாவதில்லை. ரக்ஷணாதிகளால் புண்யமுண்டாவதில்லை என்றால் நான் ஸம்பந்தமற்றவன் நிர்லிப்தன்) | ந | = இல்லை. |
| | | இதி | = இவ்விதமாக |
| | | மாம் | = என்னை (ஸ்ரீ கிருஷ்ணனை) |
| | | ய: | = எவனொருவன் |
| | | அபி(ஹி) ஜாநாதி | = ஸரியாக தெரிந்துகொள்கிறானோ |
| | | ஸ: | = அவன் |
| | | கர்மபி:(ஹி:) | = கர்மங்களினால் |
| மே | = எனக்கு | ந, ப(ப)த்(ய)யதே | = கட்டப்படுவதில்லை. |

(க. உ.) :—பரமாத்மாவுக்கு கர்மலேபமில்லை என்று எவன் தெரிந்துகொள்கிறானோ, அவனுக்கும் அந்த ஞானத்தின் ஸாமர்த்யத்தினால் பாபங்களின் ஸம்பந்தமாவதில்லை. (முக்தனாகின்றான்)

(மூ)—ஏவம் ஜ்ஞாத்வா க்ருதம் கர்ம பூர்வைரபி முமுக்ஷுபி:(ஹி:) ||
குரு கர்மைவ தஸ்மாத் த்வம் பூர்வை: பூர்வதரம் க்ருதம்
|| 15 ||

(ப. உ.) ஏவம், ஜ்ஞாத்வா, க்ருதம், கர்ம, பூர்வை:, அபி, முமுக்ஷுபி.: (ஹி:) | குரு, கர்ம, ஏவ, தஸ்மாத், த்வம், பூர்வை:, பூர்வதரம், க்ருதம். ||

| | | |
|---|---|---|
| முமுக்ஷுபி:(ஹி): | = மோக்ஷத்தில் அபேக்ஷையுடைய | கர்மப(ஃ)லங்கள் கிடையாது கர்மப(ஃ)லாபேக்ஷையுமில்லை என்று முன்பு லோகத்தில் சொல்லியிருக்கிற வாறு |
| பூர்வை:, அபி | = பூர்விகரான ஜனகப்ரியவ்ரதாதி அரசர்களாலும் | |
| ஏவம் | = பரமாத்மாவுக்கு | |

| | |
|---|---|
| ஜ்ஞாத்வா | = தெரிந்துகொண்டு |
| கர்ம | = கர்மம் |
| க்ருதம் | = செய்யப்பட்டிருக்கிறது. |
| தஸ்மாத் | = ஆகையால் |
| த்வம் | = நீ |
| பூர்வை: | = முன்னோர்களால் |
| பூர்வதாம் | = வெகு காலத்திற்கு முன்னிருந்து |
| க்ருதம் | = செய்யப்பட்ட |
| கர்ம | = கர்மத்தை |
| குரு ஏவ | = செய்தே தீரவேண்டியது. |

(மூ)—கிம் கர்ம கிமகர்மேதி கவயோப்யத்ர மோஹிதா: ||
தத்தே கர்ம ப்ரவக்ஷ்யாமி யஜ்ஞ்யாத்வா மோக்ஷ்யஸேஶுபா (ஶா)த் ||16||

(ப. உ.) கிம், கர்ம, கிம், அகர்ம, இதி, கவய:, அபி, அத்ர, மோஹிதா:| தத், தே, கர்ம, ப்ரவக்ஷ்யாமி, யத், ஞாத்வா, மோக்ஷ்யஸே, அஶுபாத்||

| | |
|---|---|
| கர்ம | = ஸத்கர்மம் |
| கிம் | = எது? |
| அகர்ம | = கர்மமின்மை மற்றும் விருத்தமான கர்மம் |
| கிம் | = எது? |
| இதி | = என்று |
| அத்ர | = இந்த கர்மத்தின் விஷயத்தில் |
| கவய:, அபி | = ஞானிகளும் |
| மோஹிதா: | = ஸம்ஶயாதிகளுடன் கூடியவராயிருக்கின்றார்கள். |
| தத் (தஸ்மாத்) | = அக்காரணத்தினால் |
| யத் | = எந்த கர்மத்தை |
| ஞாத்வா | = தெரிந்துகொண்டு (அவ்வாறு நடந்து) |
| அஶுபா (ஶா)த் | = அமங்களமான ஸம்ஸார கட்டினின்றும் |
| மோக்ஷ்யஸே | = முக்தனாவாயோ |
| தத் | = அந்த |
| கர்ம | = கர்மத்தை |
| தே | = உனக்காக |
| ப்ரவக்ஷ்யாமி | = சொல்லுகிறேன். |

(மூ)—கர்மணோஹ்யபி போ(வோ)த்த(ய)வ்யம் போ(வோ)த்த(ய)வ்யம் ச விகர்மண: ||
அகர்மணஶ்ச போ(வோ)த்த(ய)வ்யம் க(ம)ஹனா கர்மணோ க(ம)தி: || 17 ||

(ப. உ.) கர்மண:, ஹி, அபி, போ(வோ)த்த(ய)வ்யம், போ(வோ)த்த(ய)வ்யம், ச, விகர்மண:| அகர்மண:, ச, போ(வோ)த்த(ய)வ்யம், க(ம)ஹனா, கர்மண:, க(ம)தி: ||

| | |
|---|---|
| கர்மண: | = கர்மத்தின் |
| (தத்வம்)அபி | = தத்வத்தையும் (ஸ்வரூபத்தையும்) |
| போ(வோ) த்த(ய) வ்யம் | = தெரிந்துகொள்ள வேண்டும். |
| ச | = மற்றும் |
| விகர்மண: | = விருத்த(ம)மான கர்மத்தின் |
| (தத்வம்) | = தத்வத்தையும் |
| (போ)த்த (ய)வ்யம் | = தெரிந்துகொள்ள வேண்டும். |
| அகர்மண: | = கர்மாபா(ஶா)வத்தின் (கர்மப் செய்யாமலிருப்பதின்) |
| (தத்வம்) ச | = தத்வத்தையும் |
| போத்தவ் யம் | = தெரிந்துகொள்ள வேண்டும் |
| கர்மண: | = கர்மத்தின் |
| க(ம)தி: | = ஞானம் |
| க(ம)ஹநா | = க(ம)ஹனமானது. (சாதாரணமாய் அறிய முடியாதது.) |

(மூ)—கர்மண்யகர்ம ய: பஶ்யேத(௪)கர்மணி ச கர்ம ய: ||
ஸ புத்தி(யி)மான் மனுஷ்யேஷு ஸ யுக்த: க்ருத்ஸ்ன கர்ம க்ருத் || 18 ||

(ப. உ.) கர்மணி, அகர்ம, ய:, பஶ்யேத், அகர்மணி, ச, கர்ம, ய: | ஸ: புத்தி(யி)மான், மனுஷ்யேஷு, ஸ:, யுக்த:, க்ருத்ஸ்ன-கர்ம-க்ருத் ||

| | |
|---|---|
| கர்மணி | = வர்ணாஶ்ரமத்திற்குத் தகுந்த கர்மம் |
| (க்ரியமாணே), (அபி) | = தன்னால் செய்யப்பட்டுக்கொண்டிருந்தாலும் |
| அகர்ம | = கர்மாபா(வா)வத்தை (நான் சுதந்திர கர்த்தா அல்லவென்று) |
| ய: | = எவன் |
| பஶ்யேத் | = காண்கிறானோ |
| ச | = மற்றும் |
| ய: | = எவன் |
| அகர்மணி | = தான் கர்மத்தைச் செய்யாமலிருக்கும் நித்ராதி காலத்தில் |
| கர்ம | = ஈஶ்வரனின் வ்யாபாரத்தை |
| பஶ்யேத் | = காண்கிறானோ |
| ஸ: | = அவன் |
| மனுஷ்யேஷு | = மனிதர்களில் |
| புத்தி (யி) மான் | = புத்தியுடையவன். |
| ஸ: | = அவன் |
| யுக்த: | = ஞானோபாயத்தையுடையவன் |
| ஸ: | = அவன் |
| க்ருத்ஸ்ன- | = ஸகலமான |
| கர்ம- | = கர்மங்களை |
| க்ருத் | = செய்பவன்(அ[illegible]த கர்மப[ல]லத்தை அடைந்தவனாகிறான்.) |

(மூ)—யஸ்ய ஸர்வே ஸமாரம்பா:(ஹா:) காம-ஸங்கல்ப-வர்ஜிதா: ||
ஞானக்னி-த(ஃ)க்(தீ)த(ய)கர்மாணம் தமாஹு: பண்டிதம்
பு(ஹு)தா:(யா:) || 19 ||

(ப. உ.) யஸ்ய, ஸர்வே, ஸமாரம்பா:(ஹா:), காம-ஸங்கல்ப-வர்ஜிதா:| ஞானக்னி-த(ஃ)க்(தீ)த(ய)-கர்மாணம், தம், ஆஹு:, பண்டிதம், பு(ஹு)தா (யா:)||

| | |
|---|---|
| யஸ்ய | = எந்த மனிதனின் |
| ஸர்வே | = ஸமஸ்தமான |
| ஸமாரம்பா:(ஹா:) | = கர்மங்களின் ஆரம்பங்கள் |
| காம- | = ப(ஹ)லாபேக்ஷை |
| ஸங்கல்ப- | = மக்களுண்டாவதற்காக இந்த கர்மங்களைச் செய்கிறேன், ஸ்வர்கத்திற்காக இந்த கர்மங்களைச் செய்கிறேன் என்னும் எண்ணம் இவைகளால் |
| வர்ஜிதா: | = விடப்பட்டிருக்கின்றனவோ, |
| தம் | = அந்த மனிதனை |
| பு(ஹு)தா:(யா:) | = ஞானிகள் |
| ஞான- | = ஞானமென்னும் |
| அக்(தீ)னி- | = நெருப்பினால் |
| த(ஃ)க்த(ய)- | = நாசம் செய்யப்பட்ட |
| கர்மாணம் | = கர்மங்களையுடைய |
| பண்டிதம் | = தத்வ ஜ்ஞானி |
| (இதி) | = என்று |
| ஆஹு: | = சொல்லுகிறார்கள். |

(மூ)—த்யக்த்வா கர்மப(ஹ)லாஸங்க(ஹ)ம் நித்யத்ருப்தோ நிராஶ்ரய: ||
கர்மண்யபி(ஹி)ப்ருவருத்தோபி நைவ கிஞ்சித் கரோதி ஸ: ||20||

(ப. உ.) த்யக்த்வா, கர்மப(ஹ)லாஸங்க(ஹ)ம், நித்யத்ருப்த:, நிராஶ்ரய:| கர்மணி, அபி(ஹி)ப்ரவ்ருத்த:, அபி, ந, ஏவ, கிம், சித், கரோதி, ஸ: ||

| | |
|---|---|
| (ய:) | = எவன் |
| கர்ம- | = கர்மங்களிலும், |
| ப(ஹ)ல- | = கர்மங்களால் உண்டாகும் ப(ஹ)லங்களிலும் |
| அஸங்க(ஹ)ம் | = நேசத்தை |
| த்யக்த்வா | = விட்டு |
| நித்ய- | = எப்பொழுதும் |
| த்ருப்த: | = போதும் என்கிற புத்தியுடையவனை |
| நிராஶ்ரய: | = யோக க்ஷேமங்களுக்காக (இல்லாததை ஸம்பாதிப்பதற்காகவும், இருந்ததைக் காப்பாற்றிக்கொள்வதற்காகவும்) மற்றொருவரை ஆஶ்ரயிப்பதில்லையோ |

| | | | |
|---|---|---|---|
| ஸ: | = அம்மனிதன் | | தை அபேக்ஷிக்காமலிருப்பதினால், கர்மத்தை செய்தாலும், கர்மத்தின் து(ஷ்)ஷ்டப(ஃ)லரூபமான ஸம்ஸாரத்தை அடையாதவனே ஆகிறான். |
| கர்மணி | = கர்மத்தைச் செய்வதில் | | |
| அபி(ஹி)ப்ர வ்ருத்த: அபி | = ஆஸக்தனாயினும் (கர்மம் செய்யினும்) | | |
| கிஞ்சித் | = எந்த கர்மத்தையும் | | |
| ந, கரோதி ஏவ | = செய்யாதவனே கர்மப(ஃ)லத் | | |

(மூ)—நிராஶீர்யத சித்தாத்மா த்யக்த-ஸர்வ-பரிக்(க்ரீ)ரஹ: ||
ஶாரீரம் கேவலம் கர்ம குர்வன்னாப்னோதி கில்பி(வி)ஷம் ||21||

(ப. உ.) நிராஶீ:, யத-சித்தாத்மா, த்யக்த-ஸர்வ-பரிக்(க்ரீ)ரஹ: | ஶாரீரம், கேவலம், கர்ம, குர்வன், ந, ஆப்னோதி, கில்பி(வி)ஷம் ||

| | | | |
|---|---|---|---|
| யத | = ஸ்வாதீ(யீ)னமான | | ஸாதனங்களையுடையவன் |
| சித்த- | = சித்தம் | கேவலம் | = கேவலமாய் (வெறும்) |
| ஆத்மா | = மனது இவைகளையுடைய | ஶாரீரம் | = தேஹ ஸம்ரக்ஷணைக்கு (மாத்ரம்) உபயுக்தமான |
| நிராஶீ: | = [மனது ஸ்வாதீ(யீ)னத்திலிருப்பதினால்] காமமற்றவனாய் (ஆசையற்றவனாய்) | கர்ம | = கர்மத்தை |
| | | குர்வன், (ஸன்) | = செய்கிறவனாய் |
| த்யக்த- | = துறந்த | கில்பி(வி)ஷம் | = பாவத்தை |
| ஸர்வ- | = ஸகல | ந ஆப்னோதி | = அடைவதில்லை. |
| பரிக்(க்ரீ)ரஹ: | = போகங்களின் | | |

(மூ)—யத்(த்ரு)ருச்சா(ஸா)லாப(ஹ) ஸந்துஷ்டோ த்(த்)வந்த்(த்)வாதீதோ விமத்ஸர: ||
ஸம: ஸித்தா(யா)வஸித்தௌ(யௌ) ச க்ருத்வாபி ந நிப(ப)த்(யீ)யதே || 22 ||

(ப. உ.) யத்(த்ரு)ருச்சா(ஸா)-லாப(ஹ)-ஸந்துஷ்ட:, த்(த்)வந்த்(த்)வாதீத:, விமத்ஸர: | ஸம:, ஸித்தௌ(யௌ), அஸித்தௌ(யௌ), ச, க்ருத்வா, அபி, ந, நிப(ப)த்(யீ)யதே ||

யத்(௩)ருச்சா(௪)- லாப(௨)- = ப்ரயத்னமில்லாமலே கிடைத்த விஷயங்களால்
ஸந்துஷ்ட: = ஸந்தோஷமுள்ள
த்(௩)வந்த்(௩)வாதீத: = த்வந்த்வங்களால் ரஹிதனாய் (ஸுகதுக்காதிகளைக் கடந்தவனாய்) [த்வந்த்வங்கள் விவரிக்கப்படுகிறது:—
ஸித்தௌ (யௌ) = ப(௨)லம் கிடைத்தபோதிலும்
அஸித்தௌ (யௌ), ச = ப(௨)லம் கிடைக்காமற்போயினும்
ஸம: = ஸமனாய் (ஸுகதுக்கங்களையடையாமல்)
விமத்ஸர: = மாத்ஸர்யம் (பொறாமை) அற்ற மனிதன்
(கர்மாணி) = கர்மங்களை
க்ருத்வா, அபி = செய்த போதிலும்
ந, நிப(௩)த்(௪)யதே = கர்மங்களினால் கட்டப்படுவதில்லை.

(மூ)—க(௩)தஸங்க(௩)ஸ்ய முக்தஸ்ய ஞானாவஸ்தி(௪)த சேதஸ: ||
யஜ்ஞாயாசரத: கர்ம ஸமக்(௩)ரம் ப்ரவிலீயதே || 23 ||

(ப. உ.) க(௩)த-ஸங்க(௩)ஸ்ய, முக்தஸ்ய, ஞானாவஸ்தி(௪)த-சேதஸ: | யஜ்ஞாய, ஆசரத:, கர்ம, ஸமக்(௩)ரம், ப்ரவிலீயதே ||

க(௩)தஸங்க(௩)ஸ்ய = ப(௨)லஸ்னேஹமற்றவனும்
முக்தஸ்ய = தேஹாதிகளில் அபிமானத்தை துறந்தவனும்
ஞான- = பரமாத்மாவின் ஞானமுண்டாவதற்காக
அவஸ்தி(௪)த = ஆஸக்தமான
சேதஸ: = மனதுடையவனும்
யஜ்ஞாய = ஸ்ரீபரமாத்மாவின் பொருட்டே
கர்ம = யஜ்ஞாதி கர்மங்களை
ஆசரத: = செய்யும் மனிதனின்
ஸமக்(௩)ரம் (கர்ம) = ஸகலமான கர்மங்களும்
ப்ரவிலீயதே = நாசமடைகின்றன. (ஸம்ஸாரபந்தங்களை உண்டாக்குவதில்லை.)

(மூ) ப்ரஹ்மார்பணம் ப்ரஹ்ம ஹவிர் ப்ரஹ்மாக்(௩)னௌ ப்ரஹ்மணா ஹுதம் ||
ப்ரஹ்மைவ தேந க(௩)ந்தவ்யம் ப்ரஹ்மகர்ம ஸமாதி(௪)னா || 24 ||

(ப. உ.) ப்ரஹ்ம, அர்பணம், ப்ரஹ்ம, ஹவி:, ப்ரஹ்ம, அக்னௌ, ப்ரஹ்மணு, ஹுதம் | ப்ரஹ்ம, ஏவ, தேன, க(ம)ந்தவ்யம், ப்ரஹ்ம, கர்ம, ஸமாதி(யி)னு ||

| | | | |
|---|---|---|---|
| அர்பணம் அர்ப்யதே அனேன இதி | = யாகங் களுக்கு ஸாத(ய) னமான பாத்ரங்கள் | ப்ரஹ்மணு | = பரமாத்மாவினுல் |
| ப்ரஹ்ம | = பரமாத்மாதீனம். | திஷ்டதி | = இருக்கிறது (பரமாத்மாவின் அதீனமானது) |
| ஹவி: | = ஹவிஸ்ஸு (தேவதைகளுக்காக அக்னியில் கொடுக்கும் அன்னுதிகள்) | ஸமாதி(யி)னு (ஸஹ) | = ஸமாதி(யி) யுடன்கூடிய |
| | | கர்ம | = கர்மம் |
| ப்ரஹ்ம | = பரமாத்மாதீனம். | ப்ரஹ்ம | = பரமாத்மாவின் அதீனம் |
| | | (இதி) | = இவ்வாறு |
| அக்(நீ) னௌ | = அக்னியில் | (மாம்) | = என்னை (பரமாத்மாவை) |
| ப்ரஹ்ம | = பரமாத்மா | (ய:) | = எவன் |
| (திஷ்டதி) | = நியாமகனுயிருக்கிருன். | (அபி[ஜா] ஜானுதி) | = தெரிந்துக்கொள்கிருனே |
| ஹுதம் | = ஹோமம் செய்யப்பட்ட பொருள் | தேன, ஏவ | = அவனுலேயே |
| | | ப்ரஹ்ம | = பரமாத்மா |
| | | க(ம)ந்தவ்யம் | = அடையப் படுபவன். |

(க. உ.):—கர்மம், கர்மங்களுக்கு அங்கங்களான ஸ்ருக், ஸ்ருவ, த(ரு)ர்வீ முதலிய பதார்த்தங்கள், அக்னி, ஸமாதி, இவைகளெல்லாம் பரமாத்மாவின் (க்ருஷ்ணனின்) அதீனமானவைகள், என்று எவனொருவன் தெரிந்துகொண்டு கர்மங்களைச் செய்கின்ருனே அவன் பரமாத்மாவை அடைகிருன். (முக்தனுகிருன்).

விசாரம் :—இந்த ஶ்லோகத்தில் "அர்பணம் ப்ரஹ்ம, ஹவி: ப்ரஹ்ம," என்று ஹவிஸ்ஸு முதலிய யஜ்ஞஸாதன பதார்த்தங்களுக்கு ப்ரஹ்மத்தோடு அபேதத்தை (ஐக்யம்) சொல்வதைப் போல் தோன்றினும்—ஜடங்களான, ஜன்யங்களான (பிறப்பவைகளான) கர்மங்களுக்கு ப்ரஹ்மத்தோடு அபேதம் (ஐக்யம்) பொருந்தாததினுல், "ராஜ்யம் ராஜனிட அதீனம்" என்னும் அபிப்ராயத்

தினுல், எப்படி "ராஜா ராஷ்டரம்=ராஜனே ராஜ்யம்" என்று இது முதலிய வார்த்தைகளை வழங்குகிறுர்களோ, அப்படியே இங்கும் ஹவிஸ்ஸு முதலியவைகளெல்லாம் பரமாத்மாவின் அதீன மென்று சொல்லப்பட்டிருக்கிறதென்றறியவேண்டும்.

மற்றும்—இந்த ஶ்லோகத்திலேயே 'ப்ரஹ்மணு ஹுதம்' 'அக்(ஞ்)னௌ ப்ரஹ்ம' என்று பேதத்தைஅறிவிக்கும் மூன்றுவது ஏழாவது வேற்றுமைகளிருப்பதினுல் மேன்மேல் அபேதத்தைச் சொல்வதுபோல் தோன்றும் 'ப்ரஹ்மார்பணம்' முதலிய பதங்களுக்கு 'அர்பணம்' என்றுல் யஜ்ஞஸாதனமான ஶ்ருக்ஶ்ருவாதிகள் ப்ரஹ்மாதீனமென்று அர்த்தம் செய்யவேண்டும். ஶங்கராசார்யரும் "த(ய)ர்மாவிருத்தோ(யோ) பூ(ஐ)தேஷு காமோஸ்மி ப(ஐ)ரதர்ஷப(ஐ)" (கீ. 7-11) என்னும் ஶ்லோகத்தின் வ்யாக்யானத்தில், காமம் பாதந்த்ரமும், ஜன்யமுமானதினுல், காமத்திற்கு பரமாத்மாவுடன் அபேதத்தைச் சொன்னுல் பரமாத்மாவுக்கு பாரதந்த்ர்யமும், ஜன்யத்வமும் உண்டாய், ஸ்வாதந்த்ர்யம், அஜுதித்வம், இவைகள் போகவேண்டி வருவதினுல் காமத்திற்கு ஈஶ்வராதீனத்வத்தைச் சொல்லவேண்டுமென்று 3-14-2 வது சா(ஊ)ந்தோக்ய பாஷ்யத்தில் * வ்யாக்யானம் செய்திருக்கிறுர்.

மற்றும் ஸகல இந்த்ரியங்களும் ப்ராணரூபங்களே ஆயினவென்று சொல்வதைப்போல் தோன்றும் "ஸர்வே ரூபமப(ஐ)வன்" (ப்ரு. 1-6-21) என்னும் ஶ்ருதிக்கு முன்பின் ஶ்ருதிகளில் ப்ராணத்திற்கு இந்த்ரியங்களோடு பே(ஊ)தம் சொல்லப்பட்டிருக்கிறது. ப்ராணம், இந்த்ரியங்கள், இவைகளில் விருத்த தர்மங்களிருக்கின்றன. ஆகையால் ஸகல இந்த்ரியங்களும் ப்ராணரூபங்களாயிருப்பவைகள் என்னும் அர்த்தம் பொருந்தாதினுல்

* 'த(ய)ர்மா விருத்தோ(யோ) பூ(ஐ)தேஷு காமோஸ்மி' இதி ஸ்ம்ருதே:| நனு காமோஸ்மீதி வசனுதி(ஞ்)ஹ ப(ப)ஹுவ்ரீஹிர்ந ஸம்ப(ஐ)வதி ஸர்வகாம இதி ந காமஸ்ய கர்த்தவ்யத்வாச்ச(ஊ)ப்தா(ஏ)தி(ஞ்)வத்பாரார்த்ய ப்ரஸங்கா(ஶ)ச்ச தே(ஏ)வஸ்ய | தஸ்மாத்யதே(யே)ஹ பஹுவ்ரீஹிஸ்ததா(யா) காமோஸ்மீதி ஸ்ம்ருத்யர்தோ(யோ)வாச்ய; (சாந்-சங். பாஷ்யம்)

ப்ராணாதீனங்களா யிருப்பவைகளென்னும் அர்த்தத்தைச் செய்ய வேண்டுமென்று, 2-4-17, 19 * ப்ரஹ்மஸூத்ர ஶங்கரபா(ஷா)ஷ்யத்திலும் அதற்கு வ்யாக்யானமான † பா(ஷா)மதியிலும் சொல்லப் பட்டிருக்கிறது. இதின் விஶேஷ விஷயங்களை வேதாந்த விசாரணையில் ஸூட் 3-வது இஷ்யூவின் 232-வதுபக்கத்தில் பார்க்கவும்.

---

* உதா(ஹா)ஹ்ருதாம் ஸ்ம்ருதிமாஶ்ரித்யோக்தமாக்ஷிபதி—நன்விதி | காமஸாமாநாதி(தி)கரண்யே பா(பா)த(ய)கோபலம்பா(ஷா)த்(த்)ப(ப)ஹூவ்ரீஹிரேவேதி பரிஹரதி—ந காமஸ்யேதி | தஸ்ய கார்யத்வாத்ததை(தை)க்யே ப்ரஹ்மணோநாதி(தி)த்வம் பா(பா)த்யதே சேதனஶேஷத்வாச்ச காமஸ்ய ததை(தை)க்யே ப்ரஹ்மண: ஸ்வாதந்த்ர்யம் ஹீயதே. ததா(யா) ச கர்மதா(யா)ரயாஸம்ப(ப)வாத்(த்)ப(ப)ஹூவ்ரீஹி ரேவேத்யர்த்த: (ய:) | கத(ய)ம் தர்ஹி காமோஸ்மீதி தாதா(தா)த்ம்யஸ்ம்ருதிரித்யாஶங்க்யாஹ—தஸ்மாதி(தி)தி| காமேஶ்வரயோஸ்ஸாமாநாதி(தி)கரண்யாஸம்ப(ப)வாத் ப்ராக்ருத ஶ்ருதௌ ப(ப)ஹூவ்ரீஹிர்யதே(யே)ஷ்டஸ்ததா(யா) ஸ்ம்ருதாவபி ப்ரஹ்மபாரதந்த்ர்யமாத்ரம் காமஸ்ய விவக்ஷிதம், ஶ்ருத்யனுஸாரேண ஸ்ம்ருதேர்னேதவ்யத்வாதி(தி)த்யர்த்த:(ய:) || (ஆனந்தகிரீயம்).

யது(தூ)க்தம் 'த ஏதஸ்யைவ ஸர்வே ரூபமப(ப)வன்' (ப்ரு. 1-6-21) இதி ஶ்ருதே: ப்ராண ஏவேந்த்ரியாணீதி தத(த)யுக்தம் தத்ராபி பௌர்வாபர்யாலோசநாத்(த்) பே(பே)த(த)ப்ரதீதே:..............தஸ்மாத்தத(த) விரோதே(தே)ன வாகா(கா)தி(தி)ஷூ பரிஸ்பந்த(த) லாப(ப)ஸ்ய ப்ராணாயத்தத்வம் தத்ரூப ப(ப)வனம் வாகா(கா)தீ(தீ)னாமிதி மந்தவ்யம் ந தாதா(தா)த்ம்யம் | (ப்ர. ஸூ. ஶங்கரபாஷ்யம் 2-4-19).

† ப்ராணஸ்யைவ வ்ருத்தய: ஏகாத(த)ஶேந்த்ரியாணி ந தத்வாந்தராணீதி ப்ராப்தம் (பூர்வபக்ஷ:) | ஏவம் ப்ராப்தே உச்யதே (ஸித்தா(யா)ந்த:) முக்யாத் ப்ராணாத் தத்வாந்தராணீந்த்ரியாணி, தத்ர தத்ர பே(பே)தேன வ்யபதேஶாத் ம்ருத்யு ப்ராப்தாப்ராப்தத்வ லக்ஷண விருத்த(யு)த(ய)ர்ம ஸம்ஸர்க(க)ஶ்ருதே: | அர்த்த(ய)க்ரியா பே(பே)தா(தா)ச்ச ........யாபி ச ப்ராணரூபதா மிந்த்ரியாணாமபி(பி)த(த)தா(யா)தி ஶ்ருதி:, தத்ராபி பௌர்வாபர்யாலோசநயாம் பே(பே)த(த) ஏவ ப்ரதீயத இத்யுக்தம் பா(பா)ஷ்யக்ருதா | தஸ்மாத் ப(ப)ஹூஶ்ருதி விரோதா(யா)த் பூர்வாபரஶ்ருதி விரோதா(யா)ச்ச ப்ராணரூபதாபி(பி)தா(யா)ன மிந்த்ரியாணாம் ப்ராணாயத்ததயா பா(பா)க்தம் க(க)மயிதவ்யம் (ப்ர. ஸூ. பா(பா)மதீ 2-4-17.)

அவதரணிகை :—அபரோக்ஷஞானத்திற்கு ஸாத(௪)னமான கர்மங்கள் பலவிதங்களுண்டென்று சொல்லுகிறான் :—

(மூ)—தை(௩)வமேவாபரே யஜ்ஞம் யோகி(௩)ன: பர்யுபாஸதே ||
ப்ரஹ்மாக்(௩)நாவபரே யஜ்ஞம் யஜ்ஞேனைவோப ஜுஹ்வதி ||25||

(ப. உ.) தை(௩)வம், ஏவ, அபரே, யஜ்ஞம், யோகி(௩)ன:, பர்யுபாஸதே | ப்ரஹ்மாக்(௩)னௌ, அபரே, யஜ்ஞம், யஜ்ஞேந, ஏவ, உபஜுஹ்வதி ||

| | | | |
|---|---|---|---|
| அபரே | = சில | அபரே | = மற்றும் சிலர் |
| யோகி(௩)ன: | = யோகிகள் | ப்ரஹ்மாக்(௩)னௌ | = ப்ரஹ்மாதீனமான அக்னியில் |
| தை(௩)வம், ஏவ | = பரமாத்மாவையே | யஜ்ஞேன, ஏவ | = அக்னிஹோத்ரம் முதலிய யாகங்களாலேயே |
| யஜ்ஞம் [யதா(௨) பவதி ததா(௨)] | = யஜ்ஞரூபமெப்படி ஆகுமோ அப்படி | யஜ்ஞம் (ப்ரதி) | = யஜ்ஞமாக பரமாத்மாவைக் குறித்து |
| பர்யுபாஸதே | = உபாஸிக்கின்றனர் (பரமாத்மாவின் உபாஸனையையே யஜ்ஞமென்று தெரிந்து கொள்கிறார்கள்.) | உபஜுஹ்வதி | = ஹோமத்தைச் செய்கின்றார்கள். |

(மூ)—ஶ்ரோத்ராதீ(௩)நீந்திரியாண்யன்யே ஸம்யமாக்(௩)னிஷு ஜுஹ்வதி ||
ஶப்தா(௩)தீ(௩)ன் விஷயாநன்யே இந்த்ரியாக்(௩)னிஷு ஜுஹ்வதி ||26||

(ப. உ.) ஶ்ரோத்ராதீ(௩)னி, இந்த்ரியாணி, அன்யே, ஸம்யமாக்(௩)னிஷு, ஜுஹ்வதி | ஶப்தா(௩)தீ(௩)ன், விஷயான், அன்யே, இந்த்ரியாக்(௩)னிஷு, ஜுஹ்வதி ||

| | | | |
|---|---|---|---|
| அன்யே | = மற்றும் சிலர் | ஸம்யமாக்(௩)னிஷு | = அடக்கல் என்னும் அக்னியில் |
| ஶ்ரோத்ராதீ(௩)னி | = காது முதலிய | ஜுஹ்வதி | = ஹோமம் செய்கின்றனர். (பரமாத்மாவின் |
| இந்த்ரியாணி | = ஞானேந்திரியங்களை | | |

பூஜாரூபமென்று தெரிந்து கொண்டு இந்திரியங்களை துஷ்ட விஷயங்களில் போக விடாமல் தடுத்துக்கொள்வதே ஒருவிதமான யஜ்ஞம்.)
அன்யே = மற்றும் சிலர்
ஶப்தா(ஷ)தி(ஷீ)ன் = ஶப்தம்முதலிய
விஷயான் = விஷயங்களை
இந்த்ரியாக்(ரீ)னிஷு = இந்திரியங்களென்னும்அக்னியில்
ஜுஹ்வதி = ஹோமம் செய்கின்றனர். (பகவத் பூஜாரூபமென்று ஶப்தா[ஷ]தி விஷயங்களை அனுபவிப்பது மற்றொரு விதமான யஜ்ஞம்.)

(மூ)—ஸர்வாணீந்த்ரிய கர்மாணி ப்ராணகர்மாணி சாபரே ||
ஆத்ம ஸம்யமயோகா(மா)க்(ரீ)னௌ ஜுஹ்வதி ஞானதீ(ஷீ)பிதே ||27||

(ப. உ.) ஸர்வாணி, இந்திரியகர்மாணி, ப்ராணகர்மாணி, ச, அபரே | ஆத்ம-ஸம்யமயோகா(மா)க்(ரீ)னௌ, ஜுஹ்வதி, ஞானதி(ஷீ)பிதே ||

அபரே = மற்றும் சிலர்
ஸர்வாணி = ஸமஸ்தமான
இந்திரிய கர்மாணி = வாக்பாணி முதலான கர்மேந்த்ரிய வ்யாபாரங்களையும்
ச = மற்றும்
ப்ராண கர்மாணி = ப்ராணபாணாதி வ்யாபாரங்களையும்
ஞானதீ(ஷீ)பிதே = ஞானத்தால் அதிகமாய் எரிந்து கொண்டிருக்கும்
ஆத்ம ஸம்யமயோகா(மா)க் (ரீ)னௌ = மனவமைதிரூபமான ஞானோபாயமென்னும் அக்னியில்
ஜுஹ்வதி = ஹோமத்தைச் செய்கின்றனர் [மனதை அடக்கிக்கொண்டு கர்மேந்திரிய வ்யாபாரங்களை நிருத்துவதே (யோக்யவிஷயகமாக செய்வதே) பகவத் பூஜை என்று தெரிந்துகொள்கிறார்கள். இது ஒரு யஜ்ஞம்.]

(மூ)—த்(ஃ)ரவ்யயஜ்ஞா: தபோயஜ்ஞா: யோகயஜ்ஞா ஸ்ததா(ஃ)பரே ||
ஸ்வாத்(ஃ)யாயஜ்ஞான யஜ்ஞாஶ்ச யதய: ஸம்ஸிதவ்ரதா: ||28||

(ப. உ.) த்(ஃ)ரவ்யயஜ்ஞா:, தபோயஜ்ஞா:, யோகயஜ்ஞா:, ததா(ஃ), அபரே | ஸ்வாத்(ஃ)யாயஜ்ஞானயஜ்ஞா:, ச, யதய:, ஸம்ஸிதவ்ரதா: ||

அபரே = வேறு சிலர்
த்ரவ்யயஜ்ஞா: = பொருளிகை ரூபமான யஜ்ஞத்தைச் செய்வர்
ததா(ஃ) = அவ்வாறே
(அபரே) = மற்றும் சிலர்
தபோ யஜ்ஞா: = க்ருச்ர, சாந்த்ராயணாதிதபோ ரூபமான யஜ்ஞத்தைச் செய்வர்
(அபரே) = மற்றும் சிலர்
யோகயஜ்ஞா: = த்(ஃ)யான ரூபமான யஜ்ஞத்தைச் செய்வர்.
ச(அபரே) = மற்றும் சிலர்
யதய: = யத்ன ஶீலரான (முயற்சியுடைய)
ஸம்ஸித வ்ரதா: = கொண்டாடுவதற்கு யோக்யமான வ்ரதங்களையுடைய ஜனங்கள்
ஸ்வாத்யாய யஜ்ஞா: = வேதாத்யயன ரூபமான யாகத்தைச் செய்வர்.
ச = மற்றும் சிலர்
ஞானயஜ்ஞா: = ஞான ரூபமான யஜ்ஞத்தை செய்வார்கள். (ஞான தானத்தைச் செய்வர், மற்றும் ஞானத்தை ஸம்பாதித்துக் கொள்வார்கள்.)

(மூ)—அபானே ஜுஹ்வதி ப்ராணம் ப்ராணேபானம் ததா(ஃ)பரே ||
ப்ராணாபானக(ஃ)தீ ருத்(ஃ)வா ப்ராணாயாம பராயணா: || 29 ||

(ப. உ.) அபானே, ஜுஹ்வதி, ப்ராணம், ப்ராணே, அபானம், ததா(ஃ), அபரே | ப்ராணாபானக(ஃ)தீ, ருத்(ஃ)வா, ப்ராணாயாமபராயணா: ||

ததா(ஃ) = மற்றும்
ப்ராணாயாம பராயணா: = ப்ராணாயாமத்தை செய்வதில் மனதுடைய
அபரே = மற்றும் சிலர்
ப்ராணாபானகதீ = ப்ராணாபான வ்யாபாரங்களை
ருத்(ஃ)வா = தடுத்து
அபானே = அபானத்தில்
ப்ராணம் = ப்ராண வியாபாரத்தை
ஜுஹ்வதி = ஹோமம் செய்கிறார்கள்.
ப்ராணே = ப்ராணத்தில்
அபானம் = அபான வ்யாபாரத்தை
ஜுஹ்வதி = ஹோமம் செய்கிறார்கள்.

(மூ)—அபரே நியதாஹாரா: ப்ராணான் ப்ராணேஷு ஜுஹ்வதி ||
ஸர்வேப்யேதே யஜ்ஞவிதோ(தா) யஜ்ஞக்ஷபித கல்மஷா:||30||

யஜ்ஞ-ஶிஷ்டாம்ருத-பு(பு)ஜோ யாந்தி ப்ரஹ்ம ஸனாதனம் ||
நாயம் லோகோஸ்த்யயஜ்ஞஸ்ய குதோன்ய: குரு ஸத்தம ||31||

(ப. உ.) *அபரே, நியதாஹாரா:, ப்ராணான், ப்ராணேஷு, ஜுஹ்வதி| ஸர்வே, அபி, ஏதே, யஜ்ஞவித:(உ:), யஜ்ஞ-க்ஷபித-கல்மஷா:|| யஜ்ஞ-ஶிஷ்டாம்ருத-பு(பு)ஜ:, யாந்தி, ப்ரஹ்ம, ஸனாதனம்| ந, அயம், லோக:, அஸ்தி, அயஜ்ஞஸ்ய, குத:, அன்ய:, குரு-ஸத்தம ||*

| | | | |
|---|---|---|---|
| அபரே | = மற்றும் சிலர் | யஜ்ஞவித: | = அனேக விதயாகங்களை அறிந்த |
| நியத- | = அடக்கப்பட்ட | ஏதே | = இந்த |
| ஆஹாரா: (ஸந்த:) | = ஆஹாரத்தை யுடையவராய் (ஶரீரதாரணத்திற்கு வேண்டிய உணவை மாத்ரம் ஏற்றுக் கொள்பவராய்) | ஸர்வே அபி | = அனைவரும் |
| | | யஜ்ஞ- | = யஜ்ஞத்தால் |
| | | க்ஷபித- | = போக்கடித்துக் கொள்ளப்பட்ட |
| ப்ராணான் | = கண் முதலிய இந்திரிய வ்யாபாரங்களை | கல்மஷா: (ஸந்த:) | = தோஷமுடையவர்களாய் |
| | | யஜ்ஞ- | = யஜ்ஞத்தில் |
| ப்ராணேஷு | = கண் முதலிய இந்த்ரியங்களில் | ஶிஷ்ட- | = தேவதைகளுக்கு ஸமர்ப்பித்து மிகுந்த |
| ஜுஹ்வதி | = ஹோமம் செய்கின்றனர். (இந்த்ரியங்களை துஷ்ட விஷயங்களில் போக விடாமல் ஸ்வாதீனத்தில் வைத்துக் கொள்ளுகிறார்கள். இது ஒரு விதமான யஜ்ஞம்.) | அம்ருத- | = * அம்ருதத்தை |
| | | பு(பு)ஜ: (ஸந்த:) | = உண்பவராய் |
| | | ஸனாதனம் | = அனாதிநித்யனை |
| | | ப்ரஹ்ம | = பரமாத்மாவை |
| | | யாந்தி | = அடைகிறார்கள் |
| | | அயஜ்ஞஸ்ய | = யாகத்தை செய்யாமலிருக்கும் மனிதனுக்கு |
| | | அயம்- | = இந்த அற்ப |

* யஜ்ஞத்தில் தேவதைகளுக்காக ஹோமம் செய்து மிகுதியான பொருள்களுக்கு அம்ருதமென்று பெயர்.

ஸுகமுள்ள
லோக: (ஏவ) = பூலோகமே
ந, அஸ்தி = கிடைப்பதில்லை (நரகத்திலேயே வஸிக்கிறுன்)
குருஸத்தம = அர்ஜுனு !

அன்ய: = அதிக ஸுகமுள்ள பரலோகம் (முதலியன)
குத: = ஏது? (பரலோகம் எப்பொழுதும் கிடைப்பதே இல்லை.)

(மூ)—ஏவம் ப(ப)ஹுவிதா(யா) யஜ்ஞா விததா ப்ரஹ்மணே முகே(வே) ||
கர்மஜான் வித்தி(யூ)தான் ஸர்வானேவம் ஜ்ஞாத்வா விமோக்ஷ்யஸே || 32 ||

(ப. உ.) ஏவம், ப(ப)ஹுவிதா:(யா:), யஜ்ஞா:, விததா:, ப்ரஹ்மண:, முகே(வே) | கர்மஜான், வித்தி(யூ), தான், ஸர்வான், ஏவம், ஜ்ஞாத்வா, விமோக்ஷ்யஸே ||

ஏவம் = இவ்விதமாக
பஹுவிதா: (யா:) = அனேகவிதங்களான
யஜ்ஞா: = யஜ்ஞங்கள்
ப்ரஹ்மண: = பரமாத்மாவின்
முகே(வே) = முகத்தில்
விததா: = விஸ்தாரமாக இருக்கின்றன. (பரமாத்மா ஸகல யஜ்ஞங்களையும் புசிப்பவனுதலால் யஜ்ஞங்கள் பரமாத்மாவின் முகத்தில் இருப்பவைகளாய் ஆகின்றன.)
தான் = அந்த
ஸர்வான் = ஸர்வ யஜ்ஞங்களையும்

கர்மஜான் = மனது, வாக்கு, சரீரம் இவைகளால் நடக்கும் கர்மங்களினுல் பிறப்பவைகளாய்
வித்தி (யூ) = தெரிந்துகொள்.
ஏவம் = இந்த ஸகல கர்மங்கள், ஸகலவர்ணுஶ்ரமங்களுக்கு விஹிதமென்று
ஜ்ஞாத்வா = தெரிந்துகொண்டு
(க்ருத்வா) = உனக்குத் தகுந்த கர்மங்களைச் செய்து
விமோக்ஷ்யஸே = முக்தனுவாய்.

(மூ)—ஶ்ரேயான் த்(த)ரவ்யமயாத்(த)யஜ்ஞாத் ஜ்ஞான யஜ்ஞ: பரந்தப ||
ஸர்வம் கர்மாகி(வி)லம் பார்த்த(ஜ)ஞானே பரிஸமாப்யதே ||33||

(ப. உ.) ஶ்ரேயான், த்(ஜீ)ரவ்யமயாத், யஜ்ஞாத், ஞானயஜ்ஞ:, பரந்தப | ஸர்வம், கர்ம, அகிலம், பார்த்த(ய), ஞானே, பரிஸமாப்யதே ||

| | |
|---|---|
| பரந்தப | = ஶத்ருக்களைத் தபிக்கச்செய்யும் அர்ஜுநா! |
| (யத:) | = எக்காரணத்தால் |
| அகி(வி)லம் | = அங்கத்தோடு கூடிய |
| ஸர்வம் | = ஸகலமான |
| கர்ம | = கர்மம் |
| ஞானே | = ஞானமென்னும் ப(ஃ)லம் |
| (ஜாதேஸதி) | = உண்டானதும் |
| பரிஸமாப்யதே | = முடிவடையுமோ (ஸபலமாருமோ) |
| (அத:) | = அக்காரணத்தால் |
| த்(ஜீ)ரவ்யமயாத் யஜ்ஞாத் | = பொருளீகை என்னும் யஜ்ஞத்தைதவிட (முன்னால் சொல்லியஎல்லா யஜ்ஞங்களைவிட) |
| ஞானயஜ்ஞ: | = பகவத் ஞான ஸம்பாதன ரூபமாகிய யஜ்ஞம் |
| ஶ்ரேயான் | = மேலானது. |

(மூ)—தத்(ஜீ)வித்தி(யூ) ப்ரணிபாதேன பரிப்ரஶ்னேன ஸேவயா ||
உபதே(க்ஷ)க்ஷ்யந்தி தே ஞானம் ஞானின: தத்வத(ஃ)ர்ஶின: ||34||

(ப. உ.) தத், வித்தி(யூ), ப்ரணிபாதேன, பரிப்ரஶ்னேன, ஸேவயா | உபதே(க்ஷ)க்ஷ்யந்தி, தே, ஞானம், ஞானின:, தத்வத(ஃ)ர்ஶின: ||

| | |
|---|---|
| தத் (தஸ்மாத்) | = ஞானம் ஶ்ரேஷ்டமானதினால் |
| தத்வ-த(ஃ)ர்ஶின: | = தத்வத்தை அறிந்த |
| ஞானின: | = ஞானிகள் |
| ப்ரணிபாதேன | = நீ செய்யும் நமஸ்காரத்தினாலும் |
| பரிப்ரஶ்னேன | = நீ கேட்கும் கேள்வியினாலும் |
| ஸேவயா | = நீ செய்யும் பணிவிடையினாலும் |
| தே | = உனக்கு |
| ஞானம் | = ஞானத்தைப் பிறப்பிக்கும் ஶாஸ்த்ரத்தை |
| உபதே(க்ஷ)க்ஷ்யந்தி | = உபதேஶிப்பார்கள். |
| (தேப்ய:) | = அவர்களிடமிருந்து |
| தத் | = அந்த தெரிந்துகொள்ள வேண்டிய தத்வத்தை |
| வித்தி(யூ) | = தெரிந்துகொள். |

(மூ)—யஜ்ஞாத்வா ந புனர்மோஹமேவம் யாஸ்யஸி பாண்டவ ||
யேன பூ(ஹு)தான்யசேஷேண த்(த்3)ரக்ஷ்யஸ்யாத்மன்யதோ (யோ) மயி ||35||

(ப. உ.) யத், ஞாத்வா, ந, புன:, மோஹம், ஏவம், யாஸ்யஸி, பாண்டவ | யேன, பூ(ஹு)தானி, அசேஷேண, த்(த்3)ரக்ஷ்யஸி, ஆத்மனி, அதோ(யோ), மயி ||

| | | | |
|---|---|---|---|
| பாண்டவ | = அர்ஜுனு! | ஆத்மனி | = ஸர்வாந்தர்யாமியான |
| யத் | = எந்த தத்வத்தை | மயி | = என்னிடத்தில் (ஸ்ரீ க்ருஷ்ணனிடத்தில்) |
| ஞாத்வா | = தெரிந்து கொண்டு | பூ(ஹு)தானி | = ப்ராணிகளை |
| ஏவம் | = இவ்விதமாக | அசேஷேண | = ஒன்றையும் விடாமல் |
| மோஹம் | = மோஹத்தை | த்ரக்ஷ்யஸி | = காணுவாயோ (அப்படிப்பட்ட ஞானத்தை அடைவாய்). |
| புன: | = மறுபடியும் | | |
| ந யாஸ்யஸி | = அடையமாட்டாயோ | | |
| அதோ(யோ) | = மோஹம் நாஶமடைவதால் | | |
| யேன | = எந்த ஞானத்தால் | | |

(மூ)—அபி சேத(உ)ஸி பாபேப்(ஹ்)யஸ்ஸர்வேப்(ஹ்)ய: பாபக்ருத்தம: ||
ஸர்வம் ஞானப்லவேனைவ வ்ருஜினம் ஸந்தரிஷ்யஸி || 36 ||

(ப. உ.) அபி, சேத், அஸி, பாபேப்(ஹ்)ய:, ஸர்வேப்(ஹ்)ய:, பாபக்ருத்தம: | ஸர்வம், ஞானப்லவேன, ஏவ, வ்ருஜினம், ஸந்தரிஷ்யஸி ||

| | | | |
|---|---|---|---|
| ஸர்வேப்ய: | = ஸமஸ்தரான | ஸர்வம் | = ஸகலமான |
| பாபேப்ய: | = பாபங்களையுடையவர்களைவிட | வ்ருஜினம் | = பாபங்களையும் |
| பாபக்ருத்தம: | = அதிகமான பாவத்தைச் செய்தவன் | ஞானப்லவேன | = ஞானமென்னும் படகினுல் |
| அஸி, சேத், அபி. | = ஆயினும் | ஸந்தரிஷ்யஸி ஏவ | = கடந்தே தீருவாய் (முக்தனுவாய்). |

(மூ)—யதை(ை)தா(யா)ம்ஸி ஸமித்தோ(யோ)க்(ா)னி: ப(ஹ)ஸ்ம
ஸாத் குருதேர்ஜுன ||
ஞானக்(ா)னி: ஸர்வகர்மாணி ப( )ஸ்மஸாத்குருதே
ததா (யா)|| 37 ||

(ப. உ.) யதா(யா), ஏதா(யா)ம்ஸி, ஸமித்த:(யு:) அக்னி:, ப(ஹ)ஸ்ம ஸாத், குருதே, அர்ஜுன | ஞானக்னி:, ஸர்வகர்மாணி, ப(ஹ)ஸ்மஸாத், குருதே, ததா(யா) ||

| | |
|---|---|
| அர்ஜுன | = அர்ஜுனா! |
| யதா(யா) | = எப்படி |
| ஸமித்த:(யு:) | = நன்றாக எறிந்து கொண்டிருக்கும் |
| அக்(ா)னி: | = நெருப்பு (அனல்) |
| ஏதா(யா)ம்ஸி | = விறகுகளை |
| ப(ஹ)ஸ்ம ஸாத் | = சாம்பலாக |
| குருதே | = செய்கிறதோ |
| ததா(யா) | = அப்படியே |
| ஞானக்னி: | = ஞானமென்னும் தீ |
| ஸர்வகர் மாணி | = ப்ராரப்தத்தைத் தவிர மற்ற அனிஷ்டமான ஸகல கர்மங்களையும் |
| ப(ஹ)ஸ்ம ஸாத் | = சாம்பலாக (நாசம்) |
| குருதே | = செய்கிறது. |

(மூ)—ந ஹி ஞானேன ஸத்(ரு)ருமம் பவித்ரமிஹ வித்(ய)யதே ||
தத் ஸ்வயம் யோக(ஸ)ஸம்ஸித்த:(யு:) காலேனாத்மனி விந்த
(உ)தி || 38 ||

(ப. உ.) ந, ஹி, ஞானேன, ஸத்(ரு)ருமம், பவித்ரம், இஹ, வித்(ய) யதே | தத், ஸ்வயம், யோக(ஸ)ஸம்ஸித்த:(யு:), காலேன, ஆத்மனி, விந்த(உ)தி ||

| | |
|---|---|
| இஹ | = பதார்த்தங்களில் |
| ஞானேன | = ஞானத்தினால் (அறிவிற்கு) |
| ஸத்(ரு) ருமம் | = ஸமமான |
| பவித்ரம் | = சுத்தமான பொருள் |
| ந, ஹி, வித்யதே | = இல்லவே இல்லை |
| யோகஸம் ஸித்த: | = ஞானோபாயத்தால் கூடிய மனிதன் |
| ஆத்மனி | = பரமாத்மாவின் விஷயத்தில் |
| தத் | = அந்த ஞானத்தை |
| காலேன | = அனேக காலத்தால் |
| ஸ்வயம் | = தானாகவே |
| விந்த(உ)தி | = அடைகிறான். |

(மூ)—ஶ்ரத்தா(ஞா)வான் லப(ஹ)தே ஞானம் மத்பரஸ்ஸம் யதேந்த்(ஜீ)ரிய: ||
ஞானம் லப்(ஸீ)த்(யீ)வா பராம் ஶாந்திமசிரேணுதி(யி) க(ம)ச்ச(ஸ)தி || 39 ||

(ப. உ.) ஶ்ரத்தா(ஞா)வான், லப(ஹ)தே, ஞானம், மத்பர:, ஸம்யதேந்த்(ஜீ)ரிய: | ஞானம், லப்(ஸீ)த்(யீ)வா, பராம், ஶாந்திம், அசிரேண, அதி(யி)கச்ச(ஸ)தி ||

| | | | |
|---|---|---|---|
| ஸம்யதேந்த்(ஜீ)ரிய: | = ஸ்வாதீனத்தில் வைத்துக்கொண்ட இந்த்ரியங்களையுடைய | | = ஞானத்தை |
| ஶ்ரத்தா(ஞா)வான் | = ஆஸ்திக்யபுத்தியுடைய | லப(ஹ)தே | = அடைகிறான். |
| மத்பர: | = நானே (பரமாத்மாவே) ஸர்வோத்தமனென்னும் அறிவுள்ள மனிதன் | ஞானம் | = அபரோக்ஷ ஞானத்தை |
| ஞானம் | = அபரோக்ஷ | லப்த்(யீ)வா | = அடைந்து |
| | | பராம் | = மேலான |
| | | ஶாந்திம் | = மோக்ஷத்தை |
| | | அசிரேண | = சீக்கிரத்திலேயே (ப்ராரப்தகர்மம் முடிந்ததும்) |
| | | அதி(யி) கச்சதி | = அடைகிறான். |

(மூ)—அஜ்ஞஶ்சாஶ்ரத்த(தூ)தா(யா)னஶ்ச ஸம்ஶயாத்மா விநஶ்யதி||
நாயம் லோகோஸ்தி ந பரோ ந ஸுக(வ)ம் ஸம்ஶயாத்மன: || 40 ||

(ப. உ.) அஜ்ஞ:, ச, அஶ்ரத்த(தூ)தா(யா)ன:, ச, ஸம்ஶயாத்மா, விநஶ்யதி | ந, அயம், லோக:, அஸ்தி, ந, பர:, ந, ஸுக(வ)ம், ஸம்ஶயாத்மன: ||

| | | | |
|---|---|---|---|
| அஶ்ரத்த(தூ)தா(யா)ன: | = ஆஸ்திக்ய புத்தியற்ற (நாஸ்திகனை) | | மனிதன் |
| ச | = மற்றும் | விநஶ்யதி | = நரகாத்யனர்த்தங்களை அடைகிறான். |
| அஜ்ஞ: | = அஞ்ஞானியும், | ஸம்ஶயாத்மன: | = ஸம்ஶயத்தோடு கூடிய மனதுடையவனுக்கு |
| ச | = மற்றும் விருத்த ஞானியுமான | | |
| ஸம்ஶயாத்மா | = ஸந்தேஹத்தோடு கூடிய மனதுடைய | அயம், லோக: | = இந்த மனுஷ்ய லோகம் |

| | | | |
|---|---|---|---|
| ந, அஸ்தி | = இல்லை. | ந | = இல்லை. |
| பர: | = ஸ்வர்க்காதி லோகம் | ஸுக(வ)ம் | = ஸுகமும் |
| | | ந | = இல்லை. |

(மூ)—யோக(௩)ஸம்ந்யஸ்த கர்மாணம் ஞானஸம்சி(ஷி)ன்ன ஸம்ஶயம் ||
ஆத்மவந்தம் ந கர்மாணி நிப(வ)த்(யீ)நந்தி த(ய)னஞ்ஜய || 41 ||

(ப. உ.) யோக(௩)-ஸம்ந்யஸ்த-கர்மாணம், ஞான-ஸம்சி(ஷி)ன்ன-ஸம்ஶயம் | ஆத்மவந்தம், ந, கர்மாணி, நிப(வ)த்(யீ)நந்தி, த(ய)னஞ்ஜய ||

| | | | |
|---|---|---|---|
| த(ய)னஞ்ஜய | = அர்ஜுனா! | ஸம்ஶயம் | = ஸம்ஶயமுடைய |
| கர்மாணி | = கர்மங்கள் | ஆத்ம வந்தம் | = பரமாத்மாவிடத்தில் பக்தியுள்ள அல்லது ப்ரமாத மற்ற மனிதனை |
| யோக- | = பரமாத்மாவிடத்தில் மனோ யோகத்தால் | ந நிபத்(யீ) நந்தி | = கட்டுவதில்லை (ஸம்ஸாரத்தில் கட்டுப்படுத்துவதில்லை) |
| ஸம்ந்யஸ்த- | = ஸமர்ப்பிக்கப்பட்ட | | |
| கர்மாணம் | = கர்மங்களையுடைய | | |
| ஞான- | = ஞானத்தால் | | |
| ஸம்சி(ஷி)ன்ன | = நஷ்டமான | | |

(மூ)—தஸ்மாத(௩)ஞான ஸம்பூ(ஷ-ஏ)தம் ஹ்ருத்ஸ்த(ய)ம் ஞானாஸினாத்மன: ||
சி(ஷி)த்வைனம் ஸம்ஶயம் யோக(௩)மாதிஷ்டோத்திஷ்ட பா(ஷா)ரத || 42 ||

(ப. உ.) தஸ்மாத், அஞான-ஸம்பூ(ஷ-ஏ)தம், ஹ்ருத்ஸ்த(ய)ம், ஞானாஸினா, ஆத்மன: | சி(ஷி)த்வா, ஏனம், ஸம்ஶயம், யோக(௩)ம், ஆதிஷ்ட, உத்திஷ்ட, பா(ஷா)ரத ||

| | | | |
|---|---|---|---|
| பா(ஷா)ரத | = அர்ஜுனா! | | முழுண்டாகையால் |
| தஸ்மாத் | = ஞானோபாயங்களை அனுஷ்டிப்பதால் ப(ஃ)லனும், அனுஷ்டிக்காவிடின் அனர்த்த | அஜ்ஞான- | = அஜ்ஞானத்தால் |
| | | ஸம்பூ (ஷ-ஏ)தம் | = பிறந்த |

| | | | |
|---|---|---|---|
| ஹ்ருத்ஸ்த(ய)ம் | = ஹ்ருதயத்திலிருக்கும் | | குச்சரியான அறிவினால் |
| ஆத்மன: | = தன்னிட | சி(ச்சி)த்வா | = வெட்டிக்கொண்டு |
| ஏனம் | = இக்கர்மானுஷ்டான விஷயகமான | யோக(ம)ம் | = ஞானத்திற்கு உபாயமான கர்மயோகத்தை |
| ஸம்ஶயம் | = ஸம்ஶயத்தை | | |
| ஞானஸிநா | = பரமாத்ம விஷயகமான கத்திக் | ஆதிஷ்ட | = செய். |
| | | உத்திஷ்ட | = எழுந்திரு. |

ஓம் தத் ஸத்

ஸ்ரீமத் பகவத் கீதையில் ஸ்ரீ க்ருஷ்ணார்ஜுன ஸம்வாதத்தில்

ஞானயோக(ம)மென்னும்

நான்காவது அத்தியாயம் முற்றிற்று.

---

# ஐந்தாவது அத்தியாயம்.

---

அர்ஜுன உவாச—

(மூ)—ஸம்ன்யாஸம் கர்மணாம் க்ருஷ்ண புனர்யோக(ம)ம் ச ஶம்ஸஸி ||
யச்(ஶ்)ரேய ஏதயோரேகம் தன்மே ப்(ப்)ரூஹி ஸுநிஶ்சிதம் || 1 ||

(ப. உ.) ஸம்ன்யாஸம், கர்மணாம், க்ருஷ்ண, புன:, யோக(ம)ம், ச, ஶம்ஸஸி | யத், ஶ்ரேய:, ஏதயோ:, ஏகம், தத், மே, ப்(ப்)ரூஹி, ஸுநிஶ்சிதம் ||

| | | | |
|---|---|---|---|
| அர்ஜுன: | = அர்ஜுனன் | (ஶம்ஸஸி) | = புகழ்கிறாய். |
| உவாச | = வினவுகிறான். | ஏதயோ: | = இந்த ஸன்யாஸம், யோகம் இவைகளில் |
| க்ருஷ்ண | = ஸ்ரீ கிருஷ்ணா ! | யத் | = ஏது |
| ஸம்ன்யாஸம் | = காமம், க்ரோதம், இவைகளின் த்யாக ரூபமான (விடுதல் என்னும்) ஸம்ன்யாஸத்தை | ஏகம் | = ஒன்று (ஸன்யாஸமோ, யோக [ம] மோ) |
| ஶம்ஸஸி | = புகழ்கிறாய். | ஶ்ரேய: | = ஶ்ரேயஸ்கரமானதோ |
| புன: | = மற்றும் | தத் | = அந்த ஶ்ரேயஸ்கரமானஒன்றை |
| கர்மணாம் | = பகவதர்பண புத்தியால் கர்மங்களின் அனுஷ்டான ரூபமாகிய | மே | = எனக்காக |
| | | ஸுநிஶ்சிதம் | = நிஶ்சயம் |
| | | [யதா(ஹா)] | = எப்படி |
| | | [ப(ஹ)வதி] | = ஆகுமோ |
| யோக(ம)ம் ச | = கர்மயோகத்தையும் | [ததா(ஹா)] | = அப்படி |
| | | ப்ரூஹி | = சொல். |

ஸ்ரீ பகவானுவாச—

(மூ)—ஸன்யாஸ: கர்மயோகஶ்ச நிஶ்ரேயஸகராவுபௌ (ஹௌ) ||
தயோஸ்து கர்ம ஸம்ன்யாஸாத் கர்மயோகோ(ஹோ) விஶிஷ்யதே || 2 ||

(ப. உ.) ஸம்ந்யாஸ:, கர்மயோக:(ஶ:), ச, நிஶ்ரேயஸகரௌ, உபௌ (ஹௌ) | தயோ:, து, கர்மஸம்ந்யாஸாத், கர்மயோக:(ஶ:), விஶிஷ்யதே ||

ஸ்ரீ பகவான் = ஸ்ரீ கிருஷ்ணன்
உவாச = சொல்லுகிறான்.
ஸம்ந்யாஸ: = காமம் முதலியவைகளின் த்யாகம் (விடுதல்.)
ச = மற்றும்
கர்மயோக:(ஶ:) = பகவத் ஸமர்ப்பண புத்தியால் கர்மங்களைச் செய்தல்
(ஏதௌ) = இந்த
உபௌ (ஹௌ) து = இரண்டும்
நிஶ்ரேயஸகரௌ = மோக்ஷாதி புருஷார்த்தங்களைக் கொடுப்பவைகளே.
தயோ:, து = அவ்விரண்டிலோ
கர்மஸம்ந்யாஸாத் = கர்மானுஷ்டானம் செய்வதில் காமம், க்ரோதம் இவைகளை விடுவதைவிட
கர்மயோக:(ஶ:) = பகவதர்ப்பண புத்தியால் கர்மங்களைச் செய்வதே
விஶிஷ்யதே = உத்தமமானது.

அவதரணிகை:—‘ஸம்ந்யாஸ’ ஶப்தம் ஸம்ந்யாஸாஶ்ரமத்தைச் சொல்வதல்ல, ப(ஃ)லேச்சா(ஶா)திகளின் த்யாகத்தை (விடுதலை) சொல்வதென்று சொல்லுகிறான் :—

(மூ)—ஜ்ஞேயஸ்ஸ நித்ய ஸம்ந்யாஸீ யோ ந த்(ஜீ)வேஷ்டி ந காங்க்ஷதி||
நிர்த்(ஜீ)வந்த்(ஜீ)வோ ஹி மஹாபா(வா)ஹோ ஸுக(வ)ம்
ப(வ)ந்தா(யா)த் ப்ரமுச்யதே || 3 ||

(ப. உ.) ஜ்ஞேய:, ஸ:, நித்யஸம்ந்யாஸீ; ய:; ந, த்(ஜீ)வேஷ்டி, ந, காங்க்ஷதி || நிர்த்(ஜீ)வந்த்(ஜீ)வ:, ஹி, மஹாபா(வா)ஹோ, ஸுக(வ)ம், ப(வ)ந்தா(யா)த், ப்ரமுச்யதே ||

மஹாபா(வா)ஹோ = அர்ஜுனா !
ய: = எவன்
ந, த்(ஜீ)வேஷ்டி = தனக்கு கிடைக்கும் பயனை கிடைக்காமல் தடுப்பவரிடத்தில் பகை செய்வதில்லையோ,
ந, காங்க்ஷதி = ப(ஃ)லத்தை விரும்புவதில்லையோ,
நிர்த்(ஜீ)வந்த்(ஜீ)வ: = ஸுகம், து:கம், லாபம், நஷ்டம் இவ்விரண்டினால் ஏற்றத்தாழ்வற்றவனோ
ஸ: = அவன்

| | |
|---|---|
| நித்ய ஸம்ன்யாஸி = எப்பொழுதும் ஸம்ன்யாஸி | ப(ப)ந்தா(யா)த் = ஸம்ஸாரக் கட்டினின்றும் |
| (இதி) = என்று | ஸுக(க)ம் [யதா (யா)ப(ப) வதி ததா (யா)] = அனுயாஸமாக |
| ஜ்ஞேய: = தெரிந்து கொள்ளப்பட வேண்டியவன். = அந்தகாமக்ரோதா(யா)திகளைத் துறந்த ஸம்ன்யாஸி | ப்ரமுச்யதே = முக்தனுகிறுன் |
| | ஹி = ப்ரஸித்தம். |

(மூ)—ஸாங்க்(கி)ய-யோகௌ(கௌ) ப்ருத(த)க்பா(பா)லா ப்ரவ த(வ)ந்தி ந பண்டிதா: ||
ஏகமப்யாஸ்தி(தி)த: ஸம்யகு(கு)ப(ப)யோர்விந்த(வ)தே ப(ப) லம் || 4 ||

(ப. உ.) ஸாங்(கி)யயோகௌ(கௌ), ப்ருத(த)க், பா(பா)லா:, ப்ரவத(வ)ந்தி, ந, பண்டிதா: | ஏகம், அபி, ஆஸ்தி(தி)த: ஸம்யக், உப(ப)யோ:, விந்த(வ)தே, ப(ப)லம் ||

| | |
|---|---|
| ஸாங்க்ய யோகௌ (கௌ) = ஸாங்க்(கி)யம், (ஞானம்) யோகம், (பகவதர்பண புத்தியால் கர்மத்தைச் செய்வது) இவ்விரண்டையும் | ப்ருத(த)க் = ஸாத்யஸாத(த)னத்தன்மையற்றது |
| பா(பா)லா: = அஞ்ஞானிகள் | (இதி) = என்று |
| ப்ருத(த)க் = ஸாத்யஸாத(த)னத்தன்மையற்றது [ஸாங்(கி)ய (ஞான) த்தைக் குறித்து கர்மயோக(ம்)ம் காரணமல்ல] | ந, ப்ரவத(வ)ந்தி = சொல்வதில்லை. (கர்ம யோகம் ஞானத்திற்குக் காரணமென்று சொல்லுகிறுர்கள்.) |
| (இதி) = என்று | ஏகம் அபி = இந்த ஞான மார்க்கம், கர்ம மார்க்கம் இவ்விரண்டில் ஒன்றை |
| ப்ரவத(வ)ந்தி = சொல்லுகிறுர்கள். | ஸம்யக் = நன்றுக |
| பண்டிதா: = ஞானிகள் | ஆஸ்தி(தி)த: = அடைந்தவன் |
| | உப(ப)யோ: = ஞான கர்மங்களின் |
| | ப(ப)லம் = ப(ப)லத்தை |
| | விந்த(வ)தே = அடைகிறுன். |

(மூ)—யத்ஸாங்க்(வீ)யை: ப்ராப்யதே ஸ்தா(ஞா)னம் தத்(ஜ)யோகை(ரை)ரபி க(ம)ம்யதே ||
ஏகம் ஸாங்க்(வீ)யம் ச யோக(ம)ம் ச ய: பஶ்யதி ஸ பஶ்யதி || 5 ||

(ப. உ.) யத், ஸாங்க்(வீ)யை:, ப்ராப்யதே, ஸ்தா(ஞா)னம், தத், யோகை: (ரை:), அபி, க(ம)ம்யதே | ஏகம், ஸாங்(வீ)யம், ச, யோக(ம)ம், ச, ய:, பஶ்யதி, ஸ:, பஶ்யதி ||

| | |
|---|---|
| ஸாங்க்(வீ)யை: | = ஞானிகளால் |
| யத் | = எந்த |
| ஸ்தா(ஞா)னம் | = ஸ்தா(ஞா)னம் (வைகுண்டாதி ரூபமானது) |
| ப்ராப்யதே | = அடையப் படுகிறதோ |
| தத் | = அந்த ஸ்தானம் |
| யோகை: (ரை:)அபி | = கர்மயோகிகளாலும் |
| க(ம)ம்யதே | = அடையப் படுகிறது. |
| ச | = மற்றும் |
| ஸாங்க்(வீ)யம் | = ஸாங்க்(வீ)யமும் (ஞானமும்) |
| யோக(ம)ம், ச | = கர்மயோகமும் |
| ஏகம் | = ஒன்றே (ஸாங்க்(வீ)யத்தைக் குறித்து யோகம் காரணம்) |
| (இதி) | = என்று |
| ய: | = எவன் |
| பஶ்யதி | = தெரிந்து கொள்கிறானோ |
| ஸ: | = அவன் |
| பஶ்யதி | = ஞானி (என்று சொல்லிக் கொள்ளப் படுகிறான். |

(மூ)—ஸம்ன்யாஸஸ்து மஹாபா(வா)ஹோ து:(ஊ)க(வ)மாப்துமயோக(ம)த: ||
யோக(ம)யுக்தோ முனிர்ப்ரஹ்ம ந சிரேணாதி(யி)க(ம)ச்ச(ஹ)தி || 6 ||

(ப. உ.) ஸம்ன்யாஸ:, து, மஹாபா(வா)ஹோ, து:(ஊ:)க்க(வ)ம், ஆப்தும், அயோக(ம)த: | யோக(ம)யுக்த:, முனி:, ப்ரஹ்ம, ந, சிரேண, அதி(யி)க(ம)ச்ச(ஹ)தி ||

| | |
|---|---|
| மஹாபா(வா)ஹோ | = அர்ஜுனா! |
| ஸம்ன்யாஸ: | = காமக்ரோத |

(ய)ங்களைத் துறப்பதென்னும் ஸம்ன்யாஸம்

அயோக(ம)த: (அயோக(ம) இதி அயோக(ம)த:) = பகவதர்பண புத்தியால் கர்மங்களைச் செய்வதென்னும் யோக(ம)மில்லாவிடில்
து:(க்ஷ:)கம் = ப்ரயாசத்தை
ஆப்தும் = அடைவதற்கு
(ப[ஹ]வதி) = (காரணம்) ஆகிறது.
முனி:, து = காமாதிகளைத் துறப்பதென்னும் ஸந்ந்யாஸ

முடையவனே
யோக(ம) யுக்த: (ஸன்) = பகவதர்பண புத்தியால் கர்மானுஷ்டான ரூபமாகிய யோகத்தோடு கூடியவனாய்
ந, சிரேண = சீக்ரத்திலேயே (ஞானத்தை அடைந்து)
ப்ரஹ்ம = பரமாத்மாவை
அதி(யி) கச்ச(ஹ)தி = அடைகிறான்.

(மூ)—யோக(ம)யுக்தோ விஶுத்தா(ஶ்யா)த்மா விஜிதாத்மா ஜிதேந்த்(ரி)ரிய: ||
ஸர்வபூ(ஹூ)தாத்ம பூ(ஹூ)தாத்மா குர்வன்னபி ந லிப்யதே || 7 ||

*(ப. உ.) யோகயுக்த:, விஶுத்தா(ஶ்யா)த்மா, விஜிதாத்மா, ஜிதேந்த்(ரி)ரிய: | ஸர்வபூ(ஹூ)தாத்மபூ(ஹூ)தாத்மா, குர்வன், அபி, ந, லிப்யதே||*

யோக(ம) யுக்த: = பகவதர்பண புத்தியால் செய்யத்தக்க கர்மரூப யோகத்தோடு கூடியவனும்
விஶுத் தா(ஶ்யா) த்மா = சுத்த(ஶ்ய)ஸ்வபா(ஹா)வமுடையவனும்
விஜிதாத்மா = அடக்கிக்கொண்டிருக்கும் மனதுடையவனும்
ஜிதேந்த் (ரி)ரிய: = ஸகல இந்த்ரியங்களை ஜெயித்தவனும்
ஸர்வபூ (ஹூ)தாத்ம பூ(ஹூ)தாத்மா = ஸகல ப்ராணிகளுக்கும் ஸ்வாமியான பரமாத்மாவையே ஸ்வாமியாயுடையவனாயுமிருக்கும் (எல்லாருக்கும் ஸ்வாமியான பரமாத்மாவே எனக்குஸ்வாமி என்று அறிந்துக்கொண்டிருக்கும்) மனிதன்
குர்வன் அபி = எந்த கர்மத்தைச் செய்துக்கொண்டிருந்தபோதிலும்
ந, லிப்யதே = கர்மஸம்பந்தமடைவதில்லை.

(மூ)—நைவ கிஞ்சித் கரோமீதி யுக்தோ மன்யேத தத்வவித் ||
பஶ்யன் ஶ்ருண்வன் ஸ்ப்ருஶன் ஜிக்(வ்)ரன் அஶ்னன் க(ற)ச்ச(ஊ)ன் ஸ்வபன் ஶ்வஸன் || 8 ||
ப்ரலபன் விஸ்ருஜன் க்(ரு)ருஹ்ணன் உன்மிஷன் நிமிஷன்னபி ||
இந்த்ரியாணீந்த்ரியார்த்தே(யே)ஷு வர்தந்த இதி தா(யா)ரயன் || 9 ||

*(ப. உ.) ந, ஏவ, கிஞ்சித், கரோமி, இதி, யுக்த:, மன்யேத, தத்வவித் | பஶ்யன், ஶ்ருண்வன், ஸ்ப்ருஶன், ஜிக்(வ்)ரன், அஶ்னன், க(ற)ச்ச(ஊ)ன், ஸ்வபன், ஶ்வஸன்|| ப்ரலபன், விஸ்ருஜன், க்(ரு)ருஹ்ணன், உன்மிஷன், நிமிஷன், அபி | இந்த்ரியாணி, இந்த்ரியார்த்தே(யே)ஷு, வர்தந்தே, இதி, தா(யா)ரயன் ||*

| | | | |
|---|---|---|---|
| *யுக்த:* | = கர்மயோகத்தை அனுஷ்டிக்கும் | *ஶ்வஸன் (அபி)* | = மூச்சு விட்டுக் கொண்டிருந்த போதிலும் |
| *தத்வவித்* | = பகவத்தத்வ ஞானி | *ப்ரலபன் (அபி)* | = கதறிக்கொண்டிருந்த போதிலும் |
| *பஶ்யன் அபி* | = பார்த்துக் கொண்டிருந்த போதிலும் | *விஸ்ருஜன் (அபி)* | = விட்டுக் கொண்டிருந்த போதிலும் |
| *ஶ்ருண்வன் (அபி)* | = கேட்டுக் கொண்டிருந்த போதிலும் | *க்(ரு)ருஹ்ணன் (அபி)* | = வாங்கிக் கொண்டிருந்த போதிலும் |
| *ஸ்ப்ருஶன் (அபி)* | = தொட்டுக் கொண்டிருந்த போதிலும் | *உன்மிஷன் (அபி)* | = உன்மேஷம் (கண் மூடுவது) என்னும் ப்ராண வ்யாபாரத்தைச் செய்து கொண்டிருந்த போதிலும் |
| *ஜிக்(வ்) ரன் (அபி)* | = மோந்து கொண்டிருந்த போதிலும் | | |
| *அஶ்னன் (அபி)* | = புசித்துக் கொண்டிருந்த போதிலும் | | |
| *க(ற)ச்ச(ஊ)ன் (அபி)* | = போய்க்கொண்டிருந்த போதிலும் | *நிமிஷன் (அபி)* | = நிமிஷம் (கண் திறப்பது) என்னும் ப்ராண வ்யாபாரத்தைச் செய்து கொண்டிருந்த போதிலும் |
| *ஸ்வபன் (அபி)* | = தூங்கிக்கொண்டிருந்த போதிலும் | | |

| | | | |
|---|---|---|---|
| இந்த்ரியாணி | = இந்த்ரியங்கள் | கிஞ்சித் | = ஒரு கார்யத்தையாகிலும் |
| இந்த்ரியார்த்தே(யே)ஷு | = இந்த்ரியங்களின் விஷயங்களில் | ந, ஏவ கரோமி | = நான்ஸ்வதந்த்ரனாய் செய்பவனல்ல |
| வர்தந்தே | = ப்ரவர்த்திக்கின்றன | இதி | = என்று |
| இதி | = என்று | மன்யேத | = தெரிந்துகொள்ள வேண்டும். |
| தா(ர)யன் | = தெரிந்துகொண்டவனாய் | | |

(க. உ.):—'நான் செய்யும் தர்சனம் (பார்ப்பது) முதலிய வ்யாபாரங்களை பரமாத்மா என்னுள்ளிருந்து தான் செய்து, என்னாலும் செய்வித்துக்கொண்டிருக்கிறான். நான் ஸ்வதந்த்ரனாய் செய்பவனல்ல' என்று தெரிந்துகொள்ளவேண்டும்.

(மூ)—ப்ரஹ்மண்யாதா(யா)ய கர்மாணி ஸங்க(ம்)ம் த்யக்த்வா கரோதி ய: ||
லிப்யதே ந ஸ பாபேன பத்(ம)மபத்ர மிவாம்ப(ஸ)ஸா || 10 ||

(ப. உ.) ப்ரஹ்மணி, ஆதா(யா)ய, கர்மாணி, ஸங்க(ம்)ம், த்யக்த்வா, கரோதி, ய: | லிப்யதே, ந, ஸ:, பாபேன, பத்(ம)மபத்ரம், இவ, அம்ப(ஸ)ஸா ||

| | | | |
|---|---|---|---|
| ய: | = எவன் | கரோதி | = செய்கிறானோ |
| ஸங்க(ம்)ம் | = ப(ல)லாபேக்ஷையை | ஸ: | = அவன் |
| த்யக்த்வா | = விட்டு | பத்மபத்ரம் | = தாமரை இலை |
| கர்மாணி | = கர்மங்களை | அம்ப(ஸ)ஸா, இவ | = ஜலத்தினால் எப்படி ஸம்பந்த(ய)மடைவதில்லையோ அப்படி |
| ப்ரஹ்மணி | = பரமாத்மாவிடத்தில் | பாபேன | = பாபத்தால் |
| ஆதா(யா)ய | = வைத்து (பரமாத்மாவே எனக்கு நற்ப(ல)லத்தைக் கொடுப்பதற்காக என்னால் தன் [பகவானின்] பூஜாத்மகமான கர்மங்களைச் செய்வித்துக்கொண்டிருக்கிறானென்று அநுஸந்தா(யா)னம் செய்துகொண்டு) | ந, லிப்யதே | = ஸம்பத்த(ய)னாவதில்லை. (அவனுக்கு பாபங்களின் ஸம்பந்தமாவதில்லை.) |

(மூ)—காயேன மனஸா புத்(யீ)யா கேவலைரிந்த்ரியைரபி ||
யோகி(ஃ)ன: கர்ம குர்வந்தி ஸங்க(ஃ)ம் த்யக்த்வாத்ம ஶுத்த(யு)யே || 11 ||

(ப. உ.) காயேன, மனஸா, புத்(யீ)யா, கேவலை:, இந்த்ரியை:, அபி | யோகி(ஃ)ன:, கர்ம, குர்வந்தி, ஸங்க(ஃ)ம், த்யக்த்வா, ஆத்மஶுத்த(யு)யே ||

| | | | |
|---|---|---|---|
| யோகி(ஃ)ன: | = யோகிகள் | மனஸா | = மனதினாலும் |
| ஸங்க(ஃ)ம் | = ப(ஃ)லத்தில் நேஶத்தை | புத்(யீ)யா | = புத்தியினாலும் |
| த்யக்த்வா | = விட்டு | கேவலை: | = விஷயங்களில் ஆஸக்தியற்ற |
| ஆத்ம ஶுத்த (யு) யே | = மனது ஶுத்த(யு)மாவதற்காக | இந்த்ரியை:, அபி | = இந்திரியங்களாலும் |
| | | கர்ம | = கர்மத்தை |
| காயேன | = ஶரீரத்தாலும் | குர்வந்தி | = செய்கிறார்கள். |

(மூ)—யுக்த: கர்மப(ஃ)லம் த்யக்த்வா ஶாந்திமாப்னோதி நைஷ்டிகீம் ||
அயுக்த:காமகாரேண ப(ஃ)லே ஸக்தோ நிப(ஃ)த்(யீ)யதே||12||

(ப. உ.) யுக்த:, கர்மப(ஃ)லம், த்யக்த்வா, ஶாந்திம், ஆப்னோதி, நைஷ்டிகீம் | அயுக்த:, காமகாரேண, ப(ஃ)லே, ஸக்த:, நிப(ஃ)த்(யீ)யதே ||

| | | | |
|---|---|---|---|
| யுக்த: | = பகவதர்பண புத்தியால் கர்மானுஷ்டானத்தை செய்பவன் | ஆப்னோதி | = அடைகிறான். |
| | | அயுக்த: | = பகவதர்பண புத்தியால் கர்மத்தைச் செய்யாதவன் |
| கர்மப(ஃ)லம் | = கர்மத்தாலுண்டாகும் ப(ஃ)லத்தை | காமகாரேண | = ப(ஃ)லாபேக்ஷயால் கர்மங்களைச் செய்வதினால் |
| த்யக்த்வா | = விட்டு | | |
| நைஷ்டிகீம் | = ஸ்வாபாவிகமான | ப(ஃ)லே | = அற்ப பலத்தில் |
| ஶாந்திம் | = ஸ்வரூபானந்த(ஃ) ஆவிர்பா(ஃ)வ லக்ஷணமான மோக்ஷத்தை | ஸக்த: | = நேஶமுடையவனாய் |
| | | நிப(ஃ)த்(யீ)யதே | = ஸம்ஸாரத்தில் நன்றாய் மூழ்குகிறான். |

(மூ)—ஸர்வ கர்மாணி மனஸா ஸம்ந்யஸ்யாஸ்தே ஸுகம்(வ)ம் வஶீ ||
நவத்(த்)வாரே புரே தே(ஏ)ஹீ நைவ குர்வன் ந கார
யன் || 13 ||

(ப. உ..) ஸர்வகர்மாணி, மனஸா, ஸம்ந்யஸ்ய, ஆஸ்தே, ஸுக(வ)ம், வஶீ | நவத்(த்)வாரே, புரே, தே(ஏ)ஹீ, ந, ஏவ, குர்வன், ந, காரயன் ||

வஶீ = இந்த்ரியஜயமுடைய
தே(ஏ)ஹீ = மனிதன்
ஸர்வ கர்மாணி = தன்னால் செய்யப்பட்ட ஸகல கர்மங்களை
மனஸா = மனதினால்
ஸம்ந்யஸ்ய = பரமாத்மாவிடத்தில் ஸமர்ப்பித்து
ந, ஏவ, குர்வன் (ஸன்) = நானே சுதந்திரனாய்ச் செய்கிறேனென்னும் புத்தியற்றவனாய்
ந, காரயன் = நான் சுதந்திரனாக செய்விக்கிறேனென்னும் புத்தியற்றவனாய்
நவத்(த்)வாரே = கண், காது, க்(ஞ்)ராணம் முதலிய ஒன்பது த்வாரங்களுடைய
புரே = தேஹமென்னும் பட்டணத்தில்
ஸுக(வ)ம் [யதா(யா) ப(ஹ)வதி ததா(யா)] = ஸுகமுண்டாகும்படி (ஸுகத்தை அனுபவித்துக்கொண்டே)
ஆஸ்தே = இருக்கிறான்.

(மூ)—ந கர்த்ருத்வம் ந கர்மாணி லோகஸ்ய ஸ்ருஜதி ப்ரபு: (ஹு:) ||
ந கர்ம-ப(ஹ)ல-ஸம்யோக(ம்)ம் ஸ்வபா(ஹா)வஸ்து ப்ரவர்
ததே || 14 ||

(ப. உ.) ந, கர்த்ருத்வம், ந, கர்மாணி, லோகஸ்ய, ஸ்ருஜதி, ப்ரபு: (ஹு:) | ந, கர்ம-ப(ஹ)ல-ஸம்யோக(ம்)ம், ஸ்வபா(ஹா)வ:, து, ப்ரவர்ததே ||

ப்ரபு: (ஹு:) = சுதந்த்ரனான பரமாத்மா
லோகஸ்ய = ஜீவராசிகளுக்கு
கர்த்ருத்வம் = அக்னிஹோத்ரம் முதலிய கர்மங்களில் சுதந்திரமான கர்த்ருத்வத்தை
ந, ஸ்ருஜதி = பிறப்பிப்பதில்லை. (கொடுப்பதில்லை.)
கர்மாணி = கர்மங்களினால் பிறந்த அத்ருஷ்டத்தையும்
ந, ஸ்ருஜதி = பிறப்பிப்ப

| | |
|---|---|
| | தில்லை. (அத்ருஷ்டங்களிலும்ஸ்வாதந்த்ர்யத்தைக் கொடுப்பதில்லை) |
| (லோகஸ்ய) | = ப்ராணிகளுக்கு |
| கர்ம- | = கர்மம் |
| ப(ஃ)ல- | = பலம் இவைகளின் |
| யோக(ஃ)ம் | = ஸம்பந்தத்தை |
| ந, ஸ்ருஜதி | = பிறப்பிப்ப தில்லை. ப்(ஃ)லங்களில் சுதந்திரம் கொடுப்பதில்லை |
| ஸ்வபா (ஃா)வ:. து(ஏவ) | = சுதந்திரனை பரமாத்மாவே |
| ப்ரவர்ததே | = அந்தந்த வ்யாபாரங்களில் சுதந்திரனாய் ப்ரவர்திக்கிறான். |

அவதரணிகை:—பரமாத்மா எல்லா கர்மங்களையும் சுதந்திரனாய் செய்வித்துக்கொண்டிருந்தபோதிலும் தனக்கு கர்மலேபம் உண்டாவதில்லை (கர்மங்களாலுண்டாகும் பயன்களை அடைவதில்லை) என்று சொல்லுகிறான்:—

(மூ)—நாத(ஃ)த்தே கஸ்யசித் பாபம் ந சைவஸுக்ருதம் விபு:(ஃ:)||
அஞானேனுவ்ருதம் ஞானம் தேன முஹ்யந்தி ஜந்தவ: || 15 ||

(ப. உ.) ந, ஆத(ஃ)த்தே, கஸ்ய, சித், பாபம், ந, ச, ஏவ, ஸுக்ருதம், விபு:(ஃ:)| அஞானேன, ஆவ்ருதம், ஞானம், தேன, முஹ்யந்தி, ஜந்தவ:||

| | |
|---|---|
| விபு:(ஃ:) | = ஸ்வாமியான பரமாத்மா |
| கஸ்ய, சித் | = எந்த கர்மத்தின் |
| பாபம் | = பாபத்தையும் |
| ந, ஏவ ஆத(ஃ)த்தே | = ஏற்றுக் கொள்வதே இல்லை. |
| ச | = மற்றும் |
| கஸ்ய, சித் | = எந்தகர்மத்தின் |
| ஸுக்ருதம் | = புண்யத்தையும் |
| ந, ஏவ, ஆத(ஃ)த்தே | = ஏற்றுக் கொள்வதே இல்லை. |

அவதரணிகை:— பரமாத்மா எல்லாவிடத்திலும் ப்ரவர்தகனையிருப்பானேயாயின் நமக்கு ஏன் காணப்படுவதில்லை? என்கிற சங்கைக்கு பதில் சொல்லுகிறான்:—

| | |
|---|---|
| அஞானேன | = அஞானத்தால் |
| ஞானம் (ஞாயதே அனேனேதி) | = ஞானத்திற்கு ச்சாத(ய)னமான புத்தி |
| ஆவ்ருதம் | = மூடப்பட்டிருக்கிறது. |
| தேன | = புத்தியானது அஞானத்தால் மூடப்பட்டிருப்பதினுல் |
| ஜந்தவ: | = ப்ராணிகள் |
| முஹ்யந்தி | = பரமாத்மாவை தெரிந்து கொள்வதில்லை. |

(மூ)—ஞானேன து தத(ஓ)ஞானம் யேஷாம் நாஶிதமாத்மன: ||
தேஷாமாதி(தி)த்யவஜ்ஞானம் ப்ரகாஶயதி தத்பரம் || 16 ||

(ப. உ.) ஞானேன, து, தத், அஞானம், யேஷாம், நாஶிதம், ஆத்மன: | தேஷாம், ஆதி(தி)த்யவத், ஞானம், ப்ரகாஶயதி, தத், பரம் ||

| | | | |
|---|---|---|---|
| ஆத்மன: | = பரமாத்மாவின் | ஞானம், து | = அபரோக்ஷ ஞானமே |
| ஞானேன | = ஞானத்தால் | தத் | = அந்த |
| யேஷாம் | = யாருடைய | பரம் | = பரப்ரஹ்மத்தை |
| தத் | = அந்த | ஆதி(தி)த் யவத் | = சூர்யனைப் போல் |
| அஞானம் | = அஞானமானது | ப்ரகாஶயதி | = ப்ரகாஶிக்கச் செய்கிறது. |
| நாஶிதம் | = நாஶம் செய்யப் பட்டிருக்கிறதோ | | |
| தேஷாம் | = அவருடைய | | |

(மூ)—தத்(தீ)பு(ஞ)த்த(ய)ய ஸ்ததா(ஊ)த்மானஸ் தன்னிஷ்டா ஸ்தத்பராயணா: ||
க(ம)ச்ச(ஜ)ந்த்ய புனராவ்ருத்திம் ஞான-நிர்தூ(ய)த-கல் மஷா: || 17 ||

(ப. உ.) தத்(தீ)பு(ஞ)த்த(ய)ய:, ததா(ஊ)த்மான:, தன்னிஷ்டா: தத்பராயணா: | க(ம)ச்ச(ஜ)ந்தி, அபுனராவ்ருத்திம், ஞான-நிர்தூ(ய)த-கல்மஷா: ||

| | | | |
|---|---|---|---|
| தத்- | = அந்த பரமாத்மாவிடத்திலேயே | | [யா] ரென்னும் ஞானமுடைய) |
| பு(ஞ)த் த(ய)ய: | = மனதுடைய | தத்பராயணா: (ஸ: ஏவ பரம் அயனம் [ப்ராப்யம்] யேஷாம்தே) | = பரமாத்மாவையே முக்ய ப்ராப்யமுடைய |
| ததா(ஊ)த் மான: (ஸ: ஆத்மா யேஷாம் தே) | = அந்த பரமாத்மாவையே ஸ்வாமியாக உடைய (ஸ்வாமி என்றறிந்த) | ஞான- | = ஞானயோகத்தால் |
| தன்னிஷ்டா: | = பரமாத்மாவிடத்திலேயே எப்பொழுதும் ஸ்தி(தி)தியையுடைய (பரமாத்மாவே ஆதா | நிர்தூ(ய)த | = போக்கடிக்கப் பட்ட |
| | | கல்மஷா: | = பாபங்களையு |

(ப. உ.) ஸம:, ஶத்ரௌ, ச, மித்ரே, ச, ததா(யா), மானாபமானயோ:| ஶீதோஷ்ணஸுகது:க்கேஷு, ஸம:, ஸங்க(ம)விவர்ஜித: || துல்யநிந்தாஸ்துதி:, மௌனீ, ஸந்துஷ்ட:, யேன, கேன, சித் | அனிகேத:, ஸ்தி(யி)ரமதி:, ப(ஐ)க்திமான், மே, ப்ரிய:, நர: ||

ஶத்ரௌ, ச = பகைவனிடத்திலும்
மித்ரே, ச = ஸ்னேஹிதனிடத்திலும்
ஸம: = அவாளவாளிட யோக்யதையை யனுசரித்துக் காணுவனோ
ததா(யா) = அப்படியே
மானாப மானயோ: = மானமாயினும் அபமானமாயினும்
ஸம: = விகாரமற்றவனோ
ஶீத- = ஶீதம்
உஷ்ண- = உஷ்ணம் இவைகளை யடைந்தபோதிலும், மற்றும் இவைகளால் உண்டாகும்
ஸுக-து: கேஷு = ஸுக து:க்கங்களை யடைந்தபோதிலும்
ஸம: = மேன்மை தாழ்மைகளை யடையாமல் விகாரமற்றவனாயிருக்கிறானோ
ஸங்க- = பயன்களில் அன்பை
வர்ஜித: = விட்டவனோ
துல்ய நிந்தாஸ் துதி: = பிறரால் துதிக்கப்படினும், நிந்திக்கப்படினும் ஸமமாயிருப்பவனோ
மௌனீ = வீண்வார்த்தைகளை யாடாமலிருப்பவனோ
யேன, கேன, சித் = பரமாத்மாவின் இச்சையினால் அடையப்பட்டயாதொரு பொருளினாலாகிலும்
ஸந்துஷ்ட: = ஸந்தோஷப்படுபவனோ
அனிகேத: = நியதமான ஸ்தா(யா)னமற்றவனோ
ஸ்தி(யி)ரமதி: = துர்மதங்களைக் கேட்பதினால் அசைவற்ற (த்ருடமான) புத்தியுள்ளவனோ
ப(ஐ)க்திமான் = பக்தியுள்ளவனோ
ஸ:, நர: = அம்மனிதன்
மே = எனக்கு
ப்ரிய: = ப்ரீதி விஷயன்.

(மூ)—யே து த(ய)ர்ம்யாம்ருதமித(ஞ)ம் யதோ(யோ)க்தம் பர்யுபாஸதே ||
ஶ்ரத்ததா(யா)னா மத்பரமா:ப(ஐ)க்தாஸ்தேதீவ மே ப்ரியா:||20||

(ப. உ.) யே, து, த(ய)ர்ம்யாம்ருதம், இத(ஃ)ம், யதோ(யோ)க்தம், பர்யுபாஸதே | ஶ்ரத்ததா(யா)நா:, மத்பரமா:, ப(ஹ)க்தா:, தே, அதீவ, மே, ப்ரியா: ||

| | | | |
|---|---|---|---|
| யே, து | = யாரேயாகிலும் | யதா(யா) | = முன் சொல்லப் பட்டவாறு |
| ஶ்ரத்த(ஊ) தா(யா)நா: (ஸந்த:) | = ஆஸ்திக்ய பு(வு)த்தியுள்ளவர்களாய் | உக்தம் | = சொல்லப் பட்ட |
| மத்பரமா: (ஸந்த:) | = நானே (ஸ்ரீ கிருஷ்ணனே) ஸர்வோத்தமனென்கிறஞான முள்ளவர்களாய் | இத(ஃ)ம் | = இவ்வெல்லா ஸாத(ய)னத்தையும் |
| | | பர்யுபாஸதே | = நன்றாய் ஆசரிக்கிறார்களோ |
| | | ப(ஹ)க்தா: | = பக்தர்களான |
| | | தே | = அவர்கள் |
| த(ய)ர்ம் யாம்ருதம் | = தர்மத்திற்கும் மோக்ஷத்திற்கும் ஸாதனமான | மே | = எனக்கு |
| | | அதீவ | = மிகவும் |
| | | ப்ரியா: | = ப்ரீதி விஷயர்கள். |

ஓம் தத் ஸத்

ஸ்ரீமத் பகவத் கீதையில் ஸ்ரீ க்ருஷ்ணார்ஜுன ஸம்வாதத்தில்

ஶ்ரத்தாத்ரய விபாகயோகமென்னும்

பன்னிரண்டாவது அத்தியாயம் முற்றிற்று.

# பதின்மூன்றாவது அத்தியாயம்.

அவதாரணிகை :—முதற் பன்னிரண்டு அத்தியாயங்களில் சொல்லப்பட்டிருக்கும் விஷயங்களின் சுருக்கமே இவ்வத்தியாயத்தில் சொல்லப்படுகிறது. முதல் ஆறு அத்தியாயங்களில் ஆங்காங்கு இறைத்தாற்போல் சொல்லப்பட்டிருக்கும் ஞான ஸாதனங்களையும், இரண்டாவது அத்தியாயத்தில் சொல்லப்பட்ட ஜீவ பரமாத்மாக்களின் ஸ்வரூபத்தையும், ஏழாவது அத்தியாயத்தில் சொல்லப்பட்ட க்ஷேத்ரமெனப்படும் பரமாத்மாவின் வாஸஸ்தானத்தையும் ஸ்ரீ கிருஷ்ணன் எளிதில் அர்ஜுனனின் புத்தியிற்படுவதற்காகச் சுருக்கமாகச் சொல்லுகிறான் :—

அர்ஜுன உவாச—

(மூ)—ப்ரக்ருதிம் புருஷம் சைவ க்ஷேத்ரம் க்ஷேத்ரஜ்ஞ மேவ ச ||
ஏதத்(ஷீ)வேதி(ஷி)துமிச்சா(ஊா)மி ஜ்ஞானம் ஜ்ஞேயம் ச கேஶவ || 1 ||

(ப. உ.) ப்ரக்ருதிம், புருஷம், ச, ஏவ, க்ஷேத்ரம், க்ஷேத்ரஜ்ஞம், ஏவ, ச | ஏதத், வேதி(ஷி)தும், இச்சா(ஊா)மி, ஜ்ஞானம், ஜ்ஞேயம், ச, கேஶவ ||

அர்ஜுன: = அர்ஜுனன்
உவாச = வினவுகிறான்.
கேஶவ = ப்ரஹ்ம ருத்ர நியாமகனான ஸ்ரீ கிருஷ்ணா!
ப்ரக்ருதிம் = ஜட, சேதன ப்ராக்ருதிகளையும்
ச = மற்றும்
புருஷம், ஏவ = ஜீவனென்னும் புருஷனையும்
ச = மற்றும்
க்ஷேத்ரம் = பகவதாவாஸஸ்தானமாகிய (ஶரீர ஸ்தானமாகிய) க்ஷேத்ரத்தையும்
க்ஷேத்ரஜ்ஞம், ஏவ = அந்த க்ஷேத்ரத்தை ஸம்பூர்ணமாய் ப்ரத்யக்ஷீகரித்துக் கொண்டிருக்கும் பரப்ரஹ்மத்தையும்
ச = மற்றும்
ஜ்ஞானம் = அந்த ப்ரஹ்ம ஞான ஸாதனத்தையும்
ஜ்ஞேயம், ஏவ = மோக்ஷத்திற்காக அறிய வேண்டிய பரமாத்மாவையும்
ஏதத் = இவைகளெல்லாவற்றையும் (விவரமாக)
வேதி(ஷி)தும் = அறிந்து கொள்வதற்கு
இச்சா(ஊா)மி = விரும்புகிறேன்

ஸ்ரீ பகவானுவாச—

ஸ்ரீ கிருஷ்ணன் சொல்லுகிருன் :—

(மூ)—இத(௩)ம் ஶரீரம் கௌந்தேய க்ஷேத்ரமித்யபி(ஷி)தீ(யீ)யதே ||
ஏதத்(ஜீ)யோ வேத்தி தம் ப்ராஹு: க்ஷேத்ரஜ்ஞ இதி தத்(ஜீ)
வித:(௩:) || 2 ||

(ப. உ.) இத(௩)ம், ஶரீரம், கௌந்தேய, க்ஷேத்ரம், இதி, அபி(ஷி) தி(யீ)யதே | ஏதத், ய:, வேத்தி, தம், ப்ராஹு:, க்ஷேத்ரஜ்ஞ:, இதி, தத்(ஜீ) வித:(௩:) ||

கௌந்தேய = அர்ஜுன !
இத(௩)ம் = ப்ரத்யக்ஷாதி ப்ரமாணங்களினுல் ஸித்தமாயிருக்கும்
ஶரீரம் = ஶரீரம் எனின்—"மஹாபூதான்யஹங்கார:" (கீதா. 13-6, 7) ஶ்லோகங்களில் சொல்லப்படும் ஸகல பதார்த்தங்களும்)
க்ஷேத்ரம், இதி = க்ஷேத்ரமென்று
அபி(ஷி) தீ(யீ) யதே = சொல்லப்படுகிறது.
ஏதத் = இந்த மஹா பூதங்களே முதலிய ஸகல பதார்த்த ரூபமான க்ஷேத்ரத்தை
ய: = எவன்
வேத்தி = தெரிந்துகொள்கிருனே
தம் = அவ்வெல்லாவற்றையும் தெரிந்துகொண்டவனை
க்ஷேத்ரஜ்ஞ: இதி = க்ஷேத்ரஜ்ஞனென்று
தத்(ஜீ) வித: (௩:) = அந்த க்ஷேத்ரஜ்ஞனைத் தெரிந்தவர்கள்
ப்ராஹு: = சொல்லுகிருர்கள்.

(கருத்து)—"யஸ்ய ப்ருதி(யி)வீ ஶரீரம்.........யஸ்ய ஆப: ஶரீரம்" இது முதலிய ப்ருஹதாரண்யக ஶ்ருதிகளினுல் பரமாத்மாவின் ஶரீரமென்று சொல்லப்படும் மஹாபூதாதி ஸகல ப்ரபஞ்சரூபமான க்ஷேத்ரத்தைத்தெரிந்த பரமாத்மாவே க்ஷேத்ரஜ்ஞனென்று ஞானிகள் சொல்லுகிருர்கள்.

(மூ)—க்ஷேத்ரஜ்ஞஞ் சாபி மாம் வித்தி (யூ) ஸர்வ-க்ஷேத்ரேஷு பா(ஶா)ரத ||
க்ஷேத்ர-க்ஷேத்ரஜ்ஞயோர் ஜ்ஞானம் யத் தஜ்ஜ்ஞானம் மதம் மம || 3 ||

(ப. உ.) க்ஷேத்ரஜ்ஞம், ச, அபி, மாம், வித்(யி), ஸர்வ-க்ஷேத்ரேஷு, பா(ஸா)ரத| க்ஷேத்ர-க்ஷேத்ரஜ்ஞயோ:, ஜ்ஞானம், யத், தத், ஜ்ஞானம், மதம், மம ||

பா(ஸா)ரத = அர்ஜுன!
ஸர்வ-க்ஷேத்ரேஷு, அபி = க்ஷேத்ர ஶப்த வாச்யங்களான மஹாபூதாதி ஸமஸ்தபதார்த்தங்களிலும்
(ஸ்தி[யி]தம்) = இருக்கும்
க்ஷேத்ரஜ்ஞம் = க்ஷேத்ரத்தை தெரிந்திருக்கும் பரப்ரஹ்மத்தை
மாம், ச (ஏவ) = என்னையாகவே (நானென்றே)
வித்தி(யி) = தெரிந்துகொள்
க்ஷேத்ர-க்ஷேத்ரஜ்ஞயோ: = இந்த பஞ்சமஹாபூதங்களை முதலிய க்ஷேத்ரம் மற்றும் அந்த க்ஷேத்ரத்தை அறிந்த பரமாத்மா இவர்களுடைய
ஜ்ஞானம் = அறிவு
யத் = யாதுண்டோ
தத், ஜ்ஞானம் = அந்த அறிவு
மம = எனக்கு (மோக்ஷஸாதனமென்று)
மதம் = ஸம்மதமானது.

விசாரம் :— "இத(க)ம் ஶரீரம் கௌந்தேய க்ஷேத்ரமித்ய பி(ஷி)தீ(யீ)யதே" என்னும் ஶ்லோகத்தில் சொல்லிய ஶரீரமென்னும் க்ஷேத்ரத்தையே "தத் க்ஷேத்ரம் யச்ச யாத்(கீ)ருக் ச யத்(கீ)விகாரி............தத் ஸமாஸேன மே ஶ்ருணு" என்னும் ஶ்லோகத்தால் அந்த க்ஷேத்ரம் யாது? எத்தகையது? அதின் விகாரங்கள் எவை? என்னும் விஷயத்தைச் சொல்லுகிறேன் என்று சொல்லி—"மஹாபூதான்யஹங்கார:" (கீதா. 13-6, 7) இது முதலிய ஶ்லோகங்களினால் பஞ்சபூதம் முதலிய ஸகல ப்ரபஞ்சமும் க்ஷேத்ரமென்று சொல்லியிருப்பதினால் கைகால் முதலிய அவயவங்களுடன் கண்டுவரும் ஏழடியுள்ள ஶரீரமே க்ஷேத்ரமல்ல. இப்படிப்பட்ட பஞ்சமஹாபூதம் முதலிய ஸகல ஜகத்ரூபமான க்ஷேத்ரத்தை ஜீவன் தெரிந்துகொள்ள மாட்டான். தன்னுடைய ஏழடி தேஹத்தையே தெரிந்து கொள்ளமுடியாமல் வைத்தியர்களின் வீட்டிற்கு அலைந்து கொண்டிருக்கும் ஜீவன் இந்த ஸகல ப்ரபஞ்சத்தை எப்படி

தெரிந்துகொள்வான்? ஆகையால் ஜீவன் க்ஷேத்ரஜ்ஞனுகமாட்டான். மற்றும் "ஜ்ஞேயம் யத் தத் ப்ரவக்ஷ்யாமி யஜ்ஞாத்வாம்ருதமஶ்னுதே" என்னும் வாக்யத்தால் "ஜ்ஞேயனை க்ஷேத்ரஜ்ஞனைச் சொல்லுகிறேன்" என்று உறுதிகூறி "அநாதி(தி)மத் பரம் ப்ரஹ்ம" (கீதா. 13-13) என்று "க்ஷேத்ரஜ்ஞன் பரப்ரஹ்மமே" என்று ஸ்ரீ கிருஷ்ணனே சொல்லியிருக்கிருன். ஶங்கராசார்யரும் * இந்த ஶ்லோகத்திற்கு "க்ஷேத்ரஜ்ஞன் பரப்ரஹ்மம்" என்று வ்யாக்யானம் செய்திருக்கிறார்; என்ற பிறகு க்ஷேத்ராத்மகசரீரமே ஸகலமான ஜகத்து; அந்த ஸகலஜகதாத்மகமான க்ஷேத்ரத்தைத் தெரிந்தவன் பரப்ரஹ்மம் என்று கீதா ஶ்லோகங்களினுலும், ஶங்கராசார்யருடைய வ்யாக்யானத்தாலும் ஸித்தமாகிறது. ஆகையால் "க்ஷேத்ரஜ்ஞம் சாபி மாம் வித்தி(யி)" என்னும் ஶ்லோகத்திற்கு "க்ஷேத்ரஜ்ஞனை பரப்ரஹ்மம் நானே (ஸ்ரீ கிருஷ்ணனே)" என்று தெரிந்துகொள்ளென்று அர்த்தமாகிறது.

மற்றும் இந்த அர்த்தம் "பரம் ப்ரஹ்ம பரம் தாம பவித்ரம் பரமம் ப(ஹ)வான்"..........."ஆஹுஸ்த்வாம் ருஷயஸ்ஸர்வே தே(தே)வர்ஷிர் நாரத(த)ஸ்ததா(யா)| அஸிதோ தே(தே)வலோ வ்யாஸ: ஸ்வயம் சைவ ப்ரவீஷி மே| ஸர்வமேதத்(தி)ருதம்மன்யே யன்மாம் வதஸி கேஶவ||" (கீதா. 10-12, 13.) இது முதலிய ஶ்லோகங்களினுல் "பரப்ரஹ்மம் நீயே (ஸ்ரீகிருஷ்ணனே) என்று தேவர்ஷிகளான நாரதர் முதலியவர்கள் சொல்லுகிருர்கள். நீயும் (ஸ்ரீ கிருஷ்ணனும்) சொல்லுகிருய். இவ்வெல்லாம் ஸத்யமென்றே தெரிந்துகொள்கிறேன்" என்று சொல்லியிருப்பதினுல் ஸ்ரீ கிருஷ்ணனே பரப்ரஹ்மமென்று இந்த ஶ்லோகங்களுக்கு அர்த்தம் செய்வது ஸரியானதாதலால், இந்த ஶ்லோகம் க்ஷேத்ரஜ்ஞனை பரப்ரஹ்மமே ஸ்ரீ கிருஷ்ணனென்று சொல்லுகிறதேயொழிய ஜீவன் ஸ்ரீ கிருஷ்ணனென்று சொல்வதில்லை.

---

* "க்ஷேத்ரஜ்ஞோ வக்ஷ்யமாண: யஸ்ய ஸப்ரபா(ஹா)வஸ்ய க்ஷேத்ரஜ்ஞஸ்ய பரிஜ்ஞானுத் அம்ருதத்வம் ப(ஹ)வதி தம்" "ஜ்ஞேயம் யத் தத்ப்ரவக்ஷ்யாமி" இத்யாதினு ஸவிஶேஷணம் ஸ்வயமேவ வக்ஷ்யதி பகவான்.

அத்வைத மதத்தின்படிக்கே ஸ்ரீ கிருஷ்ணன் ஸகுணன், மாயிகன், பொய்யானவன், விஶிஷ்டன் ஆதலால் அந்த கிருஷ்ணனுக்கு விஶிஷ்டனான, பொய்யான, அல்பஞத்வாதிகுண விஶிஷ்டனான ஜீவனால் ஐக்யம் பொருந்தாமலிருப்பதினால் இவ்வாக்யம் ஜீவனுக்கு பரமாத்மாவுடன் (ஸ்ரீ கிருஷ்ணனுடன்) ஐக்யத்தைப் போதிப்பதில்லை.

(மூ)—தத் க்ஷேத்ரம் யச்ச யாத்(ஜ்)ருக் ச யத்(ஜ்)விகாரி யதஶ்ச யத் ||
ஸ ச யோ யத் ப்ரபா(ஶா)வஶ்ச தத் ஸமாஸேன மே ஶ்ருணு
|| 4 ||

ரு(ஷீ)ஷிபி(ஷி)ர்ப(ப)ஹுதா(யா) கீ(கீ)தம் ச(ச)ந்தோ(தோ)
பி(பி)ர்விவிதை:(தை:) ப்ருத(ய)க் ||
ப்ரஹ்மஸூத்ரபதை(தை)ஶ்சைவ ஹேதுமத்(ஜ்)பி(பி)ர்
விநிஶ்சிதம் || 5 ||

(ப. உ.) தத், க்ஷேத்ரம், யத், ச, யாத்(ஜ்)ருக், ச, யத்(ஜ்)விகாரி, யத:, ச, யத் | ஸ:, ச, ய:, யத்ப்ரபா(ஶா)வ:, ச, தத், ஸமாஸேன, மே, ஶ்ருணு || ரு(ஷீ)ஷிபி:(பி:), ப(ப)ஹுதா(யா), கீ(கீ)தம், ச(ச)ந்தோ(தோ)பி:(பி:), விவிதை:(தை:), ப்ருத(ய)க் | ப்ரஹ்மஸூத்ரபதை:(தை:), ச, ஏவ, ஹேதுமத்(ஜ்)பி:(பி:), விநிஶ்சிதம் ||

தத் = முன் ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட
க்ஷேத்ரம் = க்ஷேத்ரம்
யத் = யாது. (அதின் ஸ்வரூபம் யாது?)
ச = மற்றும்
யாத்(ஜ்)ருக் = எத்தகையது?
ச = மற்றும்
யத்(ஜ்)விகாரி = எதின் விகாரம் (அந்த க்ஷேத்ரத்திற்கு உபாதான காரணம் யாது?)
= மற்றும்

யத: = எவனால்
யத் = வ்யாபாரத்தை யுடையது? (ப்ரவர்த்திப்பது?)
ச = மற்றும்
ஸ: = அந்த ப்ரவர்த்தகனை புருஷன்
ய: = எவன்?
ச = மற்றும்
யத்ப்ரபா(ஶா)வ: = ஸாமர்த்யமுடையவன்.
யத் = எந்த க்ஷேத்ராதிகளின் ஸ்வரூபம்

| | | | |
|---|---|---|---|
| ரு(ஷீ)ஷி பி:(ஹி:) | = ருஷிகளால் (மன்வாதிஸ்ம்ருதி | | னும்) |
| ப(ஹு)ஹுதா(யா) | = பலவா [களில்) றாக | ப்ரஹ்ம ஸூத்ர பதை: (தை:), ச | = ப்ரஹ்மஸூத்ர பதங்களினு னும் |
| கி(கீ)தம் | = சொல்லப்பட்டி ருக்கிறதோ | (ப்ருத[க்]க்) | = தனித்தனியாக |
| விவிதை: (யை:) | = பற்பல விதங்க ளான | விநிஶ்சிதம் | = நிச்சயிக்கப்பட் டிருக்கிறதோ |
| ச(ஹ)ந் தோ பி:(ஹி:) | = வேதங்களினால் | மே (ஸகா ஶாத்) | = என்னால் |
| ப்ருத(க)க் (ஏவ) | = தனித்தனி யாகவே | ஸமா ஸேன (வக்ஷ்ய மாணம்) | = சுருக்கமாகச் சொல்லப் போகும் |
| (கீ[கீ]தம்) | = சொல்லப் பட்டிருக் கிறதோ | தத் | = அந்த க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞஸ்வ ரூபத்தை |
| ஹேதுமத் (த்)பி:(ஹி:) | = யுக்திகளுடன் கூடிய (யுக்தி களைச் சொல் | ஶ்ருணு | = கேள். (கேட்டு அதை நம்பு.) |

அவதாரணிகை :—ஶரீர ஶப்தத்தால் சொல்லப்படும் க்ஷேத்ரம் யாது? எத்தகையது? என்னும் கேழ்விகளுக்குப் பதிலளிக்கிறான் :—

(மூ)—மஹா பூ(ஹூ)தான்யஹங்காரோ பு(பு)த்தி(த்)ரவ்யக்த மேவ ச ||

இந்த்ரியாணி த(ஶ)ைகம் ச பஞ்ச சேந்த்ரிய-கோ(கோ) சரா: || 6 ||

இச்சா(ஹா)த்(த்)வேஷஸ்ஸுக(க)ம் து: (து:)க(க)ம் ஸங்கா (கா)தஶ்-சேதனா த்(த்)ருதி: ||

ஏதத் க்ஷேத்ரம் ஸமாஸேன ஸவிகாரமுதா(தா)ஹ்ருதம் || 7 ||

(ப. உ.) மஹாபூ(ஹூ)தானி, அஹங்கார:, புத்தி(த்தி:), அவ்யக்தம், ஏவ, ச | இந்த்ரியாணி, த(ஶ)ஶ, ஏகம், ச, பஞ்ச, ச, இந்த்ரியகோ (கோ)சரா: || இச்சா(ஹா), த்(த்)வேஷ:, ஸுக(க)ம், து:(து:)க(க)ம், ஸங்கா(கா)த:, சேதனா, த்(த்)ருதி: | ஏதத், க்ஷேத்ரம், ஸமாஸேன, ஸவிகாரம், உதா(தா)ஹ்ருதம் ||

| | | | |
|---|---|---|---|
| மஹா பூ(ஞூ)தானி | = ப்ருதிவீ, ஜலம், அக்னி, காற்று, ஆகாயம் முதலிய பஞ்ச பூதங்கள் | கோ(கோ)சரா: | = விஷயங்களான |
| அஹங்கார: | = அஹங்கார தத்வம் | பஞ்ச | = கந்தம், ரஸம், ரூபம், ஶப்தம், ஸ்பர்ஶம் என்னும் ஐந்து |
| புத்தி:(ர்பு:) | = புத்தி தத்வம் | இச்சா(ஹா) | = விருப்பம் |
| ச | = மற்றும் | த்(த்)வேஷ: | = பகை |
| அவ்யக்தம் | = ப்ரக்ருதிதத்வம் | ஸுகம் | = ஸுகம் |
| த(ஶ)ஶ | = பத்து | து:(கு:)க(வ)ம் | = து:க்கம் |
| ச | = மற்றும் | ஸங்கா(வா)த: | = ஶரீரம் |
| ஏகம் | = ஒன்று (எனின் பதினொன்று) | சேதனா | = மனதின் செய்கை |
| இந்த்ரியாணி | = (க்ராணம், ரஸனம், சக்ஷுஸ், ஶ்ரோத்ரம், த்வக், வாக், பாணி, பாத, பாயு, உபஸ்த(ஶ)ம், மனஸ் என்கிற) இந்த்ரியங்கள் | த்(த்)ருதி: | = தைர்யம் |
| | | இதி | = இவ்வாறு |
| | | ஏதத் | = இந்த பூர்வோக்தமான (முன் சொல்லப்பட்ட) |
| | | ஸவிகாரம் | = மாறுதலுடன் கூடிய |
| | | க்ஷேத்ரம் | = க்ஷேத்ரமானது |
| ச | = மற்றும் | ஸமாஸேன | = சுருக்கமாக |
| இந்த்ரிய- | = இந்த்ரியங்களுக்கு | உதா(ஹா)ஹ்ருதம் | = உரைக்கப்பட்டது. |

அவதரணிகை :—பரப்ரஹ்மமான க்ஷேத்ரஜ்ஞனை "ஜ்ஞேயம் யத் தத் ப்ரவக்ஷ்யாமி" (13-13) என்னும் ஶ்லோகத்தினால் சொல்வதற்காக பரப்ரஹ்ம ஞானத்திற்கு ஸாதனங்களான தர்மங்களை ஐந்து ஶ்லோகங்களினால் சொல்லுகிறான் :—

(மூ)—அமானித்வ-மத(ஶ)ம்பி(ஹி)த்வமஹிம்ஸா க்ஷாந்திரார்ஜவம் ||
ஆசார்யோபாஸனம் ஶௌசம் ஸ்தை(ஸ்தை)ர்ய மாத்மவினிக்(க்ரி)ரஹ: || 8 ||

(ப. உ.) அமானித்வம், அத(ம்)ம்பி(ஹி)த்வம், அஹிம்ஸா, க்ஷாந்தி:, ஆர்ஜவம் | ஆசார்யோபாஸனம், ஶௌசம், ஸ்தை(ஸ்தை)ர்யம், ஆத்ம-வினிக்(க்ரி)ரஹ: ||

அமானித்வம் = தன்னைத் துதித்துக் கொள்ளாமை
அத(ஃ)ம்பி(ஷி)த்வம் = தான் தாழ்ந்தவனென்றறிந்திருந்து தன்னிடமில்லாத பெருமையைக் காட்டாமலிருக்கை
அஹிம்ஸா = பிறரைத் துன்புறுத்தாமை
க்ஷாந்தி: = பொறுமை
ஆர்ஜவம் = மனோ வாக் காய கர்மங்களில் ஒரேவிதமாக நல்வழியிலிருக்கை
ஆசார்யோபாஸனம் = ஆசார்யரை (ஞானிகளை) ஸேவிப்பது
சௌசம் = பாஹ்யாந்தர சுத்தி
ஸ்தை(ஸ்தை)ர்யம் = பயாதிகளால் தன்னுடைய தர்மங்களை விடாமல் ஸ்திரமாயிருக்கை
ஆத்மவினிக்(ரி)ரஹ: = மனதின் அடக்கம்.

(மூ)—இந்த்ரியார்த்தே(யே)ஷு வைராக்(ஞி)யமனஹங்கார ஏவ ச ||
ஜன்ம ம்ருத்யு ஜரா வ்யாதி(யி) து:(து:)க(வ) தோ(ஷோ)ஷானுத(ஃ)ர்ஶனம் || 9 ||

(ப. உ.) இந்த்ரியார்த்தே(யே)ஷு, வைராக்(ஞி)யம், அனஹங்கார:, ஏவ, ச | ஜன்ம-ம்ருத்யு-ஜரா-வ்யாதி(யி)-து:(து:)க(வ)-தோ(ஷோ)ஷானுத(ஃ)ர்ஶனம் ||

இந்த்ரியார்த்தே(யே)ஷு = ரூபரஸகந்தாதி விஷயங்களில்
வைராக்(ஞி)யம் = வெறுப்பு
ச = மற்றும்
அனஹங்கார: = தன்னிடமில்லாத குணங்கள் தன்னிடமுண்டென்னும் மோஹமின்மை
ஏவ = மற்றும்
ஜன்ம- = பிறப்பு
ம்ருத்யு- = இறப்பு
ஜரா- = மூப்பு
வ்யாதி(யி)- = வ்யாதி இவைகளில்
து:(து:)க(வ)- = து:கத்தையும்
தோ(ஷோ)ஷ- = தோஷத்தையும்
அனுத(ஃ)ர்ஶனம் = காண்பது (இவைகள் து:கங்களைத் தரக்கூடியவை. மற்றும் துஷ்டமானவைகளென்றறிதல்)

(மூ)—அஸக்திரனபி(ஷி)ஷ்வங்க:(ஃ:) புத்ரதா(ஃா)ரக்(ஞி)ருஹாதி(ஷு)ஷு ||
நித்யம் ச ஸமசித்தத்வமிஷ்டானிஷ்டோபபத்திஷு || 10 ||

(ப. உ.) அஸக்தி:, அனபி(ஷி)ஷ்வங்க:(ங:), புத்ர-தா(ஆ)ர-க்(ரீ)ருஹாதி(ஷி)ஷு | நித்யம், ச, ஸமசித்தத்வம், இஷ்டாநிஷ்டோபபத்திஷு ||

| | |
|---|---|
| புத்ர- | = மக்கள் |
| தா(ஆ)ர- | = மனைவி |
| க்(ரீ)ருஹ- | = வீடு |
| ஆதி(ஷி)ஷு | = இது முதலியவைகளில் |
| அஸக்தி: | = இவர்கள் நம்மவர்களென்னும் நட்பின்மை |
| அனபி(ஷி) ஷ்வங்க: (ங:) | = புத்ராதிகளுக்குண்டாகும் ஸுகது:கங்களைக்கண்டு தான் ஸுகதுக்கமடையாமை |
| ச | = மற்றும் |
| நித்யம் | = எப்பொழுதும் |
| இஷ்டாநிஷ்டோபபத்திஷு | = இஷ்டம் நேரிடினும் அனிஷ்டம் நேரிடினும் |
| ஸமசித்தத்வம் | = ஒரே விதமான மனதோடிருக்கை. |

(மூ)—மயி சானன்ய யோகே(ஷ)ன பக்திரவ்யபி(ஷி)சாரிணீ ||
விவிக்த தே(ஷ)ஸஸேவித்வமரதிர்ஜன ஸம்ஸதி(ஷி) || 11 ||

(ப. உ.) மயி, ச, அனன்யயோகே(ஷ)ன, பக்தி:, அவ்யபி(ஷி)சாரிணீ| விவிக்த-தே(ஷ)ஸ-ஸேவித்வம், அரதி:, ஜனஸம்ஸதி ||

| | |
|---|---|
| ச | = மற்றும் |
| மயி | = என்னுள் (ஸ்ரீ கிருஷ்ணனில்) |
| அனன்ய யோகே (ஷ)ன | = பரமாத்மாவை விட பின்னரான சிவன் முதலியவர்களை முக்யரென்று கிரஹிக்காமலிருப்பதால் |
| அவ்ய பி(ஷி) சாரிணீ | = வ்யபி(ஷி) சரிதமாகாத (தவறாத) |
| பக்தி: | = பக்திசெய்தல் |
| விவிக்த- | = அயோக்யஜனங்களற்ற |
| தே(ஷ)ஸ ஸேவித்வம் | = தேஸத்திலிருக்கை |
| ஜன- | = அயோக்ய ஜனர்களின் |
| ஸம்ஸதி(ஷி) | = கோஷ்டியில் |
| அரதி: | = ஆஸக்தியின்மை. |

(மூ)—அத்(த்யீ)யாத்மஜ்ஞான நித்யத்வம் தத்வஜ்ஞானார்த்த(ய)த(ஷ)ர்ஸனம் ||
ஏதஜ்ஜ்ஞானமிதி ப்ரோக்தமஜ்ஞானம் யத(ஷ)தோன்யதா(யா) || 12 ||

(ப. உ.) அத்(த்யீ)யாத்ம-ஜ்ஞான-நித்யத்வம், தத்வஜ்ஞானார்த்தத(ஷ)ர்ஸனம் | ஏதத், ஜ்ஞானம், இதி, ப்ரோக்தம், அஜ்ஞானம், யத், அத:, அன்யதா(யா) ||

அத்(யீ)யாத்ம- } = பரமாத்ம விஷயகமான
ஜ்ஞான- = ஞானத்தில்
நித்யத்வம் = எப்பொழுதும் நிலைபெற்றிருத்தல்
தத்வஜ்ஞான- } = பகவத்தத்வப்ரோக்ஷத்திற்காக
அர்த்த- = ஶாஸ்த்ரங்களின்
த(ஃ)ர்ஶனம் } = விசாரம்
ஏதத் = (அமானித்வம் முதலிய) இவைகளெல்லாம்
ஞானம், இதி = ஞானஸாதனமென்று
ப்ரோக்தம் = சொல்லப்பட்டிருக்கிறது.
அத: = இவற்றைக்காட்டிலும்
அன்யதா (ஶா) } = வேறானது
யத் = யாதுண்டோ
தத் = அது
அஜ்ஞானம் = ஞானத்திற்கு ஸாதனமல்லாதது
இதி = என்று
ப்ரோக்தம் = சொல்லப்பட்டிருக்கிறது.

அவதரணிகை :—க்ஷேத்ரத்தைச் சொல்லி, க்ஷேத்ரஜ்ஞனின் ஞானத்திற்கு ஸாதனத்தையும் சொல்லி "க்ஷேத்ரஜ்ஞன் யார்? அவனிட ப்ரபாவம் யாது?" என்னும் வினாக்களுக்கு "க்ஷேத்ரஜ்ஞன் பரப்ரஹ்மமே" என்று பதிலளிக்கிறான்:—

(மூ)—ஜ்ஞேயம் யத் தத் ப்ரவக்ஷ்யாமி யஜ்ஞாத்வாம்ருதமஶ்னுதே ||
அனாதி(தி)மத் பரம் ப்ரஹ்ம ந ஸத் தன்னாஸது(ஃ)ச்யதே|| 13 ||

(ப. உ.) ஜ்ஞேயம், யத், தத், ப்ரவக்ஷ்யாமி, யத், ஜ்ஞாத்வா, அம்ருதம், அஶ்னுதே | அனாதி(தி)மத், பரம், ப்ரஹ்ம, ந, ஸத், தத், ந, அஸத், உச்யதே ||

யத் = எந்த க்ஷேத்ரஜ்ஞனை
ஞாத்வா = தெரிந்துகொண்டு
அம்ருதம் = மோக்ஷத்தை
அஶ்னுதே = அடைகிறானோ
யத் = எந்த க்ஷேத்ரஜ்ஞன்
ஜ்ஞேயம் = மோக்ஷத்திற்காக தெரிந்துகொள்வதற்கு ஆவஶ்யகமானவனோ
தத் = அந்த க்ஷேத்ரஜ்ஞனை
ப்ரவக்ஷ்யாமி = ஸரியாகச் சொல்லுகிறேன்.
தத் = அந்த க்ஷேத்ரஜ்ஞன்
பரம், ப்ரஹ்ம = பரப்ரஹ்மமே.
அனாதி(தி)மத் } = உற்பத்தியுள்ள ப்ராக்ருதங்களான தேஹேந்-

| | | | |
|---|---|---|---|
| | த்ரிய கர்மாதி களை யற்றது. | | களான (கண்ணுக்கு காணப் படாத) வாயுவு ஆகாயங்களை விட விலக்ஷண மானது |
| ந, ஸத் | = மூர்த்தங்களான (கண்ணுக்குக் காணப்படும்) ப்ருதிவீ, ஜலம், தேஜஸ்ஸுகளை விட விலக்ஷண மானது. | இதி | = என்று |
| | | உச்யதே | = சொல்லப் படுகிறது. |
| ந, அஸத் | = அமூர்த்தங் | | |

(மூ)—ஸர்வத: பாணிபாத(ந்)ம் தத் ஸர்வதோக்ஷி ஶிரோமுக(வ)ம் ||
ஸர்வதஶ்ஶ்ருதிமல்லோகே ஸர்வமாவ்ருத்ய திஷ்டதி || 14 ||

(ப. உ.) ஸர்வத:, பாணி-பாத(ந்)ம், தத், ஸர்வத:, அக்ஷி-ஶிரோ-முக(வ)ம் | ஸர்வத:, ஶ்ருதிமத், லோகே, ஸர்வம், ஆவ்ருத்ய, திஷ்டதி ||

| | | | |
|---|---|---|---|
| தத் | = அந்த ப்ரஹ்மம் | | ளிலும் |
| ஸர்வத: | = எல்லா விடங்களிலும் | ஶ்ருதிமத் | = காதுகளுடையது. |
| பாணிபாத(ந்)ம் | = கைகால்களுடையது. | லோகே | = உலகத்தில் |
| ஸர்வத: | = எல்லா விடங்களிலும் | ஸர்வம் | = எல்லாப் பொருள்களையும் |
| அக்ஷி- | = கண் | ஆவ்ருத்ய | = உள்ளும் வெளியிலும் வ்யாபித்துக் கொண்டு |
| ஶிர:- | = சிரஸ்ஸு | | |
| முக(வ)ம் | = முகம் இவைகளை யுடையது. | | |
| ஸர்வத: | = எல்லாவிடங்க | திஷ்டதி | = இருக்கிறது. |

(கருத்து) :—பின்னால் சொல்லிக்கொள்ளப்பட்ட ஜ்ஞேயன் = பரப்ரஹ்மம் தேஶ கால குணங்களிலும் நிருப சரித வ்யாப்தி யுள்ளது; எல்லாவற்றையு மறிந்தது.

(மூ)—ஸர்வேந்த்ரியகுணாபா(ஶா)ஸம் ஸர்வேந்த்ரியவிவர்ஜிதம் ||
அஸக்தம் ஸர்வப்(஭ி)ருச்சைவநிர்குணம் குணபோ(஭ோ)க்த்ரு ச || 15 ||

(ப. உ.) ஸர்வேந்த்ரிய-கு(ண)ண-பா(ஶா)ஸம், ஸர்வேந்த்ரிய-விவர்ஜிதம் | அஸக்தம், ஸர்வப்(஭ி)ருத், ச, ஏவ, நிர்கு(ண)ணம், கு(ண)ண போ(஭ோ)க்த்ரு, ச ||

ஸர்வ- = ஸகலமான
இந்த்ரிய- = இந்த்ரியங்கள்
கு(௩)ண- = ஶப்தம்முதலிய குணங்கள் இவைகளுக்கு
அவபா(௪)ஸம் = ப்ரகாஶகமானது.
ஸர்வ- = ஸகலமான
இந்த்ரிய- = ப்ராக்ருதேந்த்ரியங்களை
வர்ஜிதம் = அற்றது.
அஸக்தம் = புண்ய பாபங்களின் ஸம்பந்தமற்றது.
ச = மற்றும்
ஸர்வ- = எல்லாவற்றையும்
ப்(௪)ருத் = தரிப்பது.
ஏவ = மற்றும்
* நிர்கு(௩)ணம் = ஸத்வரஜஸ்தமோகுணங்களையற்றது.
ச = மற்றும்
கு(௩)ண போ(௪)க்த்ரு = ஆனந்தாதி கல்யாணகுணங்களையனுபவித்துக்கொண்டிருப்பது.

(மூ)—ப(௩)ஹிரந்தஶ்ச பூ(௪)தாநாமசரம் சரமேவ ச ||
ஸூக்ஷ்மத்வாத் தத(௩)விஜ்ஞேயம் தூ(௩)ரஸ்த(௨)ம் சாந்
திகே ச தத் || 16 ||

(ப. உ.) ப(௩)ஹி:, அந்த:, ச, பூ(௪)தாநாம், அசரம், சரம், ஏவ, ச | ஸூக்ஷ்மத்வாத், தத், அவிஜ்ஞேயம், தூ(௩)ரஸ்த(௨)ம், ச, அந்திகே, ச, தத் ||

தத் = அந்த பரப்ரஹ்மம்
பூ(௪)தாநாம் = ப்ராணிகளிட
ப(௩)ஹி: = வெளியிலும்
அந்த:, ச = உள்ளும்
(திஷ்டதி) = இருக்கின்றது.
அசரம் = தன்னிடம் ஸர்வஜ்ஞத்வாதி குணங்களால் எப்பொழுதும் அசையாமல் இருப்பது. (எப்பொழுதும் குணபூர்ணமானது.)
சரம், ஏவ = ஸகல தேசங்களிலும் ஸஞ்சரிப்பதே.
ச = மற்றும்
ஸூக்ஷ்மத்வாத் = ஸூக்ஷ்மமாதலால்
தத் = அந்தப்ரஹ்மம்
அவிஜ்ஞேயம் = ஸாதாரண ஜனங்களால் ப்ராக்ருதங்களான சக்ஷுராதிகளால்

* ஶங்கராசார்யரும் தம்மிட பாஷ்யத்தில் இவ்வாறே வ்யாக்யானம் செய்திருப்பதால் இப்பதத்திற்கு பரமாத்மா நிர்குணன் = ஸகலதர்ம ரஹிதன் என்று அத்வைதிகள் அர்த்தம் செய்வது அஸங்கதமாகும்.

தெரிந்து கொள்வதற்கு முடியாதது. (…லால்)

தூ(ஊ)ரஸ்த(ய)ம் = தூரத்திலிருப்பது.

ச = மற்றும்

ச = மற்றும்

தத் = அந்த ப்ரஹ்மம் (வ்யாப்தமாத…

அந்திகே = ஸமீபத்தில்

ஸ்தி(யி)தம் = இருப்பது.

(மூ)—அவிப(ஹ)க்தம் ச பூ(ஹூ)தேஷு விப(ஹ)க்தமிவ ச ஸ்தி(யி)தம் ||
பூ(ஹூ)தப(ஹ)ர்த்ரு ச தஜ்ஜ்ஞேயம் க்(ரீ)ரஸிஷ்ணு ப்ரப(ஹ)விஷ்ணு ச || 17 ||

(ப. உ.) அவிப(ஹ)க்தம், ச, பூ(ஹூ)தேஷு, விப(ஹ)க்தம், இவ, ச, ஸ்தி(யி)தம்| பூ(ஹூ)தப(ஹ)ர்த்ரு, ச, தத், ஜ்ஞேயம், க்ரஸிஷ்ணு, ப்ரப(ஹ)விஷ்ணு, ச ||

தத் = அந்த ப்ரஹ்மம்

பூ(ஹூ)தேஷு = வெவ்வேறான ப்ராணிகளில்

அவிப(ஹ)க்தம், ச = ஏவ = வெவ்வேறாகாமலே (ஒன்றாகவே) இருப்பினும் (ஸகல ப்ராணிகளினும் அவைகளுக்கு நியாமகமாய் ஒன்றாகவே யிருப்பினும்)

விப(ஹ)க்தம், இவ, ஸ்தி(யி)தம் = வெவ்வேறானதைப்போல்இருப்பது. (அந்தந்த பதார்த்தங்களில் நியாமகங்களாயிருக்கும் பரமாத்மாவின் ரூபங்களுக்கு பேதமில்லாவிடினும் அஜ்ஞானிகளுக்கு வெவ்வேருரூபங்களையுடையதென்றுதோன்றுவது)

ச = மற்றும்

பூ(ஹூ)தப(ஹ)ர்த்ரு = ப்ராணிகளை தரிப்பது, ரக்ஷிப்பது.

ச = மற்றும்

க்(ரீ)ரஸிஷ்ணு = (ப்ரளய காலத்தில் எல்லாவற்றையும்) பக்ஷிப்பது (நசிக்கச் செய்வது).

ச = மற்றும்

ப்ரப(ஹ)விஷ்ணு = (ஸ்ருஷ்டிகாலத்தில் எல்லாவற்றையும்) ஸ்ருஷ்டிப்பது

(இதி) = என்று

ஜ்ஞேயம் = அறியப்படத் தகுந்தது.

(மூ)—ஜ்யோதிஷாமபி தத் ஜ்யோதிஸ்தமஸ: பரமுச்யதே ||
ஜ்ஞானம் ஜ்ஞேயம் ஜ்ஞானக(ம)ம்யம் ஹ்ருதி(தி) ஸர்வஸ்ய விஷ்டிதம் || 18 ||

(ப. உ.) ஜ்யோதிஷாம், அபி, தத், ஜ்யோதி:. தமஸ:, பரம், உச்யதே| ஜ்ஞானம், ஜ்ஞேயம், ஜ்ஞானக(ம)ம்யம், ஹ்ருதி(தி), ஸர்வஸ்ய, விஷ்டிதம் ||

| | | | |
|---|---|---|---|
| தத் | = அந்த ப்ரஹ்மம் | உச்யதே | = ஶ்ருத்யாதிகளில் சொல்லப்படுகிறது. |
| ஜ்யோதிஷாம், அபி | = ஸூர்யாதிகளுக்கும் | ஜ்ஞானம் | = ப்ரகாசரூபமானது. |
| ஜ்யோதி: | = ப்ரகாசன சக்தியைக் கொடுப்பது. | ஜ்ஞேயம் | = தன்னாலேயே அறியப்படத் தகுந்தது. (ஸ்வப்ரகாசம்.) |
| தமஸ: | = ஸத்வரஜஸ்தமோகுணாத்மகமான ப்ரக்ருதி, ம்ருத்யு அஜ்ஞானம் இவைகளை | ஜ்ஞான- | = அபரோக்ஷ ஞானத்தால் |
| | | க(ம)ம்யம் | = மோக்ஷத்தில் அடைவதற்கு யோக்யமானது. |
| பரம் | = மீறியிருப்பது (ஸத்வரஜஸ்தமோகுணாத்மகமான ப்ரக்ருதியினால் கட்டுப்படாதது) | ஸர்வஸ்ய | = எல்லா ப்ராணிகளின் |
| | | ஹ்ருதி(தி) | = ஹ்ருதயத்தில் |
| | | விஷ்டிதம் | = நியாமகமாயிருப்பது. |
| (இதி) | = என்று | | |

(மூ)—இதி க்ஷேத்ரம் ததா(யா) ஜ்ஞானம் ஜ்ஞேயம் சோக்தம் ஸமாஸத: ||
மத்(தீ)ப(ப)க்த ஏதத் விஜ்ஞாய மத்(தீ)பா(பா)வாயோபபத்(தீ)யதே || 19 ||

(ப. உ.) இதி, க்ஷேத்ரம், ததா(யா), ஜ்ஞானம், ஜ்ஞேயம், ச, உக்தம், ஸமாஸத: | மத்(தீ)ப(ப)க்த:, ஏதத், விஜ்ஞாய, மத்(தீ)பா(பா)வாய, உபபத்(தீ)யதே ||

| | | | |
|---|---|---|---|
| இதி | = இவ்வாறு | | தானி' இது முதலிய இரண்டு ஶ்லோகங்களி |
| க்ஷேத்ரம் | = க்ஷேத்ரமானது | | |
| உக்தம் | = ['மஹா பூ(பூ)- | | |

| | | | |
|---|---|---|---|
| | னால்] சொல்லப் பட்டது. | | லாததால்) சுருக் கமாக |
| ததா(யா) | = மற்றும் | உக்தம் | =('ஜ்ஞேயம் யத் தத் ப்ரவக்ஷ்யாமி' இது முதலிய ச்லோகங்களினால்) சொல்லப்பட்டிருக் கிறான். |
| ஜ்ஞானம் | = ஞான ஸாதனமும் | | |
| உக்தம் | =('அமானித்வம்' இது முதலிய முன் ச்லோகங்களினால்) சொல்லப்பட்டிருக்கிறது. | ஏதத் | = இவைகளை |
| | | மத்- | = என்னிட |
| ச | = மற்றும் | ப(ப)க்த: | = பக்தன் |
| ஜ்ஞேயம் | = மோக்ஷத்திற்காகத் தெரிந்துகொள்வதற்கு யோக்யனான பரமாத்மா (பரப்ரஹ்மம்) | விஜ்ஞாய | = தெரிந்துகொண்டு |
| | | மத்(ஃ)பா(ஹா)வாய [மயி பா(ஹா)வ:மத்பாவ:] | = என்னிடத்திலேயே இருப்பதற்கு (ஸாயுஜ்ய மோக்ஷத்தை யடைவதற்கு) |
| ஸமாஸத: | = (எல்லாவற்றையும் சொல்வதற்கு முடிவதல் | உபபத்(ஃ)யதே | = தகுந்தவனாகிறான். |

(மூ)—ப்ரக்ருதிம் புருஷம் சைவ வித்யனாதீ(ஃ) உபா(ஹா)வபி ||
விகாராம்ஸ்ச கு(ஃ)ணாம்ஸ்சைவ வித்தி(ஃ) ப்ரக்ருதிஸம்
ப(ஹ)வான் || 20 ||

(ப. உ.) ப்ரக்ருதிம், புருஷம், ச, ஏவ, வித்தி(ஃ), அனாதீ(ஃ), உபௌ(ஹௌ), அபி, | விகாரான், ச, கு(ஃ)ணான், ச, ஏவ, வித்தி(ஃ), ப்ரக்ருதி ஸம்ப(ஹ)வான் ||

| | | | |
|---|---|---|---|
| ப்ரக்ருதிம் | = இருபத்தைந்து தத்வஸ்வரூபமான ப்ரக்ருதி, மற்றும் ததபிமானியாகிய மஹாலக்ஷ்மி | உபௌ (ஹௌ), அபி | = இவ்விரு வகையான ப்ரக்ருதி புருஷர்களையும் |
| | | அனாதி(ஃ) ஏவ | = அனாதியாயிருப்பவர்களென்றே (உற்பத்தியற்றவர்களென்றே) |
| புருஷம் | = பரமாத்மா, ஜீவன் என்னும் இப்புருஷர்கள் | | |

| | | | |
|---|---|---|---|
| வித்தி(யி) | = அறி. | கு(ஂகு)ணான் | = ஸத்வரஜஸ் தமோகுணங்களையும் |
| ச | = மற்றும் | ப்ரக்ருதி-ஸம்ப(ஂவ)வான் | = ப்ரக்ருதியினால் பிறந்தவைகளாகவே |
| விகாரான் | = இச்சைமுதலிய விக்ருத (மாருதலடைந்த) பதார்த்தங்களையும் | வித்தி(யி) | = அறி. |
| ச | = மற்றும் | | |

(மூ)—கார்யகாரண கர்த்ருத்வே ஹேது: ப்ரக்ருதிருச்யதே ||
புருஷஸ்ஸுக(வ) து:(க்க:)கா(வா)னும் போ(ஹோ)க்த்ருத்வே
ஹேதுருச்யதே || 21 ||

(ப. உ.) கார்ய-காரண-கர்த்ருத்வே, ஹேது:, ப்ரக்ருதி:, உச்யதே | புருஷ:, ஸுக-து:க்கானும், போ(ஹோ)க்ருத்வே, ஹேது:, உச்யதே ||

| | | | |
|---|---|---|---|
| ப்ரக்ருதி: | = ப்ரக்ருதியானது | புருஷ: | = பரமாத்மா |
| கார்ய- | = ஜீவனின் தேஹம் | ஸுகது:க்கானும் | = (ஜீவனின்)ஸுக து:க்கங்களின் |
| காரண- | = இந்த்ரியங்கள் | போ(ஹோ)க்த்ருத்வே | = அநுபவத்தில் |
| கர்த்ருத்வே | = இவைகளை பிறப்பிப்பதில் | ஹேது: | = காரணன் |
| ஹேது: | = காரணம் | (இதி) | = என்று |
| (இதி) | = என்று | உச்யதே | = சொல்லப்படுகிருன். |
| உச்யதே | = சொல்லப்படுகிறது. | | |

(மூ)—புருஷ: ப்ரக்ருதிஸ்தோ(யோ) ஹி பு(ஞ)ங்க்தே ப்ரக்ருதி
ஜான் கு(ஂகு)ணான் ||
காரணம் கு(ஂகு)ணஸங்கோ(ஂகோ)ஸ்ய ஸத(ஂ)ஸத்(ஂ)யோனி
ஜன்மஸு || 22 ||

(ப. உ.) புருஷ:, ப்ரக்ருதிஸ்த:(ய:), ஹி, பு(ஞ)ங்க்தே, ப்ரக்ருதிஜான், கு(ஂகு)ணான் | காரணம், கு(ஂகு)ணஸங்க:(ஂக:), அஸ்ய, ஸத(ஂ)ஸத்(ஂ) யோனி, ஜன்மஸு ||

| | | | |
|---|---|---|---|
| ப்ரக்ருதிஸ்த:(ய) | = ப்ரக்ருத்யாத்மகமான சரீரத்திலிருக்கும் | கு(ஂகு)ணான் | = ஸுகது:க்காதிகளை |
| புருஷ: | = ஜீவன் | பு(ஞ)ங்க்தே | = உண்ணு (அநுபவிக்கிருன்) |
| ப்ரக்ருதிஜான் | = ப்ரக்ருதியால் பிறந்த | (இதி) | = என்பது |
| | | ஹி | = எல்லாருக்கும் |

| | | | |
|---|---|---|---|
| | அநுபவ ஸித்த மானது. | ஜன்மஸு | = பிறப்பதில் |
| அஸ்ய | = இந்த ஜீவனுக்கு | கு(கு)ண- | = ஸுகாதிகளில் (செய்யும்) |
| ஸத்- | = உத்தமமான | ஸங்க: | = நேஹமே |
| அஸத்- | = நீசமான | காரணம் | = காரணமானது. |
| யோனி | = ஜாதிகளில் | | |

கருத்து:—ஸுகத்திலும், பார்யா புத்ராதிகளிடத்திலும் நேஹம்செய்து அவர்களை அடைவதற்காகப் பலவகைகளான துஷ்டாதுஷ்ட கர்மங்களைச் செய்வதினுல் கெட்ட யோனியிலும் நல்ல யோனியிலும் ஜன்மமுண்டாகிறது.

அவதாரணிகை :—ஜீவனைப்போல் பரமாத்மாவும் ப்ரக்ருத்யாத்மகமான சரீரத்திலிருந்தபோதிலும் மஹா ஶக்தியுடையவனுதலாலும் ஸ்வதந்திர சேதனனுதலாலும் ப்ராக்ருதி ஸம்பந்தங்களாகிய ஸுகது:க்காதிகளை அனுபவிப்பவனல்ல. ஜீவனின் வ்யாபாரங்களைப் பார்த்துக்கொண்டும் அவைகளை அநுமோதித்துக்கொண்டும் அவனை ரக்ஷிப்பவனுயிருக்கிறுனென்று சொல்லுகிறுன் :—

(மூ)—உபத்(தீ)ரஷ்டானுமந்தா ச ப(ஂ)ர்தா போ(ஜோ)க்தா மஹேஶ்வர: ||
பரமாத்மேதி சாப்யுக்தோ தே(டே)ஹேஸ்மின் புருஷ: பர: || 23 ||

(ப. உ.) உபத்(தீ)ரஷ்டா, அநுமந்தா, ச, ப(ஂ)ர்தா, போ(ஜோ)க்தா, மஹேஶ்வர: | பரமாத்மா, இதி, ச, அபி, உக்த:, தே(டே)ஹே, அஸ்மின், புருஷ:, பர: ||

| | | | |
|---|---|---|---|
| அஸ்மின் | = இந்த | | அநுமோதிப்பவன் |
| தே(டே)ஹே | = சரீரத்தில் | ப(ஂ)ர்தா | = ஸகல ஜகத்தையும் தரித்தவன் போஷிப்பவன். |
| [ஸ்தி(யி)த:] | = இருக்கும் | | |
| பர: | = ஜீவனை விட பின்னனுன | போக்தா | = ஸகல கர்மபலங்களின் ஸாரத்தையும் புசிப்பவன். |
| புருஷ: | = பரமாத்மா | | |
| உபத்(தீ) ரஷ்டா | = ஜீவன் செய்யும் வ்யாபாரங்களை காண்பவன். | | |
| ச | = மற்றும் | ச | = மற்றும் |
| அநுமந்தா | = ஸகல வ்யாபாரங்களையும் | மஹேஶ்வர: | = ஸம்பூர்ண ஶக்தியுடையவனுத |

| | | | |
|---|---|---|---|
| | லால் மஹா ஸ்வாமி | பரமாத்மா | = பரமசேதனன் |
| இதி | = என்று | இதி, அபி | = என்றும் |
| உக்த: | = ஶ்ருதி முதலியவைகளில் சொல்லப்பட்டிருக்கிருன். | உக்த: | = ஶ்ருதி முதலியவைகளில் சொல்லப்பட்டவன். |

(மூ)—ய ஏனம் வேத்தி புருஷம் ப்ரக்ருதிம் ச கு(ஃ)ணைஸ்ஸஹ ||
ஸர்வதா(தா) வர்தமானேபி ந ஸ பூ(ஃ)யோபி(ஹி) ஜாயதே
|| 24 ||

(ப. உ.) ய:, ஏனம், வேத்தி, புருஷம், ப்ரக்ருதிம், ச, கு(ஃ)ணை:, ஸஹ | ஸர்வதா(தா), வர்தமான:, அபி, ந, ஸ:, பூ(ஃ)ய:, அபி(ஹி) ஜாயதே ||

| | | | |
|---|---|---|---|
| ய: | = எவன் | வேத்தி | = அறிகிருனே |
| ஏனம் | = இந்த | ஸ: | = அவன் |
| புருஷம் | = ஜீவ பரமாத்மாக்களென்றும் இருவகை புருஷர்களையும் | ஸர்வதா(தா) | = ப்ரமாதத்தினுல் அன்யாயகார்யங்களில் |
| ச | = மற்றும் | வர்தமான:, அபி | = ப்ரவ்ருத்தனுயிருந்தபோதிலும் |
| ப்ரக்ருதிம் | = ஜடம், சேதனம் என்னும் இருவகை ப்ரக்ருதியையும் | பூ(ஃ)ய: | = மறுபடியும் |
| | | ந, அபி(ஹி) ஜாயதே | = பிறப்பதில்லை. (பரமாத்மாவின் அபரோக்ஷ ஞான த்வாரா முக்தனுகிருன்) |
| குணை:, ஸஹ | = அவ்வவைகளின் லக்ஷணங்களுடன் | | |

**தாத்பர்யம்** :—ஜீவன் ப்ரக்ருதி குணங்களால் கட்டுப்பட்டவனுய் ஸுகது:க்காதிகளை அனுபவிப்பவன், ஜீவனைவிட பின்னனுன பரமாத்மா மஹா ஶக்தியுள்ளவனுதலால் ப்ராக்ருதி ஸம்பந்தமான ஸுகது:க்காதிகளை யனுபவிக்காமல் அவைகளுக்கு நியாமகனுய் இருப்பவன், ஜடப்ரக்ருதி ஜீவர்களுக்கு தன்னிட ஸத்வரஜஸ்தமோகுணங்களால் ஸுகது:கங்களைப் பிறப்பிப்பது, சேதன ப்ரக்ருதி (மஹாலக்ஷ்மி) பரமாத்மாவுக்கு அடங்கியு

வனாய் ஜடப்ரக்ருதிக்கு நியாமகனாயிருப்பவன் என்னும் லக்ஷணங்களுடன் கூடிய-ஜீவன், பரமாத்மா, ஜடப்ரக்ருதி, சேதன ப்ரக்ருதி இதுகளை யறிந்தவன் ப்ரமாதத்தினால் எவ்வித நிலைமையி லிருந்தபோதிலும் முக்தனாகிறான்.

அவதரணிகை :—பரமாத்மாவின் அபரோக்ஷ ஞானமுண்டாகும் வழியைச் சொல்லுகிறான் :—

(மூ)—த்(யி)யானேனாத்மனி பஶ்யந்தி கேசிதா(ஆ)த்மானமாத்மனா ||
அன்யே ஸாங்க்யேன யோகே(ே)ன கர்மயோகே(ே)ன
சாபரே || 25 ||

(ப. உ.) த்(யி)யானேன, ஆத்மனி, பஶ்யந்தி, கே, சித், ஆத்மானம், ஆத்மனா | அன்யே, ஸாங்க்யேன, யோகே(ே)ன, கர்மயோகே(ே)ன, ச, அபரே ||

| | |
|---|---|
| கேசித் | = ஶ்ரவண மனனாதிகளைச் செய்த சிலர் |
| ஆத்மானம் | = பரமாத்மாவை |
| த்(யி)யானேன | = த்யானத்தினால் |
| ஆத்மனா | = மனதினால் |
| ஆத்மனி | = ஶரீரத்தில் |
| பஶ்யந்தி | = காண்கின்றனர். |
| அன்யே | = மற்றும் சிலர் (ஶாஸ்த்ரத்தாலுண்டாகிய ஞான மற்றவராய், ஶாஸ்த்ர ஶ்ரவணத்தைச் செய்வதற்கு ஶக்தரானவர்கள்) |
| ஸாம்க்யேன, யோ(ே)கேன | = ஶாஸ்த்ரங்களினால் பிறக்கும் ஞான ரூபமாகிய உபாயத்தாலும் (ஶ்ரவணம் செய்து மனனத்யானாதிகளைச் செய்தும்) |
| ச | = மற்றும் |
| அபரே | = ஶ்ரவணம் செய்வதில் திறமையற்றவர்கள் |
| கர்மயோகேன | = பகவதர்பண புத்தியுடன் செய்யப்படும் கர்ம ரூபமான உபாயத்தினாலும் (பகவதர்பண புத்தியால் கர்மத்தைச் செய்து, மனதைசுத்தப்படுத்திக்கொண்டு ஶ்ரவணத்தைச் செய்யும் ஸாமர்த்யத்தைச் சம்பாதித்து ஶ்ரவண மனனங்களின் மூலமாய் த்யானம் செய்தும்) |
| (ஆத்மானம்) | = பரமாத்மாவை |
| (ஆத்மனி) | = ஶரீரத்தில் |
| (ஆத்மனா) | = மனதினால் |
| (பஶ்யந்தி) | = காண்கின்றார்கள். |

(மூ)—அன்யே த்வேவமஜானந்த: ஶ்ருத்வான்யேப்(ஷ்)ய உபாஸதே ||
தேபி சாதிதரம்த்யேவ ம்ருத்யும் ஶ்ருதிபராயணா: || 26 ||

(ப. உ.) அன்யே, து, ஏவம், அஜானந்த:, ஶ்ருத்வா, அன்யேப்(ஷ்)ய:, உபாஸதே | தே, அபி, ச, அதிதரந்தி, ஏவ, ம்ருத்யும், ஶ்ருதிபராயணா: ||

| | | | |
|---|---|---|---|
| ஏவம் | = இவ்வாறு | தே, அபி, ச | = அவர்களும் |
| அஜானந்த: | = பரமாத்மாவை தெரிந்து கொள்ளாத | ஶ்ருதிபராயணா: (ஸந்த:) | = ஶ்ரவணத்தில் ஆஸக்தராய் (அடிக்கடி ஶ்ரவணம் செய்து) |
| அன்யே, து | = மற்றும் சிலர் | | |
| அன்யேப்(ஷ்)ய: | = பிறரால் | ம்ருத்யும் | = மரணத்தை (ஸம்ஸாரத்தை) |
| ஶ்ருத்வா | = பரமாத்மாவைக் கேட்டுதெரிந்து கொண்டு | அதிதரந்தி, ஏவ | = கடந்தே தீருகிறார்கள். (ஸம்ஸாரதுக்கங்களைக் கடந்து விடுகிறார்கள்.) |
| உபாஸதே | = த்யானம் செய்கின்றனர். | | |

(மூ)—யாவத் ஸம்ஜாயதே கிஞ்சித்ஸத்வம் ஸ்தா(யா)வரஜங்க(ம)மம்||
க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞ ஸம்யோகா(மா)த் தத்(ஜி)வித்தி(யி) ப(ஹ)ரதர்ஷப(ஹ) || 27 ||

(ப. உ.) யாவத், ஸம்ஜாயதே, கிஞ்சித், ஸத்வம், ஸ்தா(யா)வரஜங்க(ம)மம் | க்ஷேத்ர-க்ஷேத்ரஜ்ஞ-ஸம்யோகா(மா)த், தத், வித்தி(யி), ப(ஹ)ரதர்ஷப(ஹ) ||

| | | | |
|---|---|---|---|
| ப(ஹ)ரதர்ஷப(ஹ) | = அர்ஜுன! | | ப்ராணிஸமூகங்களும் |
| யாவத், கிஞ்சித் | = எந்தெந்த | க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞ ஸம்யோ(மா)த் | = ப்ரக்ருதி, பரமாத்மாக்களின் ஸம்பந்தத்தால் |
| ஸ்தா(யா)வரஜங்கமம் | = ஸ்தாவரஜங்கமாத்மகமான | ஸம்ஜாயதே | = பிறக்கின்றன |
| ஸத்வம் | = ப்ராணி ஸமூகமுளதோ | (இதி) | = என்று |
| | | வித்தி(யி) | = தெரிந்துகொள் |
| தத் | = அவ்வெல்லா | | |

(மூ)—ஸமம் ஸர்வேஷு பூ(ஹ-ு)தேஷு திஷ்டந்தம் பரமேஶ்வரம்||
விநஶ்யத்ஸ்வவிநஶ்யந்தம் ய: பஶ்யதி ஸ பஶ்யதி || 28 ||

(ப. உ.) ஸமம், ஸர்வேஷு, பூ(ஹ-ு)தேஷு, திஷ்டந்தம், பரமேஶ்வரம் | விநஶ்யத்ஸு, அவிநஶ்யந்தம், ய:, பஶ்யதி, ஸ:, பஶ்யதி ||

| | | | |
|---|---|---|---|
| ய: | = எவன் | வினஶ்யத்ஸு | = அந்த ப்ராணிகள் ஜனன மரண து:க்காதி ரூபமான நாஶத்தை அடைந்த போதிலும் |
| ஸர்வேஷு பூ(ஸு)தேஷு | = உச்ச நீசங்களான ஸகல ப்ராணிகளிலும் | அவினஶ்யந்தம் | = ஜனன மரண து:க்கங்களை அடையாமலிருப்பவனாக |
| ஸமம் [யதா(ஶா) ஸ்யாத் ததா(ஶா)] | = உச்சத்வம், நீசத்வம் இவைகளை அடையாமலேயே ஸமானாய் எப்படி இருக்க வேண்டுமோ அப்படி | பஶ்யதி | = காண்கிறானோ |
| திஷ்டந்தம் | = இருக்கும் | ஸ: | = அவன் |
| பரமேஶ்வரம் | = பரமாத்மாவை | பஶ்யதி | = பரமாத்மாவின் நிஜ ஞானத்தை யுடையவன். |

(மூ)—ஸமம் பஶ்யன் ஹி ஸர்வத்ர ஸமவஸ்தி(யி)தமீஶ்வரம் ||
ந ஹினஸ்த்யாத்மனாத்மானம் ததோ யாதி பராம் க(ஃ)திம்
|| 29 ||

(ப. உ.) ஸமம், பஶ்யன், ஹி, ஸர்வத்ர, ஸமவஸ்தி(யி)தம், ஈஶ்வரம் |
ந, ஹினஸ்தி, ஆத்மனா, ஆத்மானம், தத:, யாதி, பராம், க(ஃ)திம் ||

| | | | |
|---|---|---|---|
| ஸர்வத்ர | = உச்ச நீசங்களான எல்லா ப்ராணிகளிலும் | பஶ்யன் (ஸன்) | = காண்பவனாய் |
| ஸமவஸ்தி(யி)தம் | = நிர்தோஷனாயும் குணபூர்ணனாயும் இருக்கும் | ஆத்மனா | = தன் புத்தியினால் |
| ஈஶ்வரம் | = பரமாத்மாவை | ஆத்மானம் | = தன்னை |
| ஸமம் [யதா(ஶா) ஸ்யாத் ததா(ஶா)] | = உத்தம நீசஸ்தானங்களிலிருந்த போதிலும் உச்சத்வ நீசத்வங்களை அடையாமல் ஸமனாயிருப்பவனென்று | ந, ஹினஸ்தி | = நரகம் முதலிய அனர்த்த ரூபமான நாஶத்தை யடைவிப்பதில்லை. |
| | | தத: | = அந்த ஞானத்தால் |
| | | பராம் | = உத்தமமான |
| | | க(ஃ)திம் | = மோக்ஷத்தை |
| | | யாதி | = அடைகிறான். |
| | | ஹி | = ப்ரஸித்த(ய்ய)ம். |

அவதாரிகை :—பரமாத்மா ஸகல கர்மங்களையும் ஜீவர்களால் செய்வித்து பலத்தைக் கொடுப்பவனுயின் ஒரு ஜீவனுல் துஷ்டகர்மத்தைச் செய்வித்து துஷ்டபலத்தைக் கொடுப்பதினுலும், ஒரு ஜீவனுல் நற்கர்மங்களைச் செய்வித்து நல்ல பலங்களைக் கொடுப்பதினுலும், வைஷம்யம், நைர்க்ருண்யம் (தயையில்லாமை) என்னும் தோஷங்கள் ப்ராப்தமாகின்றன என்னும் சங்கைக்கு பதில் அளிக்கிருன் :—

(மூ)—ப்ரக்ருத்யைவ ச கர்மாணி க்ரியமாணனி ஸர்வஶ: ||
ய: பஶ்யதி ததா(ஆ)த்மானமகர்தாரம் ஸ பஶ்யதி || 30 ||

(ப. உ.) ப்ரக்ருத்யா, ஏவ, ச, கர்மாணி, க்ரியமாணனி, ஸர்வஶ: | ய:, பஶ்யதி, ததா(ஆ), ஆத்மானம், அகர்தாரம், ஸ:, பஶ்யதி ||

| | | | |
|---|---|---|---|
| ய: | = எவன் | (இதி) | = என்று |
| ஸர்வஶ: | = ஸகலமான | பஶ்யதி | = தெரிந்து கொள்கிருனே |
| கர்மாணி | = கர்மங்களை | ததா(ஆ) | = மற்றும் |
| ச | = (பூர்வ ப்ரஸக்தனை) பரமாத்மாவினுல் | ஆத்மானம் | = தன்னை (ஜீவனை) |
| | | அகர்தாரம் | = சுதந்திர கர்தா அல்லவென்று |
| ப்ரக்ருத்யா, ஏவ | = பூர்வகர்மத்தை உத்போதனை செய்தே (பூர்வ கர்மானுஸாரமாகவே) | (பஶ்யதி) | = அறிகிருனே |
| | | ஸ: | = அவன் |
| | | பஶ்யதி | = பரமாத்மாவை அபரோக்ஷமாய் காண்கிருன். |
| க்ரியமாணனி | = செய்விக்கப் படுகின்றன | | |

தாத்பர்யம் :—"வைஷம்ய நைர்க்(க)ருண்யேன ஸாபேக்ஷத்வாத்ததா(ஆ) ஹி த(த)ர்ஶயதி" (2-1-35) என்னும் ஸூத்ரத்தில், மற்றும் அந்த ஸூத்ரத்தில் ஸூசிக்கப்பட்ட "புண்யோவை புண்யேன கர்மணு ப(ப)வதி பாப: பாபேன" (ப்ரு. 3-2-13) என்னும் ஶ்ருதியினும் சொல்லியிருக்கிறவாறு அந்தந்த ஜீவர்களின் பூர்வ கர்மங்களையனுஸரித்தே கர்மங்களைச் செய்வித்து பலங்களைக்கொடுக்கிருன். ஆகையால் பரமாத்மாவுக்கு வைஷம்யம் முதலிய தோஷங்கள் வருவதில்லை. இவ்விதமாக எவன் தெரிந்து கொள்கிருனே, மற்றும் எவன் "நான் சுதந்திர கர்தா அல்ல" வென்று தெரிந்துகொள்கிருனே அவன் அபரோக்ஷஞானியாகிருன்.

(மூ)—யதா(தா) பூ(ஹூ)தப்ருத(ய)க்(கீ)பா(ஹா)வ மேகஸ்த(ய)மனு பஶ்யதி ||
தத ஏவ ச விஸ்தாரம் ப்ரஹ்ம ஸம்பத்(ஜீ)யதே ததா(தா) || 31 ||

(ப. உ.) யதா(தா), பூ(ஹூ)த - ப்ருத(ய)க்(கீ)பா(ஹா)வம், ஏகஸ்த(ய)ம், அனுபஶ்யதி | தத:, ஏவ, ச, விஸ்தாரம், ப்ரஹ்ம, ஸம்பத்(ஜீ)யதே, ததா(தா) ||

| | |
|---|---|
| யதா(தா) | = எக்காலத்தில் |
| பூத- | = பூதங்களின் (ப்ராணிகளின்) |
| ப்ருதக் பாவம் | = பேதத்தை |
| ஏகஸ்த(ய)ம் | = ஒருவனேயாகிய பரமாத்மாவில் இருப்பதாக |
| அனுபஶ்யதி | = காண்கின்றானோ |
| ச | = மற்றும் |

| | |
|---|---|
| தத, ஏவ, | = அந்த பரமாத்மாவினாலேயே |
| விஸ்தாரம் | = (ப்ராணிகளின்) உத்பத்தியையும் |
| அனுபஶ்யதி | = காண்கின்றானோ |
| ததா(தா) | = அக்காலத்தில் |
| ப்ரஹ்ம | = பரமாத்மாவை |
| ஸம்பத்(ஜீ)யதே | = அடைகிறான். |

தாத்பர்யம் :—ஸகல ப்ராணிகளுக்கு பரஸ்பர பேதத்தையும், அந்த பின்னரான பிராணிகள் பரமாத்மாவில் இருப்பதையும், பரமாத்மாவினால் பிறப்பதையும் அறிபவன் பரமாத்மாவை அடைகிறான் (முக்தனாகிறான்).

(மூ)—அனாதி(தி)த்வான்னிர்கு(ண)ணத்வாத் பரமாத்மாயமவ்யய: ||
ஶரீரஸ்தோ(யோ)பி கௌந்தேய ந கரோதி ந லிப்யதே || 32 ||

(ப. உ.) அனாதி(தி)த்வாத், நிர்கு(ண)ணத்வாத், பரமாத்மா, அயம், அவ்யய: | ஶரீரஸ்த:(ய:), அபி, கௌந்தேய, ந, கரோதி, ந, லிப்யதே ||

| | |
|---|---|
| கௌந்தேய | = அர்ஜுன |
| அயம் | = இந்த |
| பரமாத்மா | = பரமாத்மா |
| ஶரீரஸ்த:(ய:), அபி | = நாஶமடையும் சரீரத்தில் இருந்தபோதிலும் |
| அனாதி(தி) த்வாத் | = பிறப்பில்லாதவனதலாலும் |

| | |
|---|---|
| நிர்கு(ண) ணத்வாத் | = ஸத்வ ரஜஸ் தமோ குணங்களின் ஸம்பந்த மற்றவனதலாலும் |
| அவ்யய: | = நாஶரஹிதன். |
| ந, லிப்யதே | = கர்மபலங்களின் ஸம்பந்த மடை |

| | | |
|---|---|---|
| | வதில்லை | சொல்லப் படுகிறான் அல்லது பலாபேக்ஷையினால் கர்மங்களைச் செய்பவனல்ல). |
| (அத, ஏவ) | = அக்காரணத்தாலேயே | |
| ந, கரோதி | = கர்மங்களைச் செய்பவனல்ல. (கர்மங்களைச் செய்பவன் அல்லவென்று | |

(மூ)—யதா(யா) ஸர்வக(ம)தம் ஸௌக்ஷ்ம்யாதா(ஹா)காஶம் நோபலிப்யதே ||
ஸர்வத்ராவஸ்தி(யி)தோ தே(ஏ)ஹே ததா(யா)த்மா நோபலிப்யதே || 33 ||

(ப. உ.) யதா(யா), ஸர்வக(ம)தம், ஸௌக்ஷ்ம்யாத், ஆகாஶம், ந, உபலிப்யதே | ஸர்வத்ர, அவஸ்தி(யி)த:, தே(ஏ)ஹே, ததா(யா), ஆத்மா, ந, உபலிப்யதே ||

| | | | |
|---|---|---|---|
| யதா(யா) | = எப்படி | ஆத்மா | = பரமாத்மா |
| ஆகாஶம் | = ஆகாயம் | ஸர்வத்ர | = நீச உச்சங்களாகிய ஸகலமான |
| ஸர்வக(ம)தம், அபி | = ஸகல பதார்த்தங்களில் இருந்தபோதிலும் | தேஹே | = சரீரங்களில் |
| ஸௌக்ஷ்ம்யாத் | = ஸூக்ஷ்மமாதலால் | அவஸ்தி(யி)தம், அபி | = இருந்த போதிலும் |
| ந, உபலிப்யதே | = அந்த பதார்த்தங்களின் குணதோஷங்களால் ஸம்பந்தப்படுவதில்லையோ | ந, உபலிப்யதே | = தேஹத்தின் குணதோஷங்களின் ஸம்பந்தமுடையவனுவதில்லை. |
| ததா(யா) | = அப்படியே | | |

(மூ)—யதா(யா) ப்ரகாஶயத்யேக: க்ருத்ஸ்னம் லோகமிமம் ரவி: ||
க்ஷேத்ரம் க்ஷேத்ரீ ததா(யா) க்ருத்ஸ்னம் ப்ரகாஶயதி பா(ஹா)ரத || 34 ||

(ப. உ.) யதா(யா), ப்ரகாஶயதி, ஏக:, க்ருத்ஸ்னம், லோகம், இமம், ரவி: | க்ஷேத்ரம், க்ஷேத்ரீ, ததா(யா), க்ருத்ஸ்னம், ப்ரகாஶயதி, பாரத ||

| | | | |
|---|---|---|---|
| பாரத | = அர்ஜுன | ஏக: | = ஒருவனான |
| யதா(யா) | = எவ்வாறு | ரவி: | = ஸூர்யன் |

| | | | |
|---|---|---|---|
| க்ருத்ஸ்னம் | = ஸகலமான | | பரமாத்மா |
| இமம் | = இந்த | க்ருத்ஸ்னம் | = இந்த ஸமஸ்தமான |
| லோகம் | = ப்ரபஞ்சத்தை | க்ஷேத்ரம் | = க்ஷேத்ரத்தை (மஹா பூதாதி தத்வ ஸமூஹத்தை) |
| ப்ரகாஶயதி | = ப்ரகாஶமுடையதாகச் செய்கின்றானோ | ப்ரகாஶயதி | = ப்ரகாஶிக்கச் செய்கின்றான். |
| ததா(யா) | = அவ்வாறே | | |
| க்ஷேத்ரீ | = க்ஷேத்ரத்தில் இருக்கும் க்ஷேத்ரஜ்ஞனை | | |

(மூ)—க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞயோ ரேவமந்தரம் ஜ்ஞான-சக்ஷுஷா ||
பூ(ஶு)தப்ரக்ருதி மோக்ஷம் ச யே விது(ஞு)ர்யாந்தி தே
பரம் || 35 ||

(ப. உ.) க்ஷேத்ர-க்ஷேத்ரஜ்ஞயோ:, ஏவம், அந்தரம், ஜ்ஞான-சக்ஷுஷா|
பூ(ஶு)த-ப்ரக்ருதி-மோக்ஷம், ச, யே, விது:(ஞு:), யாந்தி, தே, பரம் ||

| | | | |
|---|---|---|---|
| யே | = யார் | பூ(ஶு)த- | = ப்ராணிகளுக்கு |
| க்ஷேத்ர-க்ஷேத்ரஜ்ஞயோ: | = க்ஷேத்ரம் (ஸகலமானஜகத்து) மற்றும் க்ஷேத்ரஜ்ஞனை பரமாத்மா இவர்களின் (இவர்களுக்கு) | ப்ரக்ருதி- | = ப்ரக்ருதியிலிருந்து |
| | | மோக்ஷம் | = மோக்ஷத்திற்குக் காரணமாகிய அமானித்வம் முதலியஸாதனங்களையும் |
| ஏவம் | = முன் சொல்லப்பட்டவாறு | ஜ்ஞான சக்ஷுஷா | = விவேகத்ருஷ்டியால் |
| அந்தரம் | = வைலக்ஷண்யத்தையும் | விது:(ஞு): | = தெரிந்துகொள்கிறார்களோ |
| ச | = மற்றும் | தே | = அவர்கள் |
| | | பரம் | = பரப்ரஹ்மத்தை |
| | | யாந்தி | = அடைகிறார்கள். |

**தாத்பர்யம்:**—எந்த ஜனங்கள் "பரமாத்மா ஸகல பதார்த்தங்களுக்கும் ப்ரேரகன், உத்பாதகன், ஸகல பதார்த்தங்களைவிட வேறானவன். எல்லா பதார்த்தங்களுக்கும் ப்ரகாஶகன். ஸூர்யன் முதலானவர்களுக்கு ப்ரகாசக சக்தியைக் கொடுப்பவன். இவைகளே முதலிய அனேக குணங்களை யுடையவன்" என்று தெரிந்து கொள்கிறார்களோ அவர்கள் பரமாத்மாவை அடைகிறார்கள்

என்று ப்ராப்ய ப்ராபக பாவத்தைச் சொல்வதால் பரமாத்மாவுக்கும் ஜீவனுக்கும் பேதம், மற்றும் மோக்ஷத்திற்கு குணபூர்ணத்வ ஞானமே காரணம் என்று சொல்வதினுல் "பேதஞானமே மோக்ஷத்திற்குக் காரணமென்றும் அபேதஞானம் (ஐக்யஞானம்) மோக்ஷத்திற்குக் காரணமாகாது" என்றும் ஸித்திக்கின்றது.

ஓம் தத் ஸத்

ஸ்ரீமத் பகவத் கீதையில் ஸ்ரீ க்ருஷ்ணார்ஜுன ஸம்வாதத்தில்

க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞ விபாகயோக மென்னும்

பதின்மூன்றுவது அத்தியாயம் முற்றிற்று.

---

# பதினான்காவது அத்தியாயம்.

ஸ்ரீ பகவானுவாச—

(மூ)—பரம் பூ(௪)ய: ப்ரவக்ஷ்யாமி ஜ்ஞானானாம் ஜ்ஞானமுத்தமம்||
யஜ்ஜ்ஞாத்வா முனயஸ்ஸர்வே பராம் ஸித்திமிதோ க(௩)தா:
|| 1 ||

(ப. உ.) *பரம், பூ(௪)ய:, ப்ரவக்ஷ்யாமி, ஜ்ஞானானாம், ஜ்ஞானம், உத்தமம் | யத், ஜ்ஞாத்வா, முனய:, ஸர்வே, பராம், ஸித்தி(௪)ம், இத:, க(௩)தா: ||*

| | | | |
|---|---|---|---|
| ஸ்ரீபகவான் | = ஸ்ரீகிருஷ்ணன் | பரம் | = முன் சொன்னதைவிட வேறேயான |
| உவாச | = சொல்லுகிறான் | ஜ்ஞானானாம் | = தெரிந்து கொள்வதற்கு யோக்யமான வஸ்துக்களில் |
| யத் | = எதை | உத்தமம் | = மேலான |
| ஜ்ஞாத்வா | = தெரிந்து கொண்டு | ஜ்ஞானம் | = தெரிந்து கொள்வதற்கு யோக்யமான வஸ்துவை |
| ஸர்வே | = ஸமஸ்தரான | ப்ரவக்ஷ்யாமி | = சொல்லுகிறேன். |
| முனய: | = ஞானிகள் | | |
| இத: | = இந்த ஸம்ஸாரத்தினின்றும் | | |
| பராம் | = மேலான | | |
| ஸித்திம் | = மோக்ஷத்தை | | |
| க(௩)தா: | = அடைந்தனரோ | | |
| தத் | = அந்த | | |
| பூ(௪)ய: | = மற்றும் | | |

(மூ)—இத(௩)ம் ஜ்ஞானமுபாஶ்ரித்ய மம ஸாத(௪)ர்ம்ய மாக(௩)தா:||
ஸர்கே(௩)பி நோபஜாயந்தே ப்ரளயே ந வ்யத(௪)ந்தி ச || 2 ||

(ப. உ.) *இத(௩)ம், ஜ்ஞானம், உபாஶ்ரித்ய, மம, ஸாத(௪)ர்ம்யம், ஆக(௩)தா:| ஸர்கே(௩), அபி, ந, உபஜாயந்தே, ப்ரளயே, ந, வ்யத(௪)ந்தி, ச ||*

| | | | |
|---|---|---|---|
| இத(௩)ம் | = முன் சொல்லப் போகும் பதார்த்த விஷயகமான ஞானத்தை | உபாஶ்ரித்ய | = ஸம்பாதித்துக் கொண்டு |
| | | மம | = என்னிட |

| | | | |
|---|---|---|---|
| ஸாத(ய)ர்ம்யம் | = ஸமான தர்மத்தை | ந, உபஜாயந்தே | = பிறப்பதில்லை. |
| ஆக(ம)தா: | = அடைகின்றனர் | ச | = மற்றும் |
| ஞானிகள் அடையும் அந்த ஸமான தர்மங்களைச் சொல்லுகிறான் :— | | ப்ரளயே | = ப்ரளயகாலத்தில் |
| ஸர்கே (ம), அபி | = ஸ்ருஷ்டி காலத்திலும் | ந, வ்யத(ய)ந்தி | = துக்கப்படுவதில்லை. |

(மூ)—மம யோனிர்மஹத் ப்ரஹ்ம தஸ்மின் க(ம)ர்ப(ஹ)ம் த(ஆ)தா(யா)ம்யஹம் ||
ஸம்ப(ஹ)வ: ஸர்வபூ(ஹு)தானாம் ததோ ப(ஹ)வதி பா(ஹா)ரத || 3 ||

(ப. உ.) மம, யோனி:, மஹத், ப்ரஹ்ம, தஸ்மின், க(ம)ர்ப(ஹ)ம், த(ஆ)தா(யா)மி, அஹம் | ஸம்ப(ஹ)வ:, ஸர்வ-பூ(ஹு)தானாம், தத:, ப(ஹ)வதி, பா(ஹா)ரத ||

| | | | |
|---|---|---|---|
| பாரத | = ஓ அர்ஜுன ! | த(ஆ)தா(யா)மி | = வைக்கிறேன். |
| மஹத் | = பெரியதான | தத: | = அக்கர்ப்பத்தை வைப்பதினால் |
| ப்ரஹ்ம | = சித்ப்ரக்ருதி (மஹாலக்ஷ்மி) | ஸர்வ- | = ஸகல |
| மம | = என்னிட | பூ(ஹு)தானாம் | = பிராணிகளின் |
| யோனி: | = பார்யை. | ஸம்ப(ஹ)வ: | = தேக ஸம்பந்தரூபமான பிறப்பு |
| தஸ்மின் | = அந்த சித் ப்ரக்ருதியில் | ப(ஹ)வதி | = உண்டாகிறது. |
| அஹம் | = நான் | | |
| க(ம)ர்ப(ஹ)ம் | = கர்ப்பத்தை | | |

அவதாரணிகை :—வெறும் ஸ்ருஷ்டி ஆரம்பத்தில் மாத்திரமே இந்த ப்ரக்ருதி புருஷர்கள் இந்த ஸகல ப்ராணிகளுக்கும் பிறப்புக்குக் காரணர்களென்றல்ல, எப்பொழுதும் காரணர்களென்று சொல்லுகிறான்.

(மூ)—ஸர்வயோனிஷு கௌந்தேய மூர்தய: ஸம்ப(ஹ)வந்தி யா: ||
தாஸாம் ப்ரஹ்ம மஹத்யோனிரஹம் பீ(ஜ)ஜப்ரத:(ஆ:) பிதா || 4 ||

(ப. உ.) ஸர்வ-யோனிஷு, கௌந்தேய, மூர்தய:, ஸம்ப(ஃ)வந்தி, யா: | தாஸாம், ப்ரஹ்ம, மஹத், யோனி:, அஹம், பீ(ஃ)ஜப்ரத:(ஃ:), பிதா ||

| | | | |
|---|---|---|---|
| கௌந்தேய | = ஓ அர்ஜுன ! | மஹத், ப்ரஹ்ம | = மஹாலக்ஷ்மி |
| ஸர்வ- | = தேவ மனுஷ்ய திர்யகாதி ஸகல | யோனி: | = க்ஷேத்ர ரூபமான காரணம் (தாய்). |
| யோனிஷு | = யோனிகளில் | | |
| யா: | = எந்த | அஹம் | = நான் |
| மூர்தய: | = தேஹங்கள் | பீ(ஃ)ஜப்ரத:(ஃ:) | = கர்பத்தைத் தரிக்கச் செய்யும் |
| ஸம்ப(ஃ) வந்தி | = பிறக்கின்றனவோ | | |
| தாஸாம் | = அந்த தேஹங்களுக்கு | பிதா | = தந்தை. |

அவதாரணிகை :—குணத்ரயத்தினு லுண்டாகும் பந்தத்தின் விதத்தைச் சொல்லுகிறான் :—

(மூ)—ஸத்வம் ரஜஸ்தம இதி கு(ஃ)ணு: ப்ரக்ருதி ஸம்ப(ஃ)வா: ||
நிப(ஃ)த்னந்தி மஹாபா(ஃ)ஹோ தே(ஃ)ஹே தே(ஃ)ஹினமவ்யயம் || 5 ||

(ப. உ.) ஸத்வம், ரஜ:, தம:, இதி, கு(ஃ)ணு:, ப்ரக்ருதி-ஸம்ப(ஃ)வா: | நிப(ஃ)த்னந்தி, மஹாபாஹோ, தேஹே, தேஹினம், அவ்யயம் ||

| | | | |
|---|---|---|---|
| மஹாபா(ஃ)ஹோ | = மஹா பாஹு சாலியான அர்ஜுன! | | குணபிமானி தேவதைகளும் |
| ப்ரக்ருதி- | = ப்ரக்ருதியினுல் | தே(ஃ)ஹே | = தேஹத்தில் |
| ஸம்ப(ஃ)வா: | = உண்டான | (ஸ்திதம்) | = இருக்கும் |
| ஸத்வம் | = ஸத்வகுணம் | அவ்யயம் | = ஸ்வரூபத்தினுல் நாசமற்ற |
| ரஜ: | = ரஜோகுணம் | | |
| தம: | = தமோகுணம் | தே(ஃ)ஹினம் | = ஜீவனை |
| இதி | = என்று | | |
| கு(ஃ)ணு: | = மூன்று குணங்களும் அந்த | நிப(ஃ)த்னந்தி | = கட்டுகின்றன. |

(மூ)—தத்ர ஸத்வம் நிர்மலத்வாத் ப்ரகாசகமனுமயம் ||
ஸுக(ஃ)ஸங்கே(ஃ)ன ப(ஃ)த்னு(ஃ)தி ஞான ஸங்கே(ஃ)ன சானக(ஃ) || 6 ||

(ப. உ.) தத்ர, ஸத்வம், நிர்மலத்வாத், ப்ரகாஶகம், அநாமயம்| ஸுக(வ)ஸங்கே(ஶே)ன, ப(ப)த்நா(நா)தி, ஜ்ஞான-ஸங்கேன, ச, அனக(வ) ||

| | | | |
|---|---|---|---|
| அனக(வ) | = பாபமற்ற அர்ஜுன! | ப்ரகாஶகம் (ஸத்) | = தத்வ ஜ்ஞானத்தை யுண்டாக்கத் தக்கதாயுமிருந்து |
| தத்ர | = அத்தேவதைகளுள்ளும் அக்குணங்களுள்ளும் | ஸுக(வ)- ஸங்கேன | = ஸுகத்தின் ஸம்பந்தத்தினாலும் |
| ஸத்வம் | = ஸத்வ குணமும் அதின் அபிமானி தேவதையான ஸ்ரீதேவியும் | ச | = மற்றும் |
| நிர்மலத்வாத் | = நிர்மலமாயிருப்பதினால் | ஜ்ஞான ஸங்கேன | = ஜ்ஞானத்தின் ஸம்பந்தத்தினாலும் |
| அநாமயம் (ஸத்) | = ஆரோக்யத்தை யுண்டாக்கத் தக்கதாயும் | தே(தே)ஹினம் | = ஸாத்விகஜீவனை |
| | | ப(ப)த்நா(நா)தி | = கட்டுகிறது. |

(மூ)—ரஜோ ராகா(ஶா)த்மகம் வித்தி(த்தி) த்ருஷ்ணாஸங்க(ஸ) ஸமுத்ப(ப)வம் ||

தன்னிப(ப)த்நா(நா)தி கௌந்தேய கர்மஸங்கே(ஶே)ன தே(தே)ஹினம் || 7 ||

(ப. உ.) ரஜ:, ராகாத்மகம், வித்தி(த்தி), த்ருஷ்ணா-ஸங்க(ஸ)-ஸமுத்ப(ப)வம்| தத், நிப(ப)த்நா(நா)தி, கௌந்தேய, கர்ம-ஸங்கே(ஶே)ன, தே(தே)ஹினம் ||

| | | | |
|---|---|---|---|
| கௌந்தேய | = ஓ அர்ஜுன! | | |
| த்ருஷ்ணா- | = ஆசையையும் | | |
| ஸங்க- | = வஸ்துக்களில் ஸ்னேஹத்தையும் | வித்தி(த்தி) | = தெரிந்துகொள் |
| ஸமுத்ப(ப)வம் | = பிறப்பிக்கும் | தத் | = அந்த ரஜோ குணமும், ரஜோபிமானி தேவதையும் |
| ரஜ: | = ரஜோ குணத்தையும், ரஜோபிமானி தேவதையையும் | தேஹினம் | = ஜீவனை |
| | | கர்ம- | = கர்மத்தின் |
| | | ஸங்கேன | = ஸம்பந்தத்தினால் |
| ராகா(ஶா)த்மகம் | = பதார்த்தங்களைப் படைத்து ப்ரகாபிக்கச் செய்பவர்களாக | நிபத்நா(நா)தி | = கட்டுகிறது. |

(மூ)—தமஸ்த்வஜ்ஞானஜம் வித்தி(ப்³) மோஹனம் ஸர்வதே(³)
ஹிநாம் ||
ப்ரமாதா(³)லஸ்ய நித்ராபி(⁴)ஸ்தன்னிப(³)த்நா(ஞா)தி பா
(⁴)ரத || 8 ||

(ப. உ.) தம:, து, அஜ்ஞானஜம், வித்தி(ப்³), மோஹனம், ஸர்வ-தே(³)ஹிநாம் | ப்ரமாதா(³)-லஸ்ய-நித்ராபி:(⁴:), தத், நிப(³)த்நா(ஞா)தி, பா(⁴)ரத ||

| | | | |
|---|---|---|---|
| பா(⁴)ரத | = ஓ அர்ஜுன! | வித்தி(ப்³) | = தெரிந்துகொள் |
| அஜ்ஞானஜம் | = அஞ்ஞானத்திற்குக் காரணமான | தத் | = அந்த தமோபிமானி தேவதையும், தமோ குணமும் |
| தம:, து | = தமோ குணாபிமானி தேவதை, மற்றும் தமோ குணமும் | ப்ரமாத- | = செய்ய வேண்டிய கார்யங்களில் அஜாக்ரதை |
| ஸர்வ- தே(³) ஹிநாம் | = ஜீவர்களுக்கு | ஆலஸ்ய- | = சோம்பல் |
| மோஹனம் | = மித்யா ஜ்ஞானத்தைப் பிறப்பிக்கிறது | நித்ராபி:(⁴:) | = உறக்கம் இவைகளால் |
| (இதி) | = என்று | நிப(³)த் நா(ஞா)தி | = கட்டுகின்றது. |

(மூ)—ஸத்வம் ஸுகே(²)வே ஸஞ்ஜயதி ரஜ: கர்மணி பாரத ||
ஜ்ஞானமாவ்ருத்ய து தம: ப்ரமாதே(³) ஸஞ்ஜயத்யுத || 9 ||

(ப. உ.) ஸத்வம், ஸுகே(²)வே, ஸஞ்ஜயதி, ரஜ:, கர்மணி, பாரத | ஜ்ஞானம், ஆவ்ருத்ய, து, தம:, ப்ரமாதே(³), ஸஞ்ஜயதி, உத ||

| | | | |
|---|---|---|---|
| பாரத | = பரத குலோத்பன்னனான அர்ஜுன! | | படி செய்கின்றனர். |
| ஸத்வம் | = ஸத்வ குணமும் ஸத்வாபிமானி ஸ்ரீ தேவியும் | ரஜ: | = ரஜோ குணமும், ரஜோபிமானி பூதேவியும் |
| ஸுகே(²)வே | = ஸுக விஷயத்தில் | கர்மணி | = கர்ம விஷயத்தில் |
| ஸஞ்ஜயதி | = ஜீவர்களை ப்ரவர்த்திக்கும் | ஸஞ்ஜயதி | = ஜீவர்களை ப்ரவர்திக்கும் |

| | | | |
|---|---|---|---|
| | படி செய்கின்றனர். | ப்ரமாதே(த₃) | = அதர்மம், அதர்மபுத்தி, அஜாக்ரதை இவைகளிலும் |
| தம:, து | = தமோகுணமும், தமோபிமானி துர்காதேவியும் | உத | = மற்றும் சோம்பல் முதலியவைகளிலும் |
| ஜ்ஞானம் | = மனதின் தத்வஜ்ஞான ஶக்தியை | ஸஞ்ஜயதி | = ப்ரவர்த்திக்கும்படி செய்கிறது. |
| ஆவ்ருத்ய | = மறைத்து (தடுத்து) | | |

அவதரணிகை:—ஸத்வரஜஸ்தமோகுணங்கள் மூன்றுமிருக்க ஒவ்வொருவருக்கு ஒவ்வொரு குணத்தின் கார்யமே எப்படி ஆகிறது? என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறான் :—

(மூ)—ரஜஸ்தமஶ்சாபி(ஷி)பூ(ப⁴)ய ஸத்வம் ப(ப⁴)வதி பா(பா⁴)ரத ||
ரஜஸ்ஸத்வம் தமஶ்சைவ தமஸ்ஸத்வம் ரஜஸ்ததா(தா²) || 10 ||

(ப. உ.) ரஜ:, தம:, ச, அபி(ஷி)பூ(ப⁴)ய, ஸத்வம், ப(ப⁴)வதி, பா(பா⁴)ரத | ரஜ:, ஸத்வம், தம:, ச, ஏவ, தம:, ஸத்வம், ரஜ:, ததா(தா²) ||

| | | | |
|---|---|---|---|
| பா(பா⁴)ரத | = பரதகுலோத்பன்னனான அர்ஜுனா ! | ததா(தா²), ஏவ | = அவ்வாறே |
| ரஜ: | = ரஜோகுணத்தையும் | ரஜ: | = அதிகரித்த ரஜோகுணம் |
| ச | = மற்றும் | ஸத்வம் | = ஸத்வகுணத்தையும் |
| தம: | = தமோகுணத்தையும் | ச | = மற்றும் |
| அபி(ஷி)பூ(ப⁴)ய | = அடக்கி | தம: | = தமோகுணத்தையும் |
| ஸத்வம் | = அதிகரித்த ஸத்வகுணமானது | அபி(ஷி)பூ(ப⁴)ய | = அடக்கி |
| ப(ப⁴)வதி | = தன்னிடகார்யத்தைச் செய்வதிலேயே திறமையுடையதாகிறது. | [ப(ப⁴)வதி] | = தன்னிடகார்யத்தைச் செய்வதிலேயே திறமையுள்ளதாகிறது. |
| | | தம: | = அதிகரித்த தமோகுண |

| | |
|---|---|
| | மானது |
| ஸத்வம் | = ஸத்வ குணத்தையும் |
| ரஜ: | = ரஜோ குணத்தையும் |
| அபி(ஹி) பூ(ஹூ)ய | = அடக்கி |
| [ப(ஹ)வதி] | = தன்னிட கார்யத்தைச் செய்வதில் திறமையுள்ளதாகிறது. |

அவதரணிகை :— எக்குறியினுல் ஸத்வரஜஸ்தமோகுணங்களின் அதிகரித்தலை அறியவேண்டியதென்னும் சங்கைக்கு பதிலளிக்கிறுன் :—

(மூ)—ஸர்வத்(த்)வாரேஷு தே(ஹே)ஹேஸ்மின் ப்ரகாஶ உப
ஜாயதே ||
ஜ்ஞானம் யதா(ஹா) ததா(ஹா) வித்(த்)யாத் விவ்ருத்த(த்)ம்
ஸத்வமித்யுத || 11 ||

(ப. உ.) ஸர்வத்(த்)வாரேஷு, தே(ஹே)ஹே, அஸ்மின், ப்ரகாஶ:, உப ஜாயதே | ஜ்ஞானம், யதா(ஹா), ததா(ஹா), வித்(த்)யாத், விவ்ருத்த(த்)ம், ஸத்வம், இதி, உத ||

| | |
|---|---|
| அஸ்மின் | = இந்த |
| தே(ஹே)ஹே | = தேஹத்தில் |
| ஸர்வ- | = ஶ்ரோத்ராதி ஸகல |
| த்(த்)வாரேஷு | = இந்த்ரியங்களில் |
| ஜ்ஞானம் | = ஶப்தாதி ஞானரூபமான |
| ப்ரகாஶ: | = ப்ரகாசமும் |
| உத | = மற்றும் ஸுகாதிகளும் |
| யதா(ஹா) | = எக்காலத்தில் |
| உபஜாயதே | = உண்டாகிறதோ |
| ததா(ஹா) | = அக்காலத்தில் |
| ஸத்வம் | = ஸத்வ குணம் |
| விவ்ருத்த(த்)ம் | = அதிகரித்தது |
| இதி | = என்று |
| வித்(த்)யாத் | = அறிய வேண்டியது. |

(மூ)—லோப:(ஹ:)ப்ரவ்ருத்திராரம்ப:(ஹ:)கர்மணுமஶம: ஸ்ப்ருஹா ||
ரஜஸ்யேதானி ஜாயந்தே விவ்ருத்தே(த்யே) பரதர்ஷப || 12 ||

(ப. உ.) லோப:(ஹ:), ப்ரவ்ருத்தி:, ஆரம்ப:(ஹ:), கர்மணும், அஶம:, ஸ்ப்ருஹா | ரஜஸி, ஏதானி, ஜாயந்தே, விவ்ருத்தே(த்யே), ப(ஹ)ரதர்ஷப ||

| | |
|---|---|
| பரதர்ஷப | = ஓ அர்ஜுன ! |
| லோப:(ஹ:) | = பொருளீகையில் விருப்பமின்மை (பேராசை) |
| ப்ரவ்ருத்தி: | = ப்ரயோஜனத் |

| | |
|---|---|
| | தை எதிர்பாராமலே கார்யங்களில் ஒழிவற்று பிரவர்த்தித்தல் |
| கர்மணாம் | = காம்ய கர்மங்களை |
| ஆரம்ப: | = தொடங்குதல் |
| அஶம: | = மனதிற்கு உபரதியின்மை (விஷய போகம் போதுமென்கிற புத்தியின்மை) |
| ஸ்ப்ருஹா | = அடைவதற்கு முடியாதவைகளை விரும்புதல் |
| ஏதானி | = இவைகளெல்லாம் |
| ரஜஸி | = ரஜோகுணம் |
| விவ்ருத்தே(யே) ஸதி | = அதிகரித்திருக்கும்போது |
| ஜாயந்தே | = உண்டாகின்றன. (எனின் மேற்சொல்லிய கார்யங்களால் ரஜோ குணம் அதிகரித்திருக்கிறதென்று அறிய வேண்டும்) |

(மூ)—அப்ரகாஶோ ऽ ப்ரவ்ருத்திஶ்ச ப்ரமாதோ(தோ) மோஹ ஏவ ச ||
தமஸ்யேதானி ஜாயந்தே விவ்ருத்தே(யே) குருநந்தன || 13 ||

(ப. உ.) அப்ரகாஶ:, அப்ரவ்ருத்தி:, ச, ப்ரமாத:(த:), மோஹ:, ஏவ, ச | தமஸி, ஏதானி, ஜாயந்தே, விவ்ருத்தே(யே), குருநந்தன ||

| | |
|---|---|
| குருநந்தன | = குருகுலத்திற்கு ஆனந்தத்தைத் தரும் அர்ஜுன |
| அப்ரகாஶ: | = ஶ்ரோத்ராதிகளால் ஶப்தாதிகளின் அறிவின்மை |
| அப்ரவ்ருத்தி: | = செய்ய வேண்டிய கார்யங்களைச் செய்யாமல் ஸ்தம்பித்து நிற்றல் |
| ச | = மற்றும் |
| ப்ரமாத:(த:) | = கவனிக்காமை |
| மோஹ: | = விபரீத (மித்யா) ஜ்ஞானம் |
| ஏதானி | = இவைகள் |
| தமஸி | = தமோகுணம் |
| விவ்ருத்தே(யே) [ஸதி] ஏவ | = அதிகரித்திருக்கும்போதே |
| ஜாயந்தே | = உண்டாகின்றன. (எனின்—இக் குறிகளால் தமோ குணம் அதிகரித்திருக்கிறதென்று அறிய வேண்டும்.) |

அவதரணிகை :—ஸத்வாதி குணங்கள் அதிகரித்திருக்கும் ஸமயத்தில் மரணமடைந்தோருக்குக் கிடைக்கும் பலன்களின் பேதத்தைக் கூறுகிறான் :—

(மூ)—யதா(஦ா) ஸத்வே ப்ரவ்ருத்தே(த்யே) து ப்ரலயம் யாதி தே(தே)ஹப்ருத் ||
ததோ(தோ)த்தமவிதா(தா)ம் லோகானமலான் ப்ரதிபத்யதே || 14 ||

(ப. உ.) யதா(தா), ஸத்வே, ப்ரவ்ருத்தே(த்யே), து, ப்ரலயம், யாதி, தே(தே)ஹப்ருத், | ததா(தா), உத்தமவிதா(தா)ம், லோகான், அமலான், ப்ரதிபத்(தீ)யதே ||

| | |
|---|---|
| யதா(தா), து | = எக்காலத்தில் |
| ஸத்வே | = ஸத்வகுணம் |
| ப்ரவ்ருத்தே(த்யே) | = அதிகரித்திருக்குமோ (அக்காலத்தில்) |
| தே(தே)ஹப்ருத் | = ஜீவன் |
| ப்ரலயம் | = மரணத்தை |
| யாதி | = அடைகிறானோ |
| ததா(தா) | = அக்காலத்தில் |
| உத்தமவிதா(தா)ம் | = பகவத்ஜ்ஞானிகளின் (பகவஜ்ஞானிகளுடையும்) |
| அமலான் | = தோஷங்களையற்ற |
| லோகான் | = தேகங்களை |
| ப்ரதிபத்(தீ)யதே | = அடைகிறான். (ஸாத்விககுலத்தில் பிறக்கிறான்.) |

(மூ)—ரஜஸி ப்ரலயம் க(ம)த்வா கர்மஸங்கி(கி)ஷு ஜாயதே ||
ததா(யா) ப்ரலீனஸ்தமஸி மூட(ஐ)யோனிஷு ஜாயதே || 15 ||

(ப. உ.) ரஜஸி, ப்ரலயம், கத்வா, கர்ம-ஸங்கி(கி)ஷு, ஜாயதே | ததா(யா), ப்ரலீன:, தமஸி, மூட(ஐ)யோனிஷு, ஜாயதே ||

| | |
|---|---|
| ரஜஸி | = ரஜோகுணம் |
| [ப்ரவ்ருத்தே(த்யே) ஸதி] | = அதிகரித்திருக்கும்போது |
| ப்ரலயம் | = மரணத்தை |
| க(ம)த்வா | = அடைந்து |
| கர்ம- | = காம்ய கர்மங்களை |
| ஸங்கி(கி)ஷு | = செய்பவர்களின் குலத்தில் |
| ஜாயதே | = பிறக்கிறான். |
| ததா(யா) | = அவ்வாறே |
| தமஸி | = தமோகுணம் |
| [ப்ரவ்ருத்தே(த்யே) ஸதி] | = அதிகரித்தபோது |
| ப்ரலீன: | = மரணமடைந்தவன் |
| மூட(ஐ)யோனிஷு | = தைத்ய குலத்தில் |
| ஜாயதே | = பிறக்கிறான். |

அவதாரணிகை :—ஸத்வாதி கர்மங்களுக்கு பலங்களைச் சொல்லுகிறான் :—

(மூ)—கர்மண: ஸுக்ருதஸ்யாஹு: ஸாத்விகம் நிர்மலம் ப(ஃ)லம் ||
ரஜஸஸ்து ப(ஃ)லம் து:க்கமஜ்ஞானம் தமஸ: ப(ஃ)லம் || 16 ||

(ப. உ.) கர்மண:, ஸுக்ருதஸ்ய, ஆஹு:, ஸாத்விகம், நிர்மலம், ப(ஃ)லம் | ரஜஸ:, து, ப(ஃ)லம், து:க்கம், அஜ்ஞானம், தமஸ:, ப(ஃ)லம் ||

| | | | |
|---|---|---|---|
| ஸுக்ருதஸ்ய | = நன்றாய்ச் செய்யப்பட்ட | ஆஹு: | = சொல்லுகிறார்கள். |
| கர்மண: | = கர்மத்திற்கு | தமஸ: | = தாமஸ கர்மத்திற்கு |
| ஸாத்விகம் | = ஸாத்விகமான | அஜ்ஞானம் | = அஜ்ஞானத்தையும், அஜ்ஞான கார்யத்தையும் |
| நிர்மலம் | = து:க்கமற்ற | | |
| ப(ஃ)லம் | = பலத்தை | | |
| ஆஹு: | = சொல்லுகிறார்கள். | | |
| ரஜஸ:, து | = ராஜஸ கர்மத்திற்கோ | ப(ஃ)லம் இதி | = பலமென்று |
| து:க்கம் | = துக்கத்துடன் கூடிய | ஆஹு: | = சொல்லுகிறார்கள். |
| ப(ஃ)லம் | = பலத்தை | | |

அவதரணிகை :—மேற்கூறிய பலங்களை விவரித்துச்சொல்லுகிறான் :—

(மூ)—ஸத்வாத் ஸஞ்ஜாயதே ஜ்ஞானம் ரஜஸோ லோப(ஃ) ஏவ ச ||
ப்ரமாத(3)மோஹௌ தமஸோ ப(ஃ)வதோ ऽஜ்ஞானமேவ ச || 17 ||

(ப. உ.) ஸத்வாத், ஸஞ்ஜாயதே, ஜ்ஞானம், ரஜஸ:, லோப:(ஃ:), ஏவ, ச | ப்ரமாத(3)-மோஹௌ, தமஸ:, ப(ஃ)வத:, அஜ்ஞானம், ஏவ, ச ||

| | | | |
|---|---|---|---|
| ஸத்வாத் | = ஸத்வ குணத்தினின்று | தமஸ: | = தமோ குணத்தால் |
| ஜ்ஞானம் | = பராபர தத்வ ஜ்ஞானம் | ப்ரமாத(3)- | = அஜாக்ரதையும் |
| ஸஞ்ஜாயதே | = உண்டாகிறது. | மோஹௌ | = விபரீத ஜ்ஞானமும் |
| ச | = மற்றும் | | |
| ரஜஸ: | = ரஜோ குணத்தினின்று | ப(ஃ)வத: | = உண்டாகின்றன. |
| லோப:(ஃ:) ஏவ | = பேராசையே | அஜ்ஞானம், ஏவ | = அஜ்ஞானமும் |
| ஸஞ்ஜாயதே | = உண்டாகிறது. | ப(ஃ)வதி | = உண்டாகிறது. |
| | = மற்றும் | | |

